


# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY.

**Tuesday, the 17th February 1959.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at nine of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*Wellington Reservoir, Vridhachalam*

* 3 *S.N.Q.*—SRI M. SELVARAJ AND SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether the Government have received any representation from the Ayacatdars of Wellington Reservoir in Vridhachalam taluk (South Arcot) regarding the remission of taxes due to failure of water-supply; and

(b) if so, what action was taken thereon?

THE HON. SRI M. A. MANICKAVELU : (1) A representation has been received from the President of the Vridhachalam Taluk Congress Committee.

(2) The Collector of South Arcot and the Board of Revenue have sent proposals for the grant of special remission. The proposals are under consideration and orders will be issued shortly.

SRI A. GOVINDASAMY : ஸார், அந்தப் பகுதி மிகவும் பாதிக்கப் பட்டிருக்கிற காரணத்தால் பூரா வரி வஜா கொடுக்க அரசாங்கம் தகுந்த நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : " புல் ரெமிஷன் " தான்.

*Rest-house at Poompugar*

* 365 *Q.*—SRI K. B. S. MANI (on behalf of Sri C. Muthiah) : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

சீர்காழி பூம்புகாரில் (காவிரிப்பூம்பட்டிணம்) அரசாங்க விடுதி கட்ட உத்தேசம் உண்டா ?

THE HON. SRI P. KAKKAN : The question of constructing a two-roomed rest-house at Kaverippumpattinam has been examined by Government and it has been decided to defer the proposal in view of the financial stringency.

SRI K. B. S. MANI : ஸார், இந்த ரோடு கடந்த ஐந்தாண்டு திட்டத்திலேயே எடுத்துக்கொள்ளப்பட வேண்டும் என்று பலமுறை. . . .

THE HON. SRI P. KAKKAN : இந்தக் கேள்வி ரோடைப் பற்றியதல்ல, ரெஸ்ட் ஹவுஸைப் பற்றியது.

[17th February 1959

SRI K. B. S. MANI : இந்த இடத்தில் ஒரு ரெஸ்ட் ஹவுஸ் மிகவும் அவசியமாக இருப்பதால் அதை பவகு சீக்கிரம் அமைக்க அமைச்சர் நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI P. KAKKAN : நேற்று முன் தினம்தான் அந்தத் தாலுக்காவிற்குப் போனேன். அப்போது அங்கே அந்த ரெஸ்ட் ஹவுஸைப் பற்றிச் சொன்னார்கள். நமது நிதி நிலைமைக்குத் தக்கவாறு தான் ரெஸ்ட் ஹவுஸ்கள் கட்டப்பட்டு வருகின்றன. இப்போது அதிகப்படி பணம் இல்லாததால் " டெபர் " செய்திருக்கிறோம். இருந்தாலும் இதைப் பரிசீலனை செய்து பார்க்கலாம்.

*Manicka pangu sea-shore*

* 372 Q.—SRI K. B. S. MANI (on behalf of Sri C. Muthiah): கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா ?

(அ) மயூரம் தாலுக்கா, மாணிக்க பங்கு கடற்கரையைப் பலப்படுத்த திட்டம் ஏதேனும் உண்டா ?

(ஆ) அப்படியானால், எவ்வளவு தொகைக்கு எப்போது ஆரம்பிக்கப் படும் ?

THE HON. SRI P. KAKKAN : (a) Yes, Sir.

(b) Detailed plans and estimates for the work, which is estimated to cost Rs. 40,000 have been prepared and they are at present under the scrutiny of the Chief Engineer. Suitable action will be taken on receipt of plans and estimates from the Chief Engineer.

SRI K. B. S. MANI : ஸார், இதை எவ்வளவு குறுகிய காலத்திலே செய்யமுடியுமோ அவ்வளவு குறுகிய காலத்தில் செய்யமுடியுமா ? உத்தேசமாக எப்போது செய்து முடிக்கப்படும் என்று சொல்லமுடியுமா ?

THE HON. SRI P. KAKKAN : பிளான், எஸ்டிமேட் எல்லாம் வந்த பிறகு வெகு சீக்கிரம் செய்யப்படும்.

*Culverts*

* 378 Q. SRI P. G. MANICKAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கோயம்புத்தூர் ஜில்லா, பவானி தாலுக்காவிலே கவந்தபாடி-பவானி மெயின் ரோட்டிலே குறுக்கே பாய்ந்து செல்லுகின்ற மூன்று பள்ளங்களின் மேல் பாலங்களை (Culverts) கட்டுவதற்காகத் தொகை சாங்ஷன் செய்யப்பட்டிருக்கிறதா ?

(ஆ) இவ்வேலைகள் எப்போது ஆரம்பிக்கப்படும் ?

THE HON SRI P. KAKKAN : (a) & (b) These two works have been included in the Second Five-Year Plan and will be sanctioned and taken up for execution depending on the availability of funds.

SRI P. G. MANICKAM : ஸார், இரண்டு பள்ளங்கள் மீது கல்வெர்ட் போடுவது எடுத்துக்கொள்ளப்பட்டிருப்பதாக அமைச்சர் அவர்கள் தெரிவித்தார்கள். மூன்றாவதாக எடுக்கப்படவேண்டியது கவந்தபாடியில் இருக்கும் ஒரு பள்ளத்தின் மீது கல்வெர்ட் போடுவது. இது ஒரு முக்கியமான இடம். இங்கே சந்தை இருக்கிறது. வண்டிகள் சந்தைக்கு அந்த வழியாகப் போக வேண்டியிருக்கிறது. பவானிவாய்க்கால் தண்ணீர் அங்கே போவதால் வண்டிகள் போவதற்கு இடைஞ்சலாக இருப்பதால் இதற்குக் கூடிய சீக்கிரம் எஸ்டிமேட் போட்டு சீக்கிரம் எடுத்துக்கொள்ளத் தகுந்த நடவடிக்கை எடுக்கப்படுமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : அதை நான் கவனிக்கிறேன்.

17th February 1959]

*Subsidy to Harijans*

*395 Q.—SRI K. B. S. MANI (on behalf Sri M. C. Muthukumaraswamy) : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

ஹரிஜனங்களுக்குக் காளை மாட்டுக்காக மான்யத் தொகை கொடுக்கும் போது ரெவின்யூ டிபார்ட்மெண்டார் அத்தாட்சி பத்திரம் (Certificate) அளிப்பதற்குப் பதிலாக சம்பந்தப்பட்ட தொகுதி சட்டசபை உறுப்பினர்கள் அத்தாட்சி பத்திரத்தை அளிக்கலாமென உத்தரவு போட உத்தேசம் உண்டா ?

THE HON. SRI P. KAKKAN : Sir, there are already instructions to the effect that a certificate from an M.L.A. or M.P. may be produced by the applicant in support of his community when he claims subsidy for plough-bulls, etc.

SRI P. G. MANICKAM : ஸார், ஹரிஜனங்களுக்கு மாடுகள் வாங்கிக் கொடுக்கப்படும் இந்த மான்யத் தொகை தொடர்ந்தாற்போல் கொடுக்கப் படவேண்டுமென்பது அரசாங்கத்தார் நோக்கமா ? அரசாங்கத்தின் நோக்கம் என்ன என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : அதை நான் பின்னால் பார்த்துத்தான் சொல்ல வேண்டும்.

SRI A. GOVINDASAMY : ஸார், ஹரிஜனங்களுக்கு விவசாயத் திற்காக மாடு வாங்க அரசாங்கம் பணம் உதவுகிற நேரத்தில் குறைந்த அளவு தரப்படுகிறது. அதை மேலும் அதிகப்படுத்திக் கொடுக்க அரசாங்கம் அதிக நிதி ஒதுக்குவார்களா ?

THE HON. SRI P. KAKKAN : நிதி இருப்பதற்குத் தக்கபடிதான் ஒதுக்கி மாடு வாங்குவதற்குக் கொடுக்கப்படுகிறது.

SRI K. B. S. MANI : ஸார், இந்த அரசாங்கம் தற்போது கொடுத்துவருகிற உதவி மேன்மேலும் நன்மை கொடுக்க வேண்டுமானால், இதைச் சற்று முன்கூட்டியே கொடுக்க வகை செய்தால் மிகவும் நன்மையாக இருக்கும். அம்மாதிரி வருகிற ஆண்டில் கொடுப்பதற்கு அரசாங்கம் ஆவன செய்வார்களா ?

THE HON. SRI P. KAKKAN : எப்போது எவ்வளவு துரிதமாகக் கொடுக்க முடியுமோ அவ்வளவு துரிதமாகக் கொடுத்துக்கொண்டுவருகிறோம்.

*Nari Kuravars*

*400 Q.—SRI T. SAMPATH (on behalf of Sri V. Sankaran) : Will the Hon. the Minister for Public Works be pleased to state whether the Government propose to recognize "Nari Kuravars" as Adivasis or Scheduled Tribes and afford them all benefits and facilities granted to the latter?

THE HON. SRI P. KAKKAN : Yes, Sir.

SRI A. A. RASHEED : Has any action been taken to settle these "Nari Kuravars" in any particular area?

THE HON. SRI P. KAKKAN : We have done it.

SRI M. K. SOMASUNDARAM : ஸார், நரிக்குறவர்கள் ஹரிஜனங்களை விடக் கீழ்த்தரமான நிலைமையில் இருப்பதால் அவர்களை ஹரிஜனங்கள் லிஸ்டில் சேர்த்து அவர்கள் முன்னேற்றத்திற்கு நடவடிக்கைகள் எடுக்கப் படுமா ?

[17th February 1959

**The Hon. Sri P. KAKKAN:** நான் முதலில் சொன்ன பதிலிலேயே அதைத் தான் சொன்னேன். அவர்களை ஆதிவாசிகள் லிஸ்டில் சேர்த்து ஆதிவாசிகளுக்கு என்னென்ன சலுகைகள் கொடுக்கப்படுகின்றனவோ அந்தச் சலுகைகளெல்லாம் கொடுக்கப்பட்டுவருகின்றன.

**Sri K. VINAYAKAM:** இந்த நரிக்குறவர்களை ஆதிவாசிகளாகச் சேர்த்துவிட்டதன் பயனாக யாராவது இது வரையில் எந்தப் பயனையாவது அடைந்ததுண்டா ? அவர்களின் எண்ணிக்கை, பெயர்கள் இவைகளை மந்திரி அவர்கள் தெரிவிக்க முடியுமா ?

**The Hon. Sri P. KAKKAN:** இப்போது சில இடங்களில் வீடு கட்டிக் கொடுத்திருக்கிறோம். நில ஆர்ஜிதம் செய்து கொடுத்திருக்கிறோம். ஹாஸ்டல்கள் கட்டிக் கொடுத்திருக்கிறோம். கனம அங்கத்தினர் அவர்கள் அனேக விஷயங்கள் தெரிந்துகொள்ள ஆசைப்படுகிறார். இதற்குத் தனி கேள்வி போட்டால் நான் பதில் சொல்கிறேன்.

**Sri K. SATTANATHA KARAYALAR:** நரிக்குறவர்கள், குருவிக்குறவர்கள் போன்ற நாடோடி மக்களின் வாழ்க்கையைப் பற்றி திரு ஜே. எல். பி. லூயி என்ற ஒருவர் மத்திய சர்க்காரின் மான்யம் பெற்று ராமநாதபுரம், மதுரை மாவட்டங்களில் இந்த மக்களின் வாழ்க்கையைப் பரிசீலனை செய்து ஒரு அறிக்கை வெளியிட்டிருப்பது நமது சர்க்காருக்குத் தெரியுமா ? இதைப் பற்றி மத்திய சர்க்காரிடமிருந்து நமது சர்க்காருக்கு தகவல் கிடைத்திருக்கிறதா ?

**The Hon. Sri P. KAKKAN:** இது சர்க்காருக்குத் தெரியும். இதைப் பற்றி விசாரிக்க வேண்டுமென்று கள்ளர் ரெக்ளமேஷனுக்கென்று ஏற்படுத்தப்பட்டுள்ள டெபுடி கலெக்டரை அனுப்பி அதைப் பரிசீலனை செய்ய ஏற்பாடு செய்து வருகிறோம்.

### *Block Development Officers*

* 401 *Q.*—**Sri K. SATTANATHA KARAYALAR:** Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) the number of Block Development Officers recruited in 1957–58; and

(*b*) the basis on which such recruitment was made?

**The Hon. Sri C. SUBRAMANIAM:** (*a*) Eighty-eight in 1957. Fifty in 1958.

(*b*) A Selection Committee consisting of Development Commisisoner, Additional Development Commissioner and Joint Development Commissioner, has been been constituted for the purpose of selecting candidates for appointment to the post of Block Development Officer. Whenever vacancies arise in the post of non-gazetted Block Development Officers certain heads of departments connected with the Development work and the Collectors of districts are requested to suggest names of suitable candidates for appointment as Block Development Officers. The candidates so recommended are interviewed by the Selection Committee and selected on merit. The names of candidates selected by the Committee are approved by the Government. After approval, the selected candidates are posted as non-gazetted Block Development Officers.

[7th February 1959]

**Sri K. SATTANATHA KARAYALAR:** இவர்கள் எல்லாம் டிபார்ட்மெண்டிலிருந்து எடுக்கப்பட்டவர்கள்தானா ? அல்லது வெளியிலிருந்து எடுக்கப்பட்டார்களா ? அப்படியானால், இனியாவது இவர்களுடைய ரெக்ரூட்மெண்ட் பப்ளிக் ஸர்வீஸ் கமிஷனுக்கு விடப்படுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** இவர்களெல்லாம் டிபார்ட்மெண்டிலிருந்து எடுக்கப்பட்டவர்கள். ஆகையால்தான் இதை பப்ளிக் ஸர்வீஸ் கமிஷனுக்கு விடவில்லை.

**Sri K. PERIANNAN:** வட்டார அபிவிருத்தி அதிகாரிகளாகப் போடும்போது சரியான பயிற்சிபெறாத அதிகாரிகளாகப் போடுவதினால், அவர்களை மறுபடியும் பயிற்சிக்கு அனுப்ப வேண்டியிருக்கிறது. அதனால் அபிவிருத்தி வேலை நடைபெறுவதற்கு ரொம்பக் கஷ்டமாகப் போய்விடுகிறது. இப்படிப்பட்ட முறை இருப்பதினால் ப்ளாக்குகளில் சரியாக வேலை நடைபெறவில்லை என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** சில சமயங்களில் அபாய்ண்ட்மெண்ட் ஆனதற்குப் பிறபாடு தான் அவர்களை ட்ரெயினுங்குக்கு அனுப்ப வேண்டியதாக இருக்கிறது, இது தவிர்க்க முடியாதது.

**Sri A. GOVINDASAMY :** ப்ளாக் டெவலப்மெண்ட் அதிகாரிகளாகப் போட்டப்பட்டிருப்பவர்களில் சிலர் கெஜட் பதிவுள்ளவர்களாக இருக்கிறார்கள். இன்னும் சிலர் கெஜட் பதிவு இல்லாதவர்களாக இருக்கிறார்கள். கெஜட் பதிவுள்ள அதிகாரிகள் இருக்கும் இடங்களில் அதிக வேலையும், கெஜட் பதிவில்லாத அதிகாரிகள் போடப்பட்டிருக்கும் இடங்களில் குறைந்த வேலையும் நடைபெற்றிருப்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** கெஜட பதிவு ஆன உடனேயே வேலை அதிகம் ஆகிவிடும் என்று நினைப்பது தவறு. அது அந்தந்த ஆபீஸருடைய தகுதியைப் பொறுத்திருக்கிறது. கெஜட் பதிவு உள்ள அதிகாரிகள் இருக்கும் இடங்களிலும் நல்ல காரியங்கள் நடந்திருக்கின்றன. கெஜட் பதிவு இல்லாதவர்கள் இருக்கும் இடங்களிலும் நல்ல காரியம் நடந்த பகுதிகள் இருக்கின்றன.

**Sri K. SATTANATHA KARAYALAR :** இவர்களுடைய ரெக்ரூட்மெண்ட் மெரிட் அடிப்படையில் மட்டுந்தானா ? அல்லது பாக்வார்டு கம்யூனிடி, ஷெட்யூல் காஸ்ட் இதற்கெல்லாம் சில மார்க்குகள் கொடுக்கப்படுகின்றனவா ? அப்படியானால், பப்ளிக் ஸர்வீஸ் கமிஷன் மூலமாக ரெக்ரூட்மெண்ட் நடக்கும்போது அனுசரிக்கப்படுகின்ற முறைகளை இங்கும் அனுசரிக்கப்படுகின்றனவா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** அம்மாதிரி குறிப்பிட்ட விதிகள் கிடையாது. இத்தனை ஷெட்யூல் காஸ்டுக்கும் இத்தனை பாக்வார்டு கம்யூனிடிக்கு என்று. ஆனால், அவர்களுக்கு பிரதிநிதித்துவம் கொடுக்கப்படவேண்டும் என்ற முறையிலே, மற்ற தகுதி இருக்குமானால், அவர்களுக்கு முதல் இடம் கொடுக்கப்படுகிறது.

**Sri P. G. MANICKAM :** பப்ளிக் ஒர்க்ஸ் டிபார்ட்மெண்டிலேயிருந்து ப்ளாக் டெவலெப்மெண்ட் அதிகாரிகளாக எடுக்கப்படுவதில்லை என்று குறை இருக்கிறது என்பது சர்க்காருக்குத் தெரியுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** பப்ளிக் ஒர்க்ஸ் டிபார்ட்மெண்டிலே வேலை செய்வதற்கே போதுமான இன்ஜினியர்கள் இல்லாத நிலையில், அந்த இலாகாவிலே உள்ளவர்களை ப்ளாக் டெவலெப்மெண்டு அதிகாரிகளாக அனுப்புவது கஷ்டமாக இருக்கும். மேலும், இன்ஜினியர்கள் ப்ளாக் டெவலெப்மெண்டு அதிகாரிகளாக இருக்க வேண்டிய அவசியம் இல்லை.

[17th February 1959

SRI V. K. KOTHANDARAMAN : சர்வீஸ் கமிஷன் மூலமாக அல்லாமல் நேரடியாக இவர்களை எடுப்பதினுடைய நோக்கம்—இன்றைய தினம் காங்கிரஸ் கட்சியினுடைய ஒரு பிரசாரத்தைப் பலப்படுத்த வேண்டும் என்ற நோக்கத்தோடு நேரடியாக எடுக்கப்படுகிறார்களா ? சர்வீஸ் கமிஷன் மூலமாக அல்லாமல் எந்த நோக்கத்தோடு எடுக்கப்படுகிறார்கள் ? இப்பொழுது எடுத்திருக்கக் கூடியவர்களை விட நீண்ட ஆண்டு காலமாக சர்வீஸ் அதிகப்படியாகச் செய்திருந்தவர்களை எடுக்காமல், கிராம சேவக்குகளாக இருந்தவர்களை நேரடியாக எடுத்திருக்கிறார்கள் என்று சொன்னால், அதறகுக் காரணம் என்ன ? என்ன நோக்கத்தோடு அப்படி எடுக்கப்பட்டு வருகிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் அங்கத்தினருடைய மூளை இந்த முறையில்தான் எல்லா விஷயங்களிலும் இயங்கிவருகிறது என்பதைப் பார்க்கிறேன். எதை யெடுத்தாலும், கட்சிப் பிரசாரத்திற்காகச் செய்யப்படுகிறதா ? கட்சி அடிப்படையிலே செய்யப்படுகிறதா ? என்று கேட்கிறார். அவருடைய கட்சியிலே இயங்கிவருவதை மனதிலே கொண்டு அவர் அப்படிப் பேசுகிறார் என்று நினைக்கிறேன். தங்களுடைய கட்சியார் எப்படி இயங்குவார்கள் என்பதை மனதிலே வைத்து, அப்படித்தான் மற்றக் கட்சிகளும் இயங்கும் என்ற முறையிலே கேள்விகளைக் கேட்கிறார் என்று நினைக்கிறேன். கட்சி அடிப்படையிலே இது நடப்பதில்லை. அரசாங்க உத்தியோகஸ்தர்களாக இருக்கிறவர்கள் எந்த அரசியலிலும் கலந்து கொள்ளக்கூடாது. அவர்களுக்கும் அரசியலுக்கும் சம்பந்தம் இருக்கமுடியாது. ஏதோ வெளியிலே இருக்கிற காங்கிரஸ்காரர்களை எடுப்பதில்லை, அரசாங்க இலாக்காக்களிலே ஊழியம் செய்து வருகின்றவர்களிலிருந்து எடுக்கின்ற காரணத்தாலே கட்சி பிரதி கட்சி எழுவது இல்லை.

*Licences for the use of loud-speakers*

*402 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether any licences were issued for the use of loud-speakers for long periods at the premises of the Brahmans Vaideeka Sabha in Chitrakulam North street in Mylapore, Madras, for religious discourses;

(*b*) if so, whether any objections thereto were received from neighbours; and

(*c*) the action taken thereon?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) Yes, Sir.

(*c*) The Police authorities inspected the place and found that the objections raised were untenable.

SRI K. SATTANATHA KARAYALAR : பொறுப்புவாய்ந்த ஒரு உத்தியோகஸ்தராக இருந்தவர் கொடுத்திருக்கும் கம்ப்ளெய்ண்டுகளை எந்த அளவு அரசாங்கம் பரிசீலனை செய்து பார்த்தது ? அண்மையிலே நெருக்கமாக வீடுகள் இருப்பதினால், ரெஸிடென்ஷியல் க்வார்ட்டர்ஸ் நெருக்கமாக உள்ள இடங்களில் வசிப்பவர்களுக்கு ப்ரொடக்ஷன் கொடுக்காமலிருப்பது நல்லதா ? ஒலி பெருக்கி உபயோகிப்பதற்கு லைசென்ஸ் கொடுப்பதற்கு முன்னால், அருகாமையில் வீடுகளில் இருப்பவர்களுக்கு தொந்தரவு ஏற்படா வண்ணம் லைசென்ஸ் கொடுக்கப்படவேண்டும் அல்லவா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : குறிப்பிட்ட மணி நேரத்திலேதான் இம்மாதிரி ஒலிபெருக்கியை உபயோகிக்கலாம். அதற்குப் பின்னால் உபயோகிக்கக்கூடாது என்று விதிகள் பிறப்பிக்கப்பட்டிருக்கின்றன.

17th February 1959]

இந்தக் குறிப்பிட்ட மணி நேரத்திற்குள்ளே ஒலிபெருக்கி உபயோகப்படுத்துவதற்காக சென்னையிலுள்ள போலீசாரிடமிருந்து லைசென்ஸ் கேட்டு வாங்குகிறார்கள். இந்த விஷயத்திலே ஆட்சேபம் வந்தது. யார் ஆட்சேபித்தாலும், அந்த ஆட்சேபம் பரிசீலனை செய்யப்பட வேண்டும் என்ற முறையில் ஆட்சேபம் வந்ததும் ஒரு 'போலீஸ் இன்ஸ்பெக்டரும், அவருக்குமேலே ஒரு அஸிஸ்டெண்ட் கமிஷனரும், அவருக்குமேலே டெபுடி கமிஷனரும், அவருக்குமேலே போலீஸ் கமிஷனரும், அவருக்கும் மேலே உள்நாட்டி லாகா காரியதரிசியும் இவர்களெல்லாம் ஒவ்வொருவராகப் போய் பார்த்தார்கள். "ஏதோ மத சம்பந்தமான பிரசாரம், பிரசங்கம் அங்கே ஒலிபெருக்கிமூலம் நடக்கிறது, ஆட்சேபணைக்குக் கொஞ்சங்கூட ஆதாரம் இல்லை" என்று அவர்களெல்லோரும் கண்டு, ஆட்சேபணையை ஏற்றுக் கொள்ளவில்லை. குறிப்பிட்ட சில நாட்களுக்குத்தான் அப்போதைக்கப்போது லைசென்ஸ் கேட்கின்றார்கள். லைசென்ஸ் வழங்கப்பட்டது. ஆனால், அதற்குப் பிறகு லைசன்ஸ் கேட்கவில்லை.

SRI A. A. RASHEED : May I know the type of religious instruction given through these loud-speakers?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I have no idea about the religious topics for which the loud-speaker was asked for.

SRI K. VINAYAKAM : Are the Government aware that such of the persons as object to the installation of loud-speakers in the Vaideeka Sabha are people who belong to the atheist class and are opposed to religious discourses?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I do not think so. The sponsors of these discourses as well as the objectors are equally orthodox.

SRI A. GOVINDASAMY : மார்கழி மாதத்தில் அதிகாலை இரண்டு மூன்று மணிக்கெல்லாம் "தூங்காதே தம்பி தூங்காதே" என்ற கிராமபோன் ப்ளேட்டுகளைக் கோயில்களிலெல்லாம் வைப்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா? இதற்கெல்லாம் கூட லைசன்ஸ் வாங்கியிருக்க வேண்டுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : "தூங்காதே தம்பி தூங்காதே" என்னும் ப்ளேட் கோயில்களிலே வைக்கிறதில்லை என்று நிச்சயமாகச் சொல்லலாம். ஆனால், "திருப்பாவை-திருவெம்பாவை" ப்ளேட் வைக்கிறார்கள். அது கூட விடியற்காலை ஐந்து மணிக்கு மேலே வைக்கப்படுகிறது. ஐந்து மணிக்குமேலே வைக்கும்போது கூட தூக்கம் கெட்டுப் போகிறது என்று சொன்னால், அதை நான் ஏற்க முடியாது.

SRI K. SATTANATHA KARAYALAR : இந்த சபை வைத்திருக்கக் கூடிய கட்டிடம் ரெஸிடென்ஷியல் க்வார்ட்டர்ஸ் அல்லவா? அப்படியிருக்க, அதை ஒரு சபை கூடமாக மாற்றுவதற்கு சர்க்காரிடம் ஏதாவது பர்மிஷன் கேட்டார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது ஒன்றும் இண்டஸ்ட்ரியல் வேலை அல்ல. கைத் தொழில்சாலை வைக்க வேண்டுமானால், அதற்கு டவுன் ப்ளானிங் கட்டு திட்டங்களெல்லாம் இருக்கிறது. ஏதோ ஒரு கட்டிடம். அந்தக் கட்டிடத்தில் பத்து பேர் சேர்ந்து ஏதோ பேசுகிறார்கள், அதற்கு ஒலிபெருக்கி வைத்திருக்கிறது. ஆகவே, ரெஸிடென்ஷியல் ஏரியாவா, இண்டஸ்ட்ரியல் ஏரியாவா என்ற பிரச்னை இதில் வருவதில்லை. உள்ளே நடப்பதினால் ஏற்படும் சப்தம் வெளியே இருக்கிறவர்களுக்குக் கேட்கவில்லை என்று அங்கே போய் பார்த்தவர்கள்—நம்முடைய உள்நாட்டுக் காரியதரிசி முதற்கொண்டு சொல்கிறார்கள்.

[17th February 1959

SRI K. PONNIAN : தலைவர் அவர்களே, வால்பாறை பிரதேசத்தில் ஆயிரக்கணக்கான வக்கர்களை எஸ்டேட்டாக வைத்துக்கொண்டு அதில் வாழும் தொழில் மக்களுக்கு ஒரு பொதுக்கூட்டம் நடத்தவோ அல்லது வேறு நல்ல காரியங்கள் இதுபோல் நடத்தவோ ஒலிபெருக்கி லைசென்ஸ் கேட்டால், மறுக்கப்படுகிறது என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ?

MR. SPEAKER : இதற்கும் அதற்கும் சம்பந்தம் இல்லை.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது.

*Selection of books for non-detailed study*

* 403 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) whether the book " எனது குறிக்கோள் " has been prescribed for non-detailed study in higher forms for the year 1958;

(b) whether the Government have given any instructions to the Text Book Committee to select such books which contain certain principles; and

(c) if so, the principles adopted by the Text Book Committee in selecting books?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) No. Sir.

(b) & (c) The attention of the Member is invited to the rules relating to the Text Book Committee published as Notification No. 11 on pages 25–33 of the Rules Supplement to Part I-B of the *Fort St. George Gazette*, dated 16th June 1954. The Government do not issue any instructions in regard to any particular book or books.

SRI N. K. PALANISAMI : சர்க்கார் நிர்ணயிருத்திருக்கும் கொள்கைக்கும் அல்லது தப்பிதமாகவும் அந்த புஸ்தகம் இருந்தால், பப்ளிஷ் செய்தால், அதைத் தடுப்பதற்கும் டெக்ஸ்ட் புக் கமிட்டிக்கோ ; டிபார்ட்மெண்டுக்கோ அதிகாரம் இருக்கிறதா ?

MR. SPEAKER : Is it not a hypothetical question since it contains " இருந்தால், செய்தால் " ? How can the Government answer it? But I would have no objection if the Hon. Minister is going to answer.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் அங்கத்தினர் திரு. பழனிசாமி அவர்கள் கேட்டிருப்பது " எனது குறிக்கோள் " என்ற புஸ்தகத்தைப் பற்றி. எனக்குக் கிடைத்திருக்கும் தகவலில் இது வரையில் இம்மாதிரி புஸ்தகம் டெக்ஸ்ட் புக் கமிட்டியாருடைய கவனத்திற்குக் கொண்டுவரப்படவில்லை என்பது. இதுபற்றி அவர்கள் பரிசீலனை செய்யவில்லை.

*Cattle Trespass Act*

* 404 Q.—SRI A. VEDARATHNAM : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) கட்டுப்பாடின்றி திரியும் கால்நடைகளைக் கட்டுப்படுத்த அரசாங்கம் ஏதேனும் கடுமையாக நடவடிக்கை எடுக்க உத்தேசமுண்டா ?

(ஆ) அப்படியானால், அதன் விபரமென்ன ?

(இ) Cattle Trespass சட்டத்தை மாகாணம் முழுவதும் அமுலுக்குக் கொண்டு வர ஏதேனும் உத்தேசமுண்டா ?

[17th February 1959]

THE HON. SRI M. A. MANICKAVELU : & (ஆ) The Cattle Trespass Act, 1871, is being enforced to control straying cattle.

(இ) The above Act which is a Central Act is alerady in force in the Madras State except in the transferred areas where the Travancore-Cochin Cattle Trespass Act, 1125, is in force. It is proposed to extend the Cattle Trespass Act, 1871, to the transferred territory and repeal the Travancore-Cochin Cattle Trespass Act in force there now.

SRI A. VEDARATHNAM : விவசாய வளர்ச்சி, வனமகோற்சவம் பற்றியெல்லாம் பிரசாரம் செய்து, அந்தத் துறையிலே அதிக அபிவிருத்தியை எதிர்ப்பார்க்கின்ற நாம், கட்டுப்பாடின்றித் திரிகின்ற இந்தக் கால் நடைகளை சும்மா விடுவதினாலே விவசாயத்திற்கும் மரம் நடு விழாவில் நடுகின்ற மரங்களுக்கும் ஊன்விளைகின்ற காரணத்தால், கடுமையான நடவடிக்கை எடுத்து, கட்டுப்பாடின்றித் திரிகின்ற கால் நடைகளைக் கட்டுப் படுத்துவதற்கு அரசாங்கம் முன்வருமா ? இப்பொழுதிருக்கும் சட்டத்தின் பிரகாரம் தனியாகக் கம்ப்ளெயின்ட் கொடுத்து, எவிடென்ஸ் எடுத்து நிரூபிக்கவேண்டிய பொறுப்பு விவசாயிகளுக்கு ஏற்படுகிறது. அப்படி யின்றி, பவுண்டில் அடைக்கப்படும் மாடுகளுக்கெல்லாம் சட்டத்தில் கண்ட அபராதம் விதிக்க அரசாங்கம் வகை செய்யுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்தச் சட்டத்தை இன்னும் தீவிரமாக அமுலுக்குக் கொண்டுவரும் விஷயம் பரிசீலனையில் இருக்கிறது. இதிலே இன்னொரு கஷ்டம் என்னவென்றால், கட்டுப்பாட்டில் இருக்கும் கால் நடையை அதனுடைய சொந்தக்காரர்கள் அவிழ்த்து விட்டு மற்றவர்கள் நிலத்தில் மேயட்டுமே என்று விட்டுவிடுகிறார்கள்.

SRI K. PONNIAN : நமது நாட்டில் விவசாயத்திற்கு கால்நடை செல்வம் தான் நமக்கு அதிகமாக வேண்டியதாக இருக்கிறது. அதற்கு முதலிடம் கொடுக்கப்பட்டு வருவதால் மலை அடிவாரங்களில் கால் நடைகளை மேய்ப்பதற்கு சர்க்கார் அனுமதிக்குமா என்பதை அறிய விரும்பு கிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்பொழுது கேட்கப்பட்டி ருக்கும் விஷயம் வேறு, கனம் அங்கத்தினர் கேட்கும் விஷயம் வேறு.

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware that cows belonging to certain temples roam freely in the city streets causing obstruction to motorists and road users and, if so, what action has been taken to prevent this?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir, it is not cow, it is the bull that is dedicated to the Gods. (Laughter.)

SRI K. B. S. MANI : சுயேச்சையாக திரியும் கால்நடைகளை ஓட்டிக் கொண்டு போய் பவுண்டுகளில் அடைத்தாலும் அவைகளை விவசாயிகள் மீட்டுக்கொண்டு வந்த பிறகு அவைகள் மறுபடியும் விவசாயத் திற்கும் மற்றப்படியும் தொந்தரவு கொடுக்கின்றன. அதனால் தஞ்சை வட ஆற்காடு முதலிய ஜில்லாக்களில் பல லாரி, கார், விபத்துக்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஏனென்றால் அவைகள் மீண்டும் வெளியில் வந்து கண்டபடியெல்லாம் ரோடுகளிலும் மெயின் ரஸ்தாக்களிலும் திரிகின்றன. ஆகவே இப்படிப்பட்ட தொல்லைகள் ஏற்படா வண்ணம் சர்க்கார் அதில் தலையிட்டு அதற்கு வேண்டிய நடவடிக்கைகளை போலீஸைக்கொண்டு எடுப் பதற்கு முயற்சிக்குமா ?

[17th February 1959

THE HON. SRI M. A. MANICKAVELU : இதைத்தான் நான் முன்னமே சொன்னேன். இந்த திட்டத்தை இன்னும் தீவிரமாக அமுலுக்குக் கொண்டு வருவதற்கு என்ன நடவடிக்கை எடுக்க வேண்டும் என்பது பரிசீலனையில் இருக்கிறது என்றும் சொன்னேன்.

### *Hydrographic survey*

* 405 Q.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(a) whether any hydrographic survey was made recently;

(b) if so, what are the findings; and

(c) if not, whether there is any programme for hydrographic survey?

THE HON. SRI P. KAKKAN : (a) Yes, Sir. Hydrographic surveys of Cuddalore Port, Nagapattinam Road-stead and Tuticorin Port have been carried out by the Hydrographic Department, Indian Navy, between March 1955 and February 1958.

(b) While only a draft survey plan of the Cuddalore Port has been received by the Port authorities, the charts for the Nagapattinam and Tuticorin ports are still awaited.

(c) A survey of the Pamban Pass has been recommended, but in view of the dearth of survey vessels with the Indian Navy, this work has been assigned only a low priority by the authorities at the Centre.

SRI K. SATTANATHA KARAYALAR : கொளச்சல், லீபுரம், கன்யாகுமரி போன்ற கன்யாகுமரி மாவட்டத்தில் பழைய காலத்திய துறைமுகம் இருக்கிறது. அந்தத் துறைமுகத்தை நல்ல நவீன முறையில் அமைப்பதற்கும் இந்த சர்க்கார் மத்திய அரசாங்கத்திற்கு சிபாரிசு செய்யுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : அந்தத் தகவல் என்னிடம் இல்லை. தனியான கேள்வி போட்டால் பதில் சொல்லுகிறேன்.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : எக்ஸ்பிரஸ் பஸ்கள்...

MR. SPEAKER : அது அடுத்த கேள்வி.

SRI A. GOVINDASAMY : கடலூர் துறைமுகத்தை எந்த முறையில் விஸ்தரிக்கலாம் என்று சர்வே செய்தவர்கள் சிபாரிசு செய்திருக்கிறார்கள் என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : அந்தத் தகவல் இப்பொழுது என்னிடம் இல்லை. தனியாகக் கேள்வி கேட்க வேண்டும்.

SRI N. MARUDACHALAM : கோவை ஜில்லாவில் மேற்கு தொடர்ச்சி மலையிலுள்ள வெள்ளியங்கிரியில் ஒரு நீர்வீழ்ச்சி ஏற்பட்டிருக்கிறது. அதைப்பற்றி ஏதாவது பரிசீலனை செய்யப்பட்டதா என்பதை அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : இந்தக் கேள்வி எப்படி எழும் ?

THE HON. SRI P. KAKKAN : இது அந்தக் கேள்விக்கு சம்பந்தப்பட்டது இல்லை.

### *Express buses*

* 406 *Q.*—Sri K. SATTANATHA KARAYALAR: Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) the various routes in which Express Buses are plying at present; and

(*b*) the new Express routes to be opened soon?

The Hon. Sri V. RAMAIAH: (*a*) & (*b*) A statement[a] furnishing the particulars is placed on the table of the House.

Sri K. SATTANATHA KARAYALAR: இதில் தற்போது உள்ள ரூட்டுகள் மாத்திரம்தான் இருக்கிறது. ப்ரபோஸ்ட் ரூட்டுகள் அதாவது புதியதாக எந்த ரோடுகளில் எல்லாம் எக்ஸ்ப்ரஸ் பஸ்களை அமைக்கப் போகிறார்கள் என்பதை அறிய விரும்புகிறேன். இந்தக் கேள்வி என்னுடைய முதல் கேள்வியிலேயே இருக்கிறது.

The Hon. Sri V. RAMAIAH: புது ரூட்டுகளைப் பொருத்த வரையில் எப்பொழுதெல்லாம் கோரிக்கைகள் வருகின்றனவோ அப்பொழுதெல்லாம் உடனடியாகக் கவனிக்கப்பட்டு வருகிறது. எந்தெந்த ரூட்டுகளில் உடனடியாக ஆரம்பம் செய்ய வேண்டும் என்றெல்லாம் கேட்கப்படுகிறதோ அங்கேயெல்லாம் நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டு வருகிறது. என்னென்ன ரூட்டுகள் ப்ரபோசலில் இருக்கின்றன என்று சொல்வது கொஞ்சம் கஷ்டம்.

Sri K. SATTANATHA KARAYALAR: சென்னையிலிருந்து வேடந்தாங்கல், திருநெல்வேலியிலிருந்து திருவனந்தபுரம் வரையில் எக்ஸ்ப்ரஸ் பஸ் ரூட்டுகள் வேண்டுமென்று யாராவது சர்க்காரிடம் கோரியிருக்கிறார்களா, அந்த விஷயம் இப்பொழுது எந்த அளவில் கவனிக்கப்பட்டிருக்கிறது ?

The Hon. Sri V. RAMAIAH: இது போன்ற கோரிக்கைகள் என்னுடைய கவனத்திற்குக் கொண்டு வரப்படவில்லை. மேலும் சென்னையிலிருந்து வேடந்தாங்கலுக்கு எக்ஸ்ப்ரஸ் பஸ் ரூட் அவசியம் என்று நான் கருதவில்லை.

Sri M. R. KANDASWAMI MUDALIYAR: சேலத்திலிருந்து சென்னைக்கும், சேலத்திலிருந்து பெங்களூருக்கும் எக்ஸ்ப்ரஸ் பஸ் ரூட்டுகள் வேண்டும் என்று ஏதாவது விண்ணப்பங்கள் வந்திருக்கின்றனவா ? அப்படி இல்லையென்றால் ரயில்வே நெருக்கடியைத் தவிர்ப்பதற்கு அங்கே எக்ஸ்ப்ரஸ் பஸ்களை விட சர்க்காரிடத்தில் ஏதாவது உத்தேசம் இருக்கிறதா ?

The Hon. Sri V. RAMAIAH: ரயில்வே நெருக்கடியை தவிர்க்க மட்டும் அல்ல, பிரயாணிகளுக்கு வசதிகளைச் செய்து கொடுக்கும் முறையில் எக்ஸ்ப்ரஸ் ரூட்டுகள் அதிகமாக போட வேண்டுமென்பதுதான் அரசாங்கத்தின் உத்தேசம். அது பரிசீலனையில் இருக்கிறது. ரூட்டுகளுக்குத் தக்கபடி ரூட்டுகளை எப்படி பரிசீலனை செய்து பார்க்க வேண்டுமோ அதைப் பார்த்தும் வரப்படுகிறது. ஒவ்வொரு அங்கத்தினரையும் திருப்தி பண்ண வேண்டும் என்ற முறையில் இருந்தால் அதனால் கஷ்டம் ஏற்படும்.

Sri P. S. SANTHANAM: செங்கத்திலிருந்து சென்னைக்கு வருவதற்கு துரிதமான பஸ்களை விடுவதற்கு கவனிக்கப்படுமா ? இது சம்பந்தமாக பச்சையப்பன் பஸ் சர்வீஸ், வி.டி.எஸ். பஸ் சர்வீஸ், திருமலை பஸ் சர்வீஸ் முதலியவர்களிடமிருந்து ஏதாவது மனுக்கள் வந்திருக்கின்றனவா ? அவர்களில் யாருக்குக் கொடுக்க உத்தேசம் ?

Mr. SPEAKER: The question is out of order.

---

[a] Printed as Appendix I on pages 162–163 infra.

[17th February 1959

SRIMATHI T. N. ANANDANAYAKI : எக்ஸ்ப்ரஸ் ரூட்டுகளை சாதாரண மாக வழங்குவதாக இருந்தால் 75 மைலுக்கு மேற்பட்டு பஸ்களை விடக் கூடிய ப்ளீட் ஆளர்களுக்குத்தான் கொடுக்கப்படும் என்று ஒரு ஜி.ஓ. இருக்கிறது. அப்படி கொடுப்பதால் ப்ளீட் ஆளர்களுடைய கையைத் தான் பலப்படுத்துவதாகும். அதனால் இப்பொழுது ஜி.ஓ.-வை திருத்தி தனிப்பட்டவர்கள் எல்லோருக்கும் கொடுக்க முடியுமா என்பதை விரும்பு கிறேன்.

THE HON. SRI V. RAMAIAH : அந்த ஜி.ஓ.-வை திருத்த வேண்டிய அவசியம் இல்லை. அப்படி ஜி.ஓ. ஒன்றும் இல்லை. 75 மைலுக்கு அதிகமாக ரூட்டுகளைக் கொடுக்க எந்த விதமான நிபந்தனை யும் இல்லை. யாருக்கு வேண்டுமானாலும் கொடுக்கலாம். யார் திறமை யாக நடத்த முடியும் என்று ஆர்.டி.ஓ. கருதுகிறாரோ அவருக்கு அந்த ரூட்டைக் கொடுக்கலாம்.

SRI K. VINAYAKAM : What are the salient features of the express bus service? Do they enjoy better facilities than the ordinary services like toilet facilities, radio music and good cushioned seats?

THE HON. SRI V. RAMAIAH : I may assure that these express buses provide better facilities such as washing facilities, drinking water facilities, etc. More than all that it is the speed at which the buses that appeals to the public. Regarding radio music, I can say that we have prohibited this in the express as well as the local bus services.

SRI M. RAMACHANDRA REDDI : ரயில் மார்க்கங்கள் அல்லாத தாலூகா ஹெட் க்வார்டர்களிலிருந்து மதராசுக்கு எக்ஸ்ப்ரஸ் பஸ் விடுவதை ஒரு கொள்கையாக சர்க்கார் அறிவிக்குமா என்பதை அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : கேள்வியை மறுபடியும் கேளுங்கள்.

SRI M. RAMACHANDRA REDDI : தாலூகா ஹெட் குவார்ட்டரி லிருந்து சென்னைக்கு எக்ஸ்ப்ரஸ் பஸ் விடுவது தேவை என்பதை சர்க்கார் அறிந்து அது சர்க்காருடைய கொள்கையாக அறிவிக்குமா ?

THE HON. SRI V. RAMAIAH : கொள்கை ரீதியாகச் சொல்வதற்கு இல்லை. எங்கெங்கே தேவைப்படுகிறதோ, எங்கெங்கே சட்டசபை உருப்பினர் கள் வேண்டுமென்று வலியுறுத்துகிறார்களோ அங்கேயெல்லாம் கவனிக் கப்படும்.

SRI K. SATTANATHA KARAYALAR : எக்ஸ்ப்ரஸ் பஸ் ரூட்டுகள் கொடுக்கும்போது எந்த அடிப்படையில் கொடுக்கிறார்கள் ? கூட் டுறவு இயக்கத்திற்கும் எக்ஸ் சர்வீஸ் மென் அசோசியேஷனுக்கும் முதலிடம் கொடுக்க சர்க்கார் உத்தரவிடுமா ?

THE HON. SRI V. RAMAIAH : எக்ஸ்ப்ரஸ் ரூட்டாக இருந்தாலும், அல்லது சாதாரண ரூட்டாக இருந்தாலும் எந்த முறையில் ரூட்டுகள் வழங் கப்பட வேண்டும் என்று விதிகள் போடப்பட்டிருக்கின்றனவோ அந்த அடிப் படையில்தான் கொடுக்கப்பட்டு வருகிறது.

## *Special Wards in Hospitals*

* 407 *Q*.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Revenue be pleased to state whether it is a fact that admissions to the A and B class wards in the Government General Hospital, Madras, are not made seriatim as per registration?

[17th February 1959]

THE HON. SRI M. A. MANICKAVELU : The admissions to all the special wards are made seriatim as far as possible as per registration. However, discretion is given to the Resident Medical Officer to admit patients with acute and emergent conditions immediately.

* 408 *Q*.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Revenue be pleased to state whether there is any proposal to instruct the Resident Medical Officers in Government hospitals to relax rules for admission of patients in A and B wards on emergency basis instead of admitting on priority only?

THE HON. SRI M. A. MANICKAVELU : None, Sir.

***Special Minor Irrigation Schemes in South Arcot district***

MR. SPEAKER : The hon. Member Sri M. Jagannathan is not in his seat. The question and answer will be printed in the official proceedings. 9-30 a.m.

* 409 *Q*.—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the amount allotted for Special Minor Irrigation in the South Arcot district in 1957–58;

(*b*) the number of tanks, lakes, anicuts and channels constructed under this scheme, talukwar; and

(*c*) the amount spent out of the sum allotted for this scheme?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Rs. 2·56 lakhs.

(*b*) Forty-six works (including repairs to existing works) were carried out in the taluks of South Arcot district as detailed below :—

| *Name of taluk.* | *Number of works including repairs to existing works.* |
|---|---|
| Vriddhachalam ... ... ... | 2 |
| Kallakurichi ... ... ... | 5 |
| Tirukoilur ... ... ... ... | 4 |
| Villupuram ... ... ... | 6 |
| Tindivanam ... ... ... | 12 |
| Gingee ... ... ... ... | 16 |
| Cuddalore ... ... ... | 1 |
| Total ... | 46 |

(*c*) Rs. 2·61 lakhs.

***Small Savings***

* 410 *Q*.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Tahsildar, Erode, has addressed the Police, Tiruppur, Coimbatore district, to take action against one Durai, resident of Peruntholuvu, Tiruppur, for illegal collections of Small Savings in Uttukuli firka, Erode taluk; and

(*b*) if so, the action taken by the Government in the matter?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) Yes.

(b) The matter is under investigation by the Superintendent of Police, Coimbatore.

*City water-supply*

*411 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether there is any proposal to draw water from Andhra rivers to augment the City water-supply; and

(b) if so, how far the matter now stands?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) No, Sir. None at present.

(b) Does not arise.

SRI N. K. PALANISAMI : சார், நமது முதலமைச்சர் அவர்கள் ஆந்திராவுக்குச் சென்றிருந்த சமயத்தில் இதைப் பற்றி அந்த ஆந்திரப் பிரதேசத்து முதலமைச்சர் அவர்களிடம் பேசி நமது "சிட்டி"க்கு அதிசப் படி தண்ணீர் வர ஏற்பாடு செய்ததாகச் சொன்னார்கள். இதில் ஆரம்ப நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறதா?

THE HON. SRI M. A. MANICKAVELU : It is for the Zonal Council to take up the matter. But I may inform the hon. Member that the Central Irrigation Research Committee is examining the feasibility of drawing water from these rivers particularly examining at what point it could be drawn from those rivers.

SRIMATHI T. N. ANANDANAYAKI : கிருஷ்ணா-பெண்ணார் திட்டம் என்பது ஓரளவுக்கு உருவாகி, நடுவிலே விடப்பட்டது. அதை மீண்டும் துவக்க அரசாங்கம் முயற்சி எடுத்திருக்கிறதா? வேலை ஆரம்பிக்கப்படுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU : அதைத்தான் சொன்னேன். எந்த இடத்திலிருந்து தண்ணீர் எடுப்பது என்பது பரிசீலனையில் இருக்கிறது. ஒரு இடத்தில் தண்ணீர் எடுக்க உத்தேசித்தபோது பம்ப் செய்தால்தான் தண்ணீர் கிடைக்கும்படியான நிலைமை இருந்தது. பம்ப் செய்யும் செலவைப் பார்த்தால் தண்ணீர் எடுப்பதால் பிரயோஜனம் இல்லை என்றுதான் சொல்லவேண்டும். பம்ப் செய்யாமல் எந்த இடத்தில் இருந்து தண்ணீர் எடுக்கலாம் என்பதைப் பற்றி ஆராய்ந்து பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

SRI S. M. ANNAMALAI : சார், இந்தக் கிருஷ்ணா, கோதாவரி தண்ணீரைக் கொண்டு வந்தால் வட ஆற்காடு, செங்கல்பட்டு, சென்னை ஆகிய இடங்களுக்குத் தண்ணீர் கிடைக்கும். அப்படிப்பட்ட இந்தத் திட்டத்தைக்கொண்டு வர சர்க்கார் முயற்சிக்குமா?

THE HON. SRI M. A. MANICKAVELU : முயற்சி பற்றித்தான் இப்பொழுது உத்தேசித்துக் கொண்டிருக்கிறோம்.

SRI K. VINAYAKAM : Sir, is the Government aware of the fact that the generous Chief Minister of Andhra Pradesh has made a public declaration that he is prepared to consider the proposal of giving water from those perennial rivers to the City of Madras and, if so, will the Government make direct approach to the Chief Minister and then arrive at conclusions before they place the matter before the Zonal Ccuncil?

17th February 1959]

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, there is no necessity now for that kind of approach. The real approach is about the examination and the feasibility and how and where to draw water. That is being looked into now.

*Cooum river*

*412 *Q*.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) whether any research was conducted at the Irrigation Research Station to open the Cooum river into the sea; and

(*b*) if so, what the conclusions are?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Yes, Sir.

(*b*) As a result of experiments conducted, it is considered that pilot studies at the site have to be conducted before coming to a final decision in the matter. But the pilot studies at the site has not been conducted so far and hence, no decision on this proposal has yet been arrived at. In the meanwhile another proposal has been formulated by the Superintending Engineer, Madras Circle, for keeping the Cooum bar permanently open. The remarks of the Port Trust Engineer have been called for on the proposal. The Chief Engineer has promised a further report after getting the opinion of the Port Trust Engineer. This further report is awaited.

MR. SPEAKER : அடுத்த கேள்வியையும் எடுத்துக் கொள்ளலாம். கனம் மந்திரி அவர்கள் 413-வது கேள்விக்குக் கூட பதில் சொல்ல வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

*413 *Q*.—SRI S. PAKKIRISAMI PILLAI : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) whether there is any proposal to use the portion of the Buckingham Canal and that of the Cooum river in the City of Madras as waterways and means of transport of passengers; and

(*b*) whether any Committee of Technical experts has been appointed to go into this question?

THE HON. SRI P. KAKKAN : (*a*) & (*b*) Yes, Sir. The Government have constituted a High Power Technical Committee to formulate among other things, a scheme for the development of Cooum as a clean and tidal river and the improvement of Buckingham Canal to serve as an addition to the cheap transportation facilities within the Madras City.

SRI K. SATTANATHA KARAYALAR : சார், இந்த ஆராய்ச்சியின் பலன் எந்தத் தேதியில் அவர்கள் சர்க்காருக்குத் தெரிவித்தார்கள் ? ஒரு முடிவு எடுக்க இவ்வளவு காலம் தாமதம் ஏன் ?

THE HON. SRI P. KAKKAN : நான் பதிலிலேயே சொன்னேன் இப்பொழுதுதான் பரிசீலனை நடக்கிறது, முடிவு எடுக்கவில்லை என்று.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : இந்தக் கூவத்தின் காரணமாக துர்நாற்றம் அதிகபபட்டுக் கொண்டிருக்கிறது. அதைத் தற்காலிகமாகப் போக்குவதற்காவது நடவடிக்கை எடுக்க அரசாங்கம் உத்தேசித்திருக்கிறதா ?

[17th February 1959

THE HON. SRI P. KAKKAN : அதற்குத் தனிக் கேள்வி போடுமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : தற்காலிகமாகச் சில நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறது என்பதை நான் சொல்ல முடியும்.

SRI S. PAKKIRISAMI PILLAI : இந்தக் கூவம் நதியானது சென்னை பாகத்தில் வெயில் காலத்தில் வரண்டு போகும் காரணத்தால் துர்நாற்றம் ஏற்படுகிறது. அந்தச் சமயத்தில் சமுத்திரத் தண்ணீரை இந்தக் கால்வாய்களில் நிரப்பி துர்நாற்றத்தைப் போக்குவதற்குச் சர்க்கார் தற்காலிகமாகவாவது நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI P. KAKKAN : அப்படிச் செய்ய வேண்டுமென்று தான் எஞ்சினீயர்கள் அபிப்பிராயம் கொடுத்திருக்கிறார்கள்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : இந்தக் கூவத்தைச் சுத்தம் செய்வது குறித்தும், பக்கிங்ஹாம் கனாலை சீர்திருத்துவது குறித்துக் கார்ப்பரேஷனிலிருந்து இரண்டு திட்டங்கள் வந்தனவா ? அவைகளின் நிலைமை என்ன ?

THE HON. SRI P. KAKKAN : இதற்குத் தனிக் கேள்வி போடவேண்டும்.

SRI K. ANBAZHAGAN : இந்தக் கேள்வியை ஒட்டி அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் சில தற்காலிகத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன என்று சொன்னார். அந்தத் தற்காலிகத் திட்டங்கள் எவை என்று அறிந்து கொள்ளலாமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : புதிய தண்ணீரைச் சமுத்திரத்தில் இருந்து கூவம் நதியில் விட்டு முன்பே இருக்கிற அழுக்குத் தண்ணீரை வெளியேற்றுவது.

SRI A. A. RASHEED : அதன் காரணமாக நாற்றத்தில் அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறதா என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : ஆம், நாற்றத்தில் அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறது. துர் நாற்றம், நல்ல நாற்றம் இரண்டும் நாற்றம்தான்.

SRI K. VINAYAKAM : இந்த ஹை பவர் இரிகேஷன் கமிஷன் புரிசீலனைக்கு விடுவதற்கு முன்பே பக்கிங்ஹாம் கனால் மூலமாக சவுக்குக் கட்டை அரிசி முதலிய வியாபாரப் பொருள்கள் சிறு படகுகளில் கொண்டு போகப்பட்டு வருகின்றன. அந்தக் கனாலில் வர வர ஆழம் குறைந்து வருவதன் காரணமாக அதன் மூலமாக நடைபெற்று வரும் வியாபாரம் தடைப்பட்டு வருகிறது. ஆகவே இந்தப் பக்கிங்ஹாம் கனாலை ஆழப்படுத்துவதற்கு அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI P. KAKKAN : பக்கிங்ஹாம் கனாலை சென்னைக்கு வடக்கே ஆந்திரப் பிரதேசம் எல்லை வரை செப்பனிட எஸ்டிமேட் தயார் செய்யப்பட்டு மத்திய சர்க்காருடன் பேச்சு வார்த்தை நடந்து வருகிறது.

SRI A. GOVINDASAMY : பக்கிங்ஹாம் கனாலை வடக்கே போவதற்குச் செப்பனிட உத்தேசித்திருக்கிறார்கள். அந்தக் கனால் தெற்கே கடலூர் வரை போகிறது. தெற்கே கடலூர் வரை ஆழப்படுத்தினால் சவுக்குக் கட்டை, அரிசி முதலிய வியாபாரப் பொருள்கள் கொண்டு செல்ல வசதியாக இருக்கும். இதைப் பற்றி அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா?

THE HON. SRI P. KAKKAN : எல்லாக் காரியத்தையும் ஒரே சமயத்தில் எடுத்துக் கொள்ள முடியாது. ஒவ்வொன்றாகத்தான் எடுத்துக் கொள்ள முடியும்.

17th February 1959]

*Motor taxis in Pudukkottai Division*

* 414 *Q.*—SRI V. ARUNACHALA THEVAR : Will the Hon. the Minister for Electricity be pleased to state how many motor taxis are plying in Pudukkottai Division, Tiruchirappalli district?

THE HON. SRI V. RAMAIAH : There are four taxis plying in Pudukkottai division of Tiruchirappalli district of which three are big taxis and one is a baby taxi.

*Foreign scholarships*

* 415 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Finance be pleased to state whether it is a fact that the Government have represented to the Central Government to offer sufficient number of Foreign scholarships to this State under the Research Scholarship in Humanities, General Cultural Scholarship Scheme, Colombo Plan Scheme and Indo-German Industrial Co-operation Scheme?

THE HON. SRI C. SUBRAMANIAM : The Government of India have been requested to allot to this State a larger number of scholarships under the Central Overseas Scholarships Scheme.

* 416 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Finance be pleased to state the maintenance allowance for overseas scholarships in different countries in Europe and in America?

THE HON. SRI C. SUBRAMANIAM : A statement [a] is placed on the table of the House.

SRI K. SATTANATHA KARAYALAR : சார், சென்டரல் ஓவர்சீஸ் ஸ்காலர்ஷிப் தற்சமயம் எவ்வளவு கொடுக்கப்பட்டிருக்கிறது ? அதிகமாகக் கோரப்பட்டிருக்கிறதா ? எந்தெந்த இனத்தில் எவ்வளவு கோரப் பட்டிருக்கிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not have information regarding the exact number of scholarships allotted.

SRI K. SATTANATHA KARAYALAR : இந்த ஸ்காலர்ஷிப் எந்த அடிப்படையில் கொடுக்கப்படுகிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தச் சர்க்கார் சிபாரிசு செய்வதன் பேரில் மத்திய சர்க்கார் இதைக் கொடுக்கின்றார்கள். இதில் 50 சத வீதம் வெளியில் இருக்கக்கூடிய எந்த கவர்ன்மெண்ட் "ஸ்பான்சர்" பண்ணுகிறார்களோ அவர்கள் ஏற்றுக் கொள்ளுகிறார்கள். பாக்கி 50 சத வீதத்தை மத்திய சர்க்கார் ஏற்றுக்கொள்ளுகிறது.

SRI K. SATTANATHA KARAYALAR : இதிலே தற்சமயம் எத்தனை பேர் ஸ்காலர்ஷிப் கொடுக்கப்பட்டு வெளியில் அனுப்பப்பட்டிருக்கிறார்கள் ? உத்தியோகத் துறையில் இருப்பவர்கள் வெளியில் போயிருக்கிறார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : என்னிடத்தில் தற்போது புள்ளி விவரங்கள் இல்லை. நாண்கைந்து நாட்களுக்கு முன்பு புள்ளி விவரங்கள் கொடுத்ததாக ஞாபகம்.

---

a Printed as Appendix II on page 164 supra.

SRI A. VEDARATHNAM : வெளி நாடுகளில், குறிப்பாக அமெரிக்கா போன்ற இடங்களில் இருந்து இந்த மாணவர்களுக்கு ஸ்காலர் ஷிப் அந்த நாட்டுச் சர்க்கார் கொடுத்து வருகிறார்கள். நம்முடைய மா நிலத்து மாணவர்கள் அந்தப் பயிற்சிக்கு அனுப்பப்பட்டு இருக்கிறார்களா? எத்தனை பேர் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அனுப்பப்பட்டிருக்கிறார்கள். எத்தனை பேர் என்ற விவரம் இல்லை.

SRI T. SAMPATH : " மெரிட் " டுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப் படுகிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : I suppose everything is taken into consideration before selection is made. I suppose these things will generally be given on merit.

*Sub-treasury for Vedaranyam*

* 417 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) திருத்துறைப்பூண்டியில் இப்போதுள்ள தாலூகா கஜானா வேறெங்கேனும் மாற்றப்படுமா ?

(ஆ) வேதாரண்யம் சப்-தாலூகாவிற்கு கஜானா வசதி செய்துகொடுக் கும் உத்தேசம் உண்டா ?

(இ) அப்படியானால் அதன் விவரம் என்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) There is no proposal to transfer the taluk treasury at Tiruturaipundi elsewhere.

(ஆ) & (இ) The proposal whether a separate sub-treasury may be opened at Vedaranyam is under consideration.

SRI A. VEDARATHNAM : வேதாரண்யத்தில் இதற்கு முன் இருந்த கஜானாவை எடுத்த காரணத்தினால் ஏராளமாக பணம் ரிமிட் பண்ணுகிறவர்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். இதன் காரணமாக அங்கே ஒரு சப்-டிரஷரியை ஏற்படுத்த அரசாங்கம் முன் வருமா? அதைப்பற்றி அரசாங்கம் ஆலோசிக்குமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்போது தோப்புத்துறை என்ற இடத்தில் கஸ்டம்ஸ் டிரஷரி இருக்கிறது. அதை எடுத்துவிடவேண்டு மென்ற உத்தேசம் இருக்கிறது. அப்போது இந்த இடத்தில் அதை வைக்கலாமா என்ற உத்தேசமும் இருக்கிறது.

*Public Works, Irrigation and Food Production departments*

* 418 *Q.*—SRI R. SRINIVASA IYER : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) whether the Public Works, Irrigation and Food Production departments have been amalgamated;

(*b*) whether there is any proposal to constitute a special Public Works Department Division for Tanjore district to provide irrigation facilities for rain-fed areas and to provide drainage facilities in the district; and

(*c*) whether there is any proposal to amalgamate minor irrigation department now under the Revenue Department with the Public Works Department?

17th February 1959]

THE HON. SRI P. KAKKAN : (a) No, Sir. But, the question of integration of the various engineering branches, viz., Public Works, Highways, Irrigation, Food Production, Minor Irrigation, etc., is under the consideration of the Government.

(b) There is no proposal to investigate scheme providing for irrigation facilities to rain-fed areas in the Tanjore district. The question of forming a Special Public Works Department Division for improving the existing drainage facilities is however under consideration.

(c) Yes, Sir.

### *Educational concessions*

* 419 Q.—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is any proposal to revise the income limit of parents of students entitled to (i) full-fee concession; and (ii) half-fee concessions?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

### *Heavy rains in the City*

* 420 Q.—SRI K. SATTANATHA KARAYALAR :
SRI N. K. PALANISAMI : } Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) the number of persons rendered homeless in the Madras City and suburbs due to heavy rains on the 19th and 20th November 1958; and

(b) the steps taken by the Government to give relief to them?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) The number of persons whose dwelling numbering about 6,300 were rendered uninhabitable on account of the heavy rains is 25,800.

(b) Temporary accommodation was provided and a survey of the extent of damages was made. An advance amount of Rs. 10,000 was sanctioned in November 1958 to those victims who were in urgent need of relief. It is proposed to sanction a further amount for affording relief to all the victims. The matter is under the consideration of the Government and orders are likely to issue shortly.

SRI K. SATTANATHA KARAYALAR : இந்த வட்டாரத்தில் வாழக்கூடிய மக்கள் ஒவ்வொரு தடவையும் பெரும் மழை வரும்போது பாதிக்கப்படுகிறார்கள். ஆகையால் நிரந்தரமாக அதைத் தடுக்க நடவடிக்கை எடுக்கும் உத்தேசம் சர்க்காருக்கு உண்டா?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்போது அங்கே ஆட்சேபகரமான இடத்திலே குடிசை போட்டு வருகிறார்கள். அந்த மாதிரியாக போட்டுக்கொள்ள வொட்டாமல் தடுப்பது சிறந்த வழி என்று நினைக்கிறேன்.

SRI N. K. PALANISAMI : இருக்கக்கூடிய சேரிகளில் டிரைனேஜை ஆழம் செய்வது, இன்னும் பள்ளங்களை மேடு செய்வது ஆகியவை மூலமாக இந்த மாதிரி ஏற்படுகிற கஷ்டத்தைத் தவிர்க்க முடியும். அந்த மாதிரி சர்க்கார் செய்யக் கூடாதா?

[17th February 1959

THE HON. SRI M. A. MANICKAVELU : பேசின் பிரிட்ஜ் வரியாவே மிகப் பள்ளம். அதில் வேண்டுமென்றே குடிசை போடுகிறார்கள் இந்த மாதிரி வெள்ளம் வந்து அடித்துப் போனால் பணம் வாங்கலாம் என்றே சிலர் போடுகிறார்கள்.

DR. SRIMATHI SATHIYAVANIMUTHU : பேசின் ப்ரிட்ஜ் பக்கத்தில் குடிசை போட்டுக் கொண்டிருப்பவர்கள் சித்ரா டாக்கீஸ் பக்கத்திலிருந்து அப்புறப்படுத்தப்பட்டவர்கள். அங்கு வாழக்கூடியவர்களுக்கு இந்தச் சலுகை கொடுக்கப்படவில்லை என்று பல மனுக்கள் கொடுத்து இருக்கிறார்கள். அவர்களுக்கு மேலும் இந்தச் சலுகை கொடுக்க அரசாங்கத்தார் முன் வருவார்களா என்று கேட்க விரும்புகிறேன் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : முன்பு நான் சொன்னேன். சிலருக்கு உடனடியாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. மற்றவருக்குக் கொடுப்பதில் கஷ்டம் இருக்கிறது. இந்தச் சலுகைக்குப் பாத்திரம் இல்லாதவர்களும் கூட மனுப் போட்டிருக்கிறார்கள். அவற்றையெல்லாம் நன்றாக அலசிப் பிரித்துப் பார்த்துக் கொடுக்க வேண்டியிருப்பதால் காலதாமதம் ஆகிறது.

SRIMATHI T. N. ANANDANAYAKI : வீடு கட்டி தனி முதலாளிகள் அவற்றை வாடகைக்கு விடுகிறார்கள். அவர்களை நல்ல முறையில் வீட்டைச் செப்பனிடவேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்ளக் கூடாதா? அது போல வீடு இழந்தவர்களுக்கு உதவி செய்கிறார்கள் அரசாங்கத்தார். ஆனால் ஒரு பகுதி தான் இடிந்து விழுந்திருக்கிறது என்றாலும் அவர்களுக்கும் உதவி செய்ய முன் வருவார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU : அந்த மாதிரியும் பார்ஷியல் டாமேஜ் உள்ள இடங்களுக்கு உதவி கொடுத்து வருகிறார்கள். முதலாளிகள் கட்டியிருக்கிற இடத்தில் சரிப்படுத்த வேண்டுமென்றால் ஸ்லம் கிளியரன்ஸ் என்ற அடிப்படையில் தான் முடியும்.

SRI K. ANBAZHAGAN : நவம்பர் 19—20 தேதி ஆகிய நாட்களில் ஏற்பட்டது போன்ற மழையை ஒட்டி கடல் அரிப்பும் (சி எரோஷன்) தொடர்ந்தது. இப்படி மழையை ஒட்டி கடல் அரிப்பும் ஏற்பட்டு அதனால் பாதகம் அடைந்தவர்களுக்கு என்ன நிவாரணம் அளிக்க சர்க்கார் தீர்மானித்திருக்கிறது ?

MR. SPEAKER : The main question is about something else. The hon. Member may put a separate question.

THE HON. SRI M. A. MANICKAVELU : இங்கே மழையினால் ஏற்பட்ட விளைவைப் பற்றித் தான் கேட்கப்பட்டிருக்கிறது.

MR. SPEAKER : The hon. Member will now see that as I told him already a separate question has to be put.

SRI K. ANBAZHAGAN : மழையை ஒட்டியே கடல் அரிப்பும் ஏற்பட்டிருக்கிறது. இது இரண்டும் கலந்தது தான்.

THE HON. SRI M. A. MANICKAVELU : அப்படியானால் என் பதிலிலும் இரண்டும் கலந்திருக்கிறது.

SRI S. PAKKIRISAMI PILLAI : இப்படி பாதிக்கப்பட்ட குடிசை மக்களுக்கு தொகை எவ்வளவு கொடுக்கப்பட்டு வருகிறது ? கொடுக்கும்படியான அந்தத் தொகை மிகவும் குறைந்த தொகையாக இருக்கிறதென்று அரசாங்கம் கருதவில்லையா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : நூற்றுக்கு 30 ரூபாய் வீதம் கொடுக்கப்படுகிறது. பாதிக்கப்பட்டவர்களை ஓரளவு கைதூக்கித்தான் விட முடியும். முழுக்க உதவமுடியாது. பணம் இருந்தால் வாரிக்கொடுக்கலாம்.

SRI K. VINAYAKAM : Are the Government aware of the fact that most of these huts are situated in low-lying areas and thus become susceptible to flooding and if so, will the Government take

17th February 1959]

steps to clear these slums before the oncoming of rains and move the huts to high level areas and thus save the recurring expenditure which had become a drain on the resources of the Government?

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, the trouble about clearing these huts in low-lying areas is this, that unless we make alternative accommodation, we cannot make them move out. Under the slum clearance scheme, this is being done.

SRI A. A. RASHEED : May I know the total loss due to these, loss both to the Government as well as private persons?

THE HON. SRI M. A. MANICKAVELU : It has not been estimated, Sir.

*Coleroon banks*

* 421 *Q.*—SRI K. B. S. MANI (on behalf of Sri C. Muthiah) : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

சீர்காழி எலத்தூர்—கொள்ளிடக்கரை வெள்ள காலத்தில் உடைப்பு ஏற்படுவதைத் தடுக்க என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது?

THE HON. SRI P. KAKKAN : The following nine protective works were sanctioned for protecting the flood bank of Coleroon in Elathur :—

(1) Providing brick block groynes at Sothiriyam set between M. 83/4—82/4 Coleroon right bank (Rs. 52,400).

(2) (*a*) Protecting the erosions at Sothiriyam set between M. 84/0-1 of Coleroon right bank by providing brick masonry revetment (Rs. 28,000).

(*b*) Providing brick masonry revetment at Sothiriyam set between miles 83/7—84/0 of Coleroon right bank (Rs. 35,500).

(3) Widening the Coleroon right bank at M. 84/01 Sothiriyam set (Rs. 1,000).

(4) Providing Pile groynes and edging at Sothiriyam set at miles 83/7—84/0 Coleroon right bank (Rs. 3,600).

(5) Widening the bank at Sothiriyam set between mile 83/7—84/0 (Rs. 1,450).

(6) Providing preamble screen at Sothiriyam set (Rs. 4,700).

(7) Diverting the flow in the River Coleroon by providing groyne at Sothiriyam set between miles 83/5–6 Coleroon right bank (Rs. 9,500).

(8) At the Alakudi set permanent protective works were done by constructing five brick block groynes and by forming a diversion bank between miles 96/3—97/1 in Coleroon right bank.

(9) In addition to the abovementioned works necessary pereamble screen work is also proposed to be carried out to reclaim the eroded portion in the area.

Out of that nine works, items (1), (3), (4), (5) and (8) have been completed and the rest are in different stages of progress. Information regarding latest stage of remaining four works has been called for and will be furnished later.

SRI K. B. S. MANI : கனம் அமைச்சர் குறிப்பிட்ட 8 வேலைகளில் எதாவது ஒரு வேலை பலகீனப்பட்டால் கூட—தடைப்பட்டால் கூட—சீர்காழி தாலூகா பூராவுமே அழிந்து விடக்கூடிய சூழ்நிலை ஏற்படும். கடந்த ஆண்டு 30,000 ரூபாய்க்கு விடப்பட்ட காண்டிராக்ட் வேலையை சம்பந்தப் பட்ட காண்டிராக்டர் சரியாகச் செய்யவில்லை. எனவே, இனிமேல், காண்டி ராக்ட் வேலைகளை சரியாகச் செய்யாவிட்டால் காண்டிராக்ட் ரத்து செய்யப்படு வதுடன், அரசாங்கத்திற்கு ஏற்படும் நஷ்டமும் காண்டிராக்டர்களுடைய சொத்திலிருந்து வசூலிக்கப்படும் என்ற முன் எச்சரிக்கையுடன் காண்டி ராக்டுகளை விட அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI P. KAKKAN : காண்டிராக்ட் கொடுக்கும் போது காண்ராக்டர்களிடம் எந்த நிபந்தனையைப் போட முடியுமோ அதைத் தான் போட முடியும். அதைத் தவிர வேறு ஒன்றும் சொல்ல முடியாது. இப்போது அந்த 9 வேலைகளில் 5 முடிந்து விட்டன. மற்ற 4 வேலைகள் பற்றி விசாரித்திருக்கிறோம். அவைகளும் துரிதமாக முடிக்கப்படுவதற்கு ஏற்பாடு செய்யப்படும்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : ஆற்றோரங்களில் அரிப்பு ஏற்படுவதைத் தடுக்க அங்கே மரங்களை வைத்தாலே போதும் என்று சொல்கிறார்களே. அந்த யோசனையை ஆராய்ந்து பார்த்த பிறகே இந்த 8 வேலைகளை எடுத்துக்கொள்ள கனம் அமைச்சர் முன் வந்தரா?

THE HON. SRI P. KAKKAN : மரங்கள் வைத்தால் மட்டும் போதாது. நாணல்களையும் வைக்கலாம். இருந்தாலும், ரிவெட்மென்ட் கட்டினால் தான் அதைத் தடுக்க முடியும்.

*Medical graduates*

* 422 Q.—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) the number of vacancies remaining unfilled in the various departments of Government and local bodies due to non-availability of Medical Graduates; and

(b) the steps taken or proposed to be taken to solve this problem?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) Sixteen in Primary Health Centres and 100 in other Government Medical Institutions. Information regarding the number of vacancies in the Local Fund medical institutions is not available.

(b) The Government have decided to appoint G.C.I.Ms. in Government Medical Institutions. With a view to induce Medical Officers to come forward to take up appointments in the Primary Health Centres, the compensatory allowance payable to Assistant Surgeons employed in Primary Health Centres has been raised from Rs. 50 to Rs. 100 per mensem. Quarters for the staff employed in these centres are also proposed to be constructed.

SRI T. T. DANIEL : Sir, is it a fact that many of the M.B.B.S. students do not accept Government jobs, and even if they accept Government jobs, they resign and go away, because the salary is poor and also because there is no convenient housing accommodation in villages to which they are posted?

THE HON. SRI M. A. MANICKAVELU : All that is true. I shall be grateful to the hon. Member if he would suggest ways and means of overcoming these difficulties.

17th February 1959]

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : It is not very difficult for the Government to collect statitstics from the local bodies regarding the number of vacancies in the local fund medical institutions. It should be possible for the Government to collect statistics and place them on the table of the House. Will the Government consider the desirability of collecting figures and placing them on the table of the House before the next meeting?

THE HON. SRI M. A. MANICKAVELU : I submit, Sir, that even with great difficulty if the statistics are collected, what step we are going to take to remedy the state of affairs, is not known. However, since the Leader of the Opposition wants the information, I shall see what could be done.

SRI A. R. SUBBIAH MUDALIAR : எம்.பி.பி.எஸ். பட்டதாரிகளுக்கு கூடுதலாகச் சம்பளம் கொடுக்கப்படவேண்டும் என்ற முறையீடு இலாகாவிலிருந்து வந்திருக்கிறதா ? அதாவது, இப்போது அவர்களுக்கு உள்ள சம்பளத்தை இரட்டிப்பாக்க வேண்டும் என்ற முறையீடு சர்க்காருக்கு வந்திருக்கிறதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : முறையீடு இருக்கிறதோ இல்லையோ, அதை அதிகப்படுத்தலாமா என்று நாங்களே ஆலோசித்து வருகிறோம்.

SRI S. LAZAR : மருத்துவப் பட்டதாரிகள் ஒரு சில ஆண்டுகளாவது சர்க்கார் ஆஸ்பத்திரிகளில் கட்டாயம் வேலை செய்யவேண்டும் என்று சட்டம் கொண்டுவர வேண்டுமென்ற யோசனை எந்த அளவில் இருக்கிறது?

THE HON. SRI M. A. MANICKAVELU : அதை எந்த மாதிரிச் செய்யலாம் என்று ஆலோசிக்கப்பட்டு வருகிறது. முதலாவதாக, சில மாணவர்களுக்கு ஸ்காலர்ஷிப்புகள் கொடுத்து இந்த மாதிரியான நிபந்தனையைப் போடுவதை நாம் சட்டப்படி செய்ய முடியும்; அது ஆலோசனையில் இருக்கிறது.

SRI P. S. CHINNADURAI : அரசாங்கம் எல்.ஐ.எம். பட்டம் பெற்றவர்களையும் ஜி.சி.ஐ.எம். பட்டம் பெற்றவர்களையும் சமமாகக் கருதி நடத்துவதற்கு இந்த ராஜ்யத்தில் எந்த விதமான தடையும் இருப்பதாகத் தெரியவில்லை. எனவே, எல்.ஐ.எம். பட்டம் பெற்றவர்களை ப்ரைமரி ஹெல்த் ஸெண்டர்களில் நியமிக்க அரசாங்கம் முன் வருமா?

THE HON. SRI M. A. MANICKAVELU : இதற்கு முன்பு எந்த பட்டத்தை வாங்கியவர்களை எல்.ஐ.எம். என்று சொல்லி வந்தோமோ அந்தப் பட்டத்தை வாங்குபவர்களைத் தான் ஜி.சி.ஐ.எம். என்று சொல்லி வருகிறோம். அவர்களை ஜில்லா தலைமை ஆஸ்பத்திரிகளிலும் தாலூகா தலைமை ஆஸ்பத்திரிகளிலும் நியமிக்க ஏற்பாடு செய்திருக்கிறோம். அவர்களில் 35 பேர்களுக்கு உத்தியோகம் கொடுக்க சர்க்கார் முன் வந்தது. ஆனால் 3 பேர்கள் தான் வேலையில் சேர்ந்திருக்கிறார்கள். அதுவும் சென்னையில் தான். பிரைமரி ஹெல்த் ஸெண்டர்களைப் பொறுத்த வரையில், அவைகளை நடத்துவதில் UNICF இன் உதவிகள் பெறப்படுவதால் அந்த ஸ்தாபனத்தின் சம்மதம் பெற்றே அங்கே இந்த வைத்தியர்களை நியமிக்க வேண்டியிருக்கிறது. இவர்களை அங்கே நியமிப்பதற்கு அந்த ஸ்தாபனம் ஒத்துக்கொள்வதில்லை.

MR. SPEAKER : பத்து மணியாவதற்கு இன்னும் நான்கு நிமிஷங்கள் தான் இருக்கின்றன. எல்லாக் கேள்விகளையும் சீக்கிரம் முடிப்பதற்கு ஒத்துழைக்க வேண்டும் என்று உங்கள் எல்லோரையும் கேட்டுக்கொள்கிறேன்.

*Perundurai Sanatorium*

* 423 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the amount of grant given to Perundurai Sanatorium by the Centre during 1957–58;

(*b*) the amount of funds collected for running the Sanatorium; and

(*c*) the expenditure incurred during that year?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Rs. 30,000.

(*b*) Rs. 2,35,688.

(*c*) Rs. 2,78,021.

SRI N. K. PALANISAMI : பெருந்துறை க்ஷயரோக ஆஸ்பத்திரி மாநிலத்திலேயே பெரிய ஆஸ்பத்திரியாக இருக்கிறது. அதற்குக் கொடுக்கபடும் மானியத் தொகை போதாது. எனவே மத்திய சர்க்காரும் மாநில சர்க்காரும் சேர்ந்து அந்தப் பற்றுக் குறையை சரிக்கட்ட முன் வருவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்போது அதற்கு உதவி அளித்துக்கொண்டு தான் இருக்கிறோம். அதற்குள்ள "மெய்ன்டினன்ஸ் க்ராண்டை" அதிகப்படுத்தியிருக்கிறோம். அதற்கு மெய்ன்டினன்ஸ் க்ராண்டாக 46,000 ரூபாய் கொடுக்கிறோம், இதற்கு முன்பு இவ்வளவு தொகை கொடுத்ததில்லை.

*Hospital in Tanjore district*

*424 *Q.*—SRI A. VEDARATHNAM (on behalf Sri M. D. Thiagaraja Pillai) : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா.—

(அ) தஞ்சை ஜில்லா தாலூகா தலைநகரில் உள்ள எந்தெந்த ஆஸ்பத்திரிகளை சர்க்கார் எடுத்து நடத்தி வருகிறது ? அவைகளுக்கு ஆண்டு தோறும் ஆகும் செலவு என்ன ?

(ஆ) நன்னிலம் தாலூகா தலைநகரில் உள்ள லோகல் போர்டு ஆஸ்பத்திரியை எப்பொழுது சர்க்கார் எடுத்து நடத்த உத்தேசம் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) The Local Fund Hospitals at Sirkali and Arantangi. The annual recurring expenditure on these institutions is about Rs. 54,950 and Rs. 9,000 respectively.

(*b*) The matter is under consideration of the Government.

SRI A. VEDARATHNAM : நன்னிலம் தாலூகா தலைநகர் ஆஸ்பத்திரியை சர்க்கார் எடுத்துக்கொள்வது பற்றிய ஆலோசனை எப்போது முடியும் ? அது எப்போது சர்க்காரால் எடுத்துக்கொள்ளப்படும் ? அதை விரைவில் எடுத்துக்கொள்ளும் உத்தேசம் சர்க்காருக்கு உண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : தாலூகா தலைநகர ஆஸ்பத்திரிகள் மொத்தம் 28. அவைகளில் 24 சர்க்காரால் எடுத்துக் கொள்ளப்பட்டு விட்டன. பாக்கியுள்ள நான்கும் அனேகமாக இந்த வருஷம் சர்க்காரால் எடுத்துக்கொள்ளப்படலாம். அந்த நான்கில் ஒன்று தான் நன்னிலம் தாலூகா தலைநகர ஆஸ்பத்திரி.

MR. SPEAKER : மணி பத்து ஆகப்போகிறது. இன்னும் 10 நிமிஷங்கள் எடுத்துக்கொண்டு எல்லாக் கேள்விகளையும் முடித்து விடலாம்.

17th February 1959]

*Bus-worthy roads in Peruvalappur firka*

* 425 Q.—SRI S. LAZAR: Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(a) the length of the roads under the Public Works Department (Highways) in Peruvalappur firka in Lalgudi taluk, Tiruchirappalli district;

(b) the length of bus-worthy road in the said firka; and

(c) whether there is any proposal by the Government to lay at least one bus-worthy road right across the firka?

THE HON. SRI P. KAKKAN: (a) Thirty-one miles of District Board roads and 14 miles of Government road;

(b) None.

(c) No, Sir. The Second Five-Year Plan, however, provides for construction of bridge across two crossings in the Pullambadi, Sirugalappur-Padalur road, a Government road, to make it an all weather road. The work will be taken up in its due turn subject to availability of funds.

*Valkaradu forests*

*426 Q.—SRI N. R. THIAGARAJAN: கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லா தேனி வால்காடு காட்டில் எத்தனை தடவை மரம் நடு விழா நடந்தது ?

(ஆ) அதற்காக எவ்வளவு தொகை செலவு செய்யப்பட்டது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (a) Vanamahotsava was *not* celebrated in Valkaradu forests at any time.

(b) The question does not arise.

SRI N. R. THIAGARAJAN: அங்கே வனமஹோற்சவம் நடக்காவிட்டாலும், என் வீட்டிற்குப் பக்கத்தில் 7–8 தடவை மரங்கள் நடப்பட்டு அவை பட்டுப்போய்விட்டன என்பது எனக்குத் தெரியும். எந்த இடத்தில் எந்த மரத்தை வைத்தால் பட்டுப்போகாமல் வளரும் என்று பார்த்து அந்த அந்த இடங்களில் அந்த அந்த மரங்களை நடச் செய்வதற்குரிய உத்தரவை அரசாங்கத்தார் போடுவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: நான் சற்று முன்பு குறிப்பிட்ட காட்டில் கூட 3,007 மரங்கள் பச்சையாக உயிரோடு இருக்கின்றன என்பதை கனம் அங்கத்தினருக்குத் தெரிவித்துக்கொள்கிறேன்.

*Multi-purpose School*

* 427 Q.—SRI A. VEDARATHNAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) செகண்டரி கல்விக் கமிஷனின் சிபாரிசுபடி ஒரு பலநோக்குப் பள்ளி (Multi-purpose School) ஏற்படுத்தப்படுமா ?

(ஆ) அப்படியானால் எப்போது, எங்கே ? என்ன செலவில் ?

[17th February 1959

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) The scheme of opening diversified courses in Secondary schools has been in vogue from 1948–49.

(b) A statement [a] is laid on the table of the House.

SRI A. VEDARATHNAM : இதுவரையில் இந்த முறையில் நடத்தப்படும் பள்ளிகள் திருப்திகரமாக வேலை செய்திருக்கின்றனவா ? இது சம்பந்தமாக அரசாங்கத்தின் அபிப்பிராயம் என்ன ? திருப்திகரமாக இருந்திருந்தால், மற்றப் பள்ளிகளையும் பல நோக்கப்பள்ளிகளாக மாற்ற அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இவைகளை பல நோக்கப் பள்ளிகளாக மாற்றியதில் நல்ல பலன்கள் ஏற்பட்டிருக்கின்றன என்று சர்க்கார் கருதுகிறது. அடுத்த ஆண்டில் அவசியமான பணத்தை ஒதுக்கி எத்தனை பள்ளிகளை பல நோக்கப் பள்ளிகளாக மாற்றமுடியுமோ அத்தனை பள்ளிகளை பல நோக்கப் பள்ளிகளாக மாற்றுவதற்கு ஏற்பாடு செய்துகொண்டிருக்கிறோம்.

*Number of Doctors in the State*

10 a.m.

*428 Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) தற்போதைய சென்னை ராஜ்யத்தில் எத்தனை டாக்டர்கள் இருக்கிறார்கள் (ஜில்லாவாரியாக) ?

(ஆ) அவர்களில் எம். பி. பி. எஸ். எத்தனை பேர் ? எல். எம். அண்டு எஸ்., எல். எம். பி. எத்தனை பேர் (ஜில்லாவாரியாக) ?

(இ) சர்க்கார் சர்வீஸிலுள்ளவர்கள் எத்தனை பேர் (ஜில்லா வாரியாக ?

(ஈ) சொந்தத்தில் தொழில் நடத்துபவர்கள் எத்தனை பேர் (ஜில்லா வாரியாக) ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) to (d) A statement [b] is placed on the table of the House.

SRI N. R. THIAGARAJAN : இதில் பிரைவேட் பிராக்டிஸ் செய்யும் டாக்டர்களின் பெயர்கள் காணவில்லை. கிட்டத்தட்ட பதினாயிரம் டாக்டர்கள் அப்படி இருக்கவேண்டுமென்று தெரிகிறது. ஆகவே எல்லா டாக்டர்களின் பட்டியலையும் தயாரித்து டி.எம்.ஓ. கையில் அது இருப்பதுதான் நல்லது. ஆயிரம் பேர்களைக் கொன்றவன் அரை வைத்தியன் என்று சொல்வது போல், பல கம்பவுண்டர்கள் டாக்டர் என்று போர்டு போட்டுக் கொண்டு வைத்தியம் செய்து வருகிறார்கள். ஆகவே நான் குறிப்பிட்டது போன்று ஒரு பட்டியல், டாக்டர்களின் பட்டியலிலே தயாரித்து வைக்கப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கம்பவுண்டர்கள் டாக்டர் என்று போர்ட் போட்டுக் கொண்டிருப்பதாக அங்கத்தினர் அவர்கள் சொன்னார்கள். அப்படி போர்ட் போட்டுக் கொண்டிருக்கிற இரண்டு நபர்களைச் சொன்னால் போதும், நடவடிக்கைகள் எடுக்கலாம்.

(கனம் அங்கத்தினர் இன்னொரு கேள்வி கேட்க எழுந்தார்.)

MR. SPEAKER : இப்பொழுது ஒரு உப கேள்விக்குத்தான் சந்தர்ப்பம் கிடைக்கும். இல்லை கேள்வியை நாளைக்கு எடுத்துக் கொள்ளலாம் என்று அங்கத்தினர் சொன்னால் நாளை எடுத்துக்கொள்ளலாம்.

*Local Fund Hospital at Peralam*

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் இடத்தில் இல்லாததால், 429-வது கேள்வியும் அதன் பதிலும் சட்டசபை நடவடிக்கைகளில் அச்சிடப்படும்.

---

[a] Printed as Appendix III on pages 164–172 infra.
[b] Printed as Appendix IV on page 172–173 infra.

17th February 1959]

*429 *Q.*—SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

தஞ்சை ஜில்லா, நன்னிலம் தாலுக்கா பேரளத்திலுள்ள லோகல் பண்டு ஆஸ்பத்திரியை அரசாங்கமே எடுத்து நடத்த உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

SRI P. G. MANICKAM : கனம் சபாநாயகர் அவர்களே எனது கேள்விகளையும் நாளைக்கு எடுத்துக் கொள்ளலாம்.

3

MR. SPEAKER : அப்படி எல்லாக் கேள்விகளையும் எடுத்துக் கொள்ளமுடியாது. எதற்கும், 430-வது கேள்வியை நாளை எடுத்துக் கொள்ளலாம்.

*Lands for Harijans*

*431 *Q.*—SRI S. B. ADITYAN : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether any representation has been received from the Harijans of Chettipunyam, Chingleput taluk for the assignment of lands; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir.

(*b*) Necessary action is being taken by the Revenue authorities to assign the lands to the Harijan applicants of the village.

*Tamil Typewriters*

*432 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) ஜில்லாக்களிலுள்ள சர்க்கார் காரியலாயங்களுக்கு எத்தனை தமிழ் டைப்ரைட்டிங் யந்திரங்கள் 1958-ம் வருஷத்தில் வாங்கப்படுவதற்காக ஆர்டர்கள் கொடுக்கப்பட்டன ?

(ஆ) எத்தனை டைப்ரைட்டிங் யந்திரங்கள் சப்ளை செய்யப்பட்டிருக்கின்றன ?

(இ) 1959-ம் வருஷத்தில் எத்தனை தமிழ் டைப்ரைட்டிங் யந்திரங்கள் வாங்கப்படுவதற்காக ஆர்டர்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன ?

THE HON. SRI V. RAMIAH : (அ) & (ஆ) During the financial year 1958–59, orders were placed for 600 Tamil Typewriters with standardised key board, out of which 100 have been supplied so far.

(இ) None, Sir, as it is too early to assess the requirements for 1959–60.

SRI P. G. MANICKAM : பாக்கியுள்ள டைப்ரைட்டிங் மெஷின்கள் எப்பொழுது வாங்கப்படும் என்று அறிய விரும்புகிறேன் ?

THE HON. SRI V. RAMIAH : : 1958–59-ல் 600-க்கு ஆர்டர் கொடுத்திருக்கிறோம். அதில் 100 வந்துவிட்டது, இன்னும் 500 வரவேண்டும்,

[17th February 1959

*Road facilities to Siruthalaikadu, Thiruthuraipoondi*

*433 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) திருத்துறைப்பூண்டி தாலுகா, சிறுத்தலைகாடு கிராம மீன்பிடி தொழிலாளர்களிடமிருந்து ரோடு வசதி கோரி சமீபத்தில் விண்ணப்பம் வந்திருக்கிறதா ?

(ஆ) அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

:SRI A. VEDARATHNAM : இந்தக் கிராமம் வேதாரண்யத்தில் இருக்கிற 150 சதுரமைல் விஸ்தீர்ணமுள்ள "ஸ்வாம்ப்-ன்" மத்தியில் இருப்பதால் கோடைகாலத்தில் கடல் ஜலமும், மழை காலத்தில் மழை ஜலமும் சேர்ந்து கொள்வதால் அங்குள்ள மக்கள் வெளியே வரமுடியாது ஒரு தீவில் இருப்பது போல் இருக்கிறார்கள். ஆகவே அவர்களுக்கு ரோடு வசதி செய்து கொடுக்க முன் வந்து அவர்களது கஷ்டங்கள் தீர்க்கப் படுமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : அப்படிப்பட்ட வசதி வேண்டுமென்று கோரி இதுவரையிலும் ஒரு விண்ணப்பமும் வரவில்லை. அப்படி வந்தால் கூடுமான வரையில் அதில் கவனம் செலுத்தலாம்.

*Appointment of more doctors and nurses in Government hospitals.*

* 434 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Revenue be pleased to state whether there is any proposal to appoint more doctors and nurses in Government hospitals with reference to the bed-strength therein?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

*Government Ranee's Hospital, Pudukottai.*

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் இடத்தில் இல்லாததால் கேள்வியும் பதிலும் சட்டசபை நடவடிக்கைகளில் அச்சிடப்படும்.

* 435 *Q.*—SRI V. ARUNACHALA THEVAR : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government propose to expand the Government Ranee's Hospital for Women and Children at Pudukottai;

(*b*) whether the Government have received a resolution from the Pudukottai Municipal Council requesting the Government to use the present Basic Training School building for the extension of this hospital; and

(*c*) if so, the action taken thereon?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) No, Sir.

(*c*) Does not arise.

17th February 1959]

*Water-supply and drainage schemss*

*436 Q.—SRI P. G. MANICKAM : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

இரண்டாவது ஐந்தாண்டு திட்டக் காலத்திலே ஒவ்வொரு வருஷத்திலும் எந்தெந்த முனிசிபாலிடிகளிலும், பஞ்சாயத்துப் போர்டுகளிலும் wa er-supply and drainage-களை எடுத்து நடத்தப்படவேண்டுமென்று 1947-ல் நியமிக்கப்பட்ட water-supply and drainage committee யால் தெரிவிக்கப்பட்டிருக்கின்றன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : The water supply and drainage committee did not make any recommendation in the matter.

*" Hard of Hearing Clinic "*

* 437 Q.—SRI T. S. RAMASWAMY PILLAI (on behalf of Sri M. Jagannathan) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) the steps taken to get the " Hard of Hearing Clinic " in the Government General Hospital, Madras, well equipped and well manned; and

(b) (i) the number of cases that have attended the clinic in 1957-58;

(ii) the number of cases for which fenestration was done in the above year; and

(iii) the number of cases for which surgical repair of drum was done in the same year?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) During the year 1958 the " Hard of Hearing Clinic " in the Government General Hospital, Madras had the following improvements :—

(i) A sound proof room has been constructed where the hearing is tested more accurately.

(ii) An operating microscope called ' Otoscope ' has been purchased and put into use.

(iii) A new audiometer has been ordered and is expected soon.

(iv) A post of Audiometrician has been sanctioned.

(v) A sectional library has been set up.

(b) 862, 12 and 21 respectively.

*Government Tuberculosis Sanatorium at Tambaram.*

* 438 Q.—SRI S. B. ADITYAN : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) how many patients are admitted on an average per month, in the Government Tuberculosis Sanatorium at Tambaram; and

(b) how many days, on an average a patient has to be on the waiting list before he gets admissions into the Sanatorium?

[17th February 1959

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) About 130.

(b) Average waiting period for various categories of patients at present is as follows :—

Men for admission in the general wards—6 months.

Women for admission in the general ward—5 months.

Children for admission in the children ward—4 months.

MR. SPEAKER : Next question.

(Sri K. Vinayakam rose . . .)

MR. SPEAKER : I think the hon. Member would have heard me saying that I would allow only one question by way of supplementary by the hon. Member who has put the original question.

SRI K. VINAYAKAM : But, suppose the hon. Member declines in my favour?

MR. SPEAKER : In that case you may put a supplementary question.

SRI K. VINAYAKAM : I am thankful to you, Sir. Is the Hon. Minister aware of the fact that in more cases than one, the admission cards are sent to the patients when a most all of them have left this world to join the majority in the other world?

THE HON. SRI M. A. MANICKAVELU : The hon. Member is not exactly correct. But, in some cases it is so. (Laughter).

*B.C.G. Vaccination*

* 439 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether the B.C.G. Vaccination Campaign is carried on in the State every year; and

(b) whether the Government are watching the effects on those persons B.C.G. vaccinated?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) Yes, Sir.

(b) Yes, Sir. Any complication due to B.C.G. vaccination brought to notice is attended to then and there. The Director-General of Health Services, New Delhi, sends now and then assessment teams to follow the B.C.G. vaccination cases for the purpose of assessing the duration of allergy produced by B.C.G vaccination.

SRI N. K. PALANISAMI : அமைச்சர் அவர்கள் ஒவ்வொரு வருஷமும் பி.ஸி.ஜி. ஊசி போடப்பட்டவர்கள் பரிசிலனை செய்யப் படுகிறார்கள் என்று சொன்னார்கள். கோயம்புத்தூர் ஜில்லாவிலும், நீலகிரி ஜில்லாவிலும் இம்மாதிரி பதினாயிரக்கணக்கான பேர்களுக்கு ஊசி போடப்பட்டிருக்கிறது. ஊசி போடுவதோடு சரி. ஆனால் அதற்குப் பிறகு எந்தவிதமான பரிசோதனையும் செய்வதில்லை என்பது அரசாங்கத்திற்கு தெரியுமா ? மூன்று வருடங்கள் தொடர்ந்து பரிசோதனை செய்தால்தான் அது வெற்றியா, தோல்வியோ என்று கூறமுடியும்.

**THE HON. SRI M. A. MANICKAVELU : I want notice, Sir.**

17th February 1959]

*Medical College for Tanjore district*

* 440 Q.—SRI M. D. THIAGARAJA PILLAI : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா :—

(அ) தஞ்சை ஜில்லாவில் வைத்தியக் கல்லூரி கட்டிடம் கட்ட மத்திய அரசாங்க கிராண்டுக்கு சென்னை அரசாங்கம் எழுதியிருக்கிறதா ?

(ஆ) எழுதியிருந்தால் எப்பொழுது எவ்வளவு தொகைக்கு ?

(இ) கல்லூரி கட்டிடம் ஆரம்பிப்பதற்கு மேற்கொண்டு என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

(ஈ) இந்த கட்டிடங்கள் கட்டுவதற்கு ஜில்லா போர்டாரால் சென்னை அரசாங்கத்திற்கு எவ்வளவு தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) Yes, on 30th April 1958, for Central assistance on the approved pattern.

(*c*) The Chief Engineer, Public Works Department (General), is drawing up plans and estimates for the construction of buildings.

(*d*) Rs. 30 lakhs.

SRI A. VEDARATHNAM : மத்திய அரசாங்கத்திலிருந்து இந்த ஆஸ்பத்தரிக்கு எவ்வளவு உதவி கிடைக்கிறது ? தஞ்சை ஜில்லா போர்டிலிருந்து எவ்வளவு நிதி இதற்காக ஒதுக்கியிருக்கிறார்கள் ?

THE HON. SRI M. A. MANICKAVELU: தஞ்சை ஜில்லாபோர்டிலிருந்து ஒதுக்கியதைப் பற்றி சொன்னேன். அவர்கள் ஒதுக்கியது, 30 லட்சம். மத்திய அரசாங்கத்திடம், " யூஷ்வல் பாட்டேர்ன் " பிரகாரம் கேட்டிருக்கிறோம். அதுபற்றிய விவரம் தெரியவில்லை. எவ்வளவு கொடுப்பார்கள், என்னென்னவென்று தெரியவில்லை.

MR. SPEAKER : Questions are over.

[Note.—An asterc (*) at the commencement of a speech indicates revision by the Member.]

## II. STATEMENT BY THE HON MINISTER FOR LOCAL ADMINISTRATION.

MR. SPEAKER : The Hon. Minister for Local Administration will now make a statement with reference to the answer given to Question No. 12 on the 5th February 1959.

* THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Mr. Speaker, in reply to starred question No. 12 by Sri K. Sattanatha Karayalar, I stated on 5th February 1959 that fishing in river estuaries and reservoirs are regulated by issue of licences and by mesh regulations by the Fisheries Department. Destructive and sweep types of nets are prohibited from operation according to the mesh restrictions. Small sized fry and other fingerlings are not allowed to be captured and if captured, they are requested to be released back into the water. It has subsequently been found that the question purports to the measures taken by the Government to safeguard the lives of the fishermen who fish in river estuaries during high tide. In this connection, it may be stated that the tide in river estuaries during high tide will be about 3 feet higher than at normal times and it is not difficult for the fishermen to negotiate it. Further, during high tide there will be increased catches from the river estuaries and, so far, no unhappy incidents to fishermen or to their

appliances have been reported to have occurred due to fishing operations. So, the question of preventing fishing in river estuaries during high tide does not arise.

MR. SPEAKER : The next item on the agenda is Government Bills.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I think there is a motion under rule 40 of the Assembly Rules.

MR. SPEAKER : Yes. But the hon. Member who has given notice of the same is absent. As nobody else can move it, I think we can take it up tomorrow. I think the Hon. Minister has no objection to it.

THE HON. SRI M. A. MANICKAVELU : The only thing is that the Minister will not be here tomorrow.

MR. SPEAKER : All right then. The hon. Member will miss the chance. But I cannot help it, because, nobody else can move it.

## III. GOVERNMENT BILL.

### THE MADRAS OPEN PLACES (PREVENTION OF DISFIGUREMENT) BILL, 1958 (L.C. BILL NO. 8 OF 1958).

10-10 p.m.

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : Mr. Speaker, I move—

"That the Madras Open Places (Prevention of Disfigurement) Bill, 1958 (L.C. Bill No. 8 of 1958) [a], as passed by the Council, be taken into consideration."

கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா முன்பு இந்த மன்றத்தில் கொண்டு வரப்பட்டு ஒரு பொறுக்குக் கமிட்டியின் பரிசிலனைக்கு விடப்பட்டது.

(Deputy Speaker in the Chair.)

அந்தப் பொறுக்குக் கமிட்டி ஒவ்வொரு பிரிவையும் நன்றாகப் பரிசிலனை செய்து சில திருத்தங்களை செய்திருக்கிறது. முக்கியமான திருத்தம் என்னவென்றால், மத சம்பந்தமான அபிப்பிராயங்களோ, அல்லது நடவடிக்கைகளோ, அல்லது சமூக சம்பந்தமான அபிப்பிராயங்களோ, அவைகளை மாற்றி அமைக்கவேண்டுமென்ற நல்லெண்ணத்தோடு இம்மாதிரி விளம்பரங்கள் அமைக்கப்பட்டால் அதற்கு விதி விலக்கு வேண்டும் என்பது தான். இதை கனம் அங்கத்தினர்கள் எல்லோரும் உணர்வார்கள்.

கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவின் முக்கிய நோக்கம் ஆட்சேபகரமான விளம்பரங்கள் நகரங்களிலே முக்கியமாக சுவர்களில் ஒட்டப்படுகின்றன. அவைகள் நகரங்களின் அழகை கெடுப்பதோடு, வேறு வகையிலும் ஆட்சேபகரமான விளம்பரங்களாக இருக்கின்றன சில. ஆட்சேபகரம் என்றால், பலாத்காரத்தை தூண்டக்கூடியவை, பிறர் மனதை புண்படுத்தக் கூடியவை, ஆபாசமானவை என்ற மூன்று பிரிவுகளாக பிரிக்கலாம். இம்மாதிரி விளம்பரங்களைப் போடுவது நகரத்தின் அழகை கெடுப்பதுமட்டுமல்ல, வேறு வகையிலும் அது நல்லது அல்ல என்பதை எல்லா அங்கத்தினர்களும் ஒப்புக் கொள்வார்கள். இதனால் விளம்பரம்

---

[a] Printed as Appendix V on pages 173-176 infra.

17th February 1959] [Sri M. Bhaktavatsalam]

செய்யபடுவது பாதிக்கப்படுமா, தவறான அபிப்பிராயங்கள், பிற்போக்கான அபிப்பிராயங்கள், கெட்ட அபிப்பிராயங்கள், கெட்ட பழக்க வழக்கங்கள் இவைகளையெல்லாம் மாற்றியமைக்கும் முயற்சி பாதிக்கப்படுமா என்று கேட்டால், அவ்வாறு எந்த விதத்திலும் பாதிக்கப்படாத வகையிலே தான் இந்த மசோதா அமைக்கப்பட்டிருக்கிறது.

பொறுக்கு கமிட்டியில் இருந்த சில அங்கத்தினர்கள்கூட இதற்கு மறுப்பு தெரிவிக்கிறார்கள். அவர்கள் இந்த மசோதாவே அவசியமில்லை, பொது ஜன அபிப்பிராயத்திற்கே இதை விட்டுவிடலாம், அது தானாகவே திருந்திவிடும் என்று சொல்லுகிறார்கள். தவறுதலான பழக்க வழக்கங்களை மாற்றுவதற்கு முடியாமல் போய்விடலாமே என்று சொல்லுகிறார்கள். அல்லது சினிமா போன்ற பல தொழில்கள் பாதிக்கப்படும் என்று சொல்லுகிறார்கள்.

(Mr. Speaker in the Chair.)

அத்தகைய அச்சம் ஏற்படுவதற்கு இடமே இல்லை. திருத்தப்பட்ட இந்த மசோதாவை நன்கு கவனிப்பவர்கள் அத்தகைய அச்சத்திற்கு இடமில்லை என்பதை நன்றாக உணர்வார்கள். இன்னும் சில அங்கத்தினர்கள் குறிப்பிட்டதுபோல் இது நீண்ட காலமாக இருக்கக்கூடிய ஒரு குறை. அந்தக் குறையை அகற்றக்கூடிய வகையிலே இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது. ஆபாசமான சுவர் ஒட்டிகளையும், ஆபாசமான விளம்பரங்களையும் தடுப்பதற்காகவே இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது. ஆபாசமான காட்சிகளை காணக்கூடிய வகையிலே சில விளம்பரங்கள் அமைக்கப்படுகின்றன. சினிமா படங்கள் சென்ஸார் செய்யப்பட்டு அவைகள் ஒழுங்காக இருந்தாலும்கூட, உள்ளே காண்பதைவிட ஆபாசமான வகையிலே சில சமயங்களில் விளம்பரங்கள் செய்யப்படுகின்றன. சில பத்திரிகைகளில்கூட சில சமயங்களில் உள்ளே வருவது ஒன்றாக இருக்கும், மேலே கொட்டை எழுத்துக்களில் போடுவது வேறாக இருக்கும் என்பதைக் கூட சில அங்கத்தினர்கள் சுட்டிக்காட்டினார்கள். உள்ளே சென்ஸார் செய்யப்பட்டு ஒழுங்காக இருந்தால்கூட, வெளியே வசீகரம் ஏற்பட்டுவிடும் என்ற குறுகிய நோக்கத்தோடு மிகவும் ஆட்சேபகரமான, ஆபாசமான முறையில் சில சமயங்களில் சில விளம்பரங்கள் சுமைக்கப்படுகின்றன. அம்மாதிரி விளம்பரங்கள் ஒட்டப்பட்டிருப்பதை நாம் கண்டிருக்கிறோம். இந்த இழுக்கை நாம் சீக்கிரமாக அகற்றவேண்டும் என்ற நோக்கத்தோடு இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது.

மற்றொன்று, கட்டிடங்களின் சொந்தக்காரர்களை கேட்காமல் விளம்பரங்கள் சுவர்களில் ஒட்டப்படுகின்றன. சொந்தக்காரர்கள் அனுமதி இல்லாமல் அவர்களுடைய கட்டிடங்களின் சுவர்களில் விளம்பரங்கள் ஒட்டுவது சரியல்ல. இப்படியெல்லாம் வரம்பு கட்டினால் விளம்பரம் செய்வது பாதிக்கப்படுமா என்று ஒரு அபிப்பிராயம் கூறப்பட்டது. இதற்காகத் தான் நகரங்களிலே முக்கியமான இடங்களில் எங்கே விளம்பரம் செய்ய வேண்டுமென்பதற்காக " ஹோர்டிங்களை " ஏற்பாடு செய்ய வேண்டும், நகர சபை சட்டத்தை திருத்தும்பொழுது அம்மாதிரி " ஹோர்டிங்களை " ஏற்பாடு செய்யவேண்டுமென்பதாக ஒரு பிரிவை அதில் சேர்க்கவேண்டுமென்ற யோசனை பொறுக்குக் கமிட்டியிலே தெரிவிக்கப்பட்டது. அதை அரசாங்கம் ஏற்றுக்கொள்ளும். மற்றொன்று கூறிக்கொள்ள விரும்புகிறேன். அரசியல் துறையிலே கூட சில அபிப்பிராயங்கள் தெரிவிக்கவேண்டும், பிரசாரம் செய்யவேண்டுமென்றால், இந்த மசோதா குறுக்கே நிற்கும் என்ற அச்சத்திற்கு கொஞ்சம் கூட ஆதாரம் இல்லை என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன். இந்த மசோதாவில் எது ஆட்சேபகரமானது என்று குறிப்பிடப்பட்டிருக்கிறதோ, அந்த வகையிலே விளம்பரம் செய்கிறவர்கள் வியாபாரத்தை ஒட்டியிருந்தாலும், கலையை ஒட்டியிருந்தாலும், அரசியலை ஒட்டியிருந்தாலும், அவர்களுடைய லட்சியம்கூட நிறைவேறாது. அவர்களுடைய லட்சியம்கூட பாதிக்கப்படும். அதை நாளடைவிலே அனுபவத்திலேயே அவர்கள் தெரிந்துகொள்ளுவார்கள். இன்று ஏதோ வசீகரம்

அளிக்கின்றது. வசீகரிக்கும் என்ற நோக்கத்தோடு ஒரு ஆபாசமான விளம்பரத்தை செய்தால், விளம்பரம் செய்தவர்களே அவ்வாறு விளம்பரம் செய்வது எவ்வித பலனையும் அளிக்காது என்பதை நாளடைவிலே உணர்வார்கள். ஆகவே, இந்த சீரிய நோக்கத்தோடு கொண்டுவரப்பட்டிருக்கும் இந்த மசோதாவை கனம் அங்கத்தினர்கள் ஆதரிப்பார்கள் என்று நம்பி, என்னுடைய வார்த்தைகளை முடித்துக்கொள்ளுகிறேன்.

MR. SPEAKER : Motion moved—

" That the Madras Open Places (Prevention of Disfigurement) Bill, 1958 (L.C. Bill No. 8 of 1958), as passed by the Council, be taken into consideration."

Sri S. M. Annamalai has given notice of an amendment.

SRI S. M. ANNAMALAI : I am not moving it.

MR. SPEAKER : All right. I was about to rule it out of order.

* SRI A. GOVINDASAMY : சட்டமன்றத் தலைவர் அவர்களே, இந்த மசோதாவை நான் வன்மையாக எதிர்க்கிறேன். இந்த மசோதா அவசியம் இல்லாத ஒரு மசோதா என்று நான் கருதுகிறேன். நகரங்களின் அழகு கெடாமல் பார்த்துக் கொள்ளவேண்டும் என்ற நோக்கத்தோடு தனியார் தீர்ப்பில் இருந்து மேல் சபையிலே கனம் அங்கத்தினர் பாலசுப்பிரமணிய அய்யர் அவர்கள் ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தார்கள். அந்த மசோதாவைக் கொண்டு வந்த நேரத்தில் அவர்களுடைய நோக்கம் நகரங்களின் அழகு கெடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும், சினிமா விளம்பரங்கள் பெரியதாக இருக்கிற காரணத்தினாலே அதைப் பார்ப்பதற்கு ஜனக் கூட்டம் அதிகமாகசேர்ந்து, அதனால் வண்டிப் போக்குவரத்து நடைபடுகிறது. இதைத் தடுப்பதற்கு ஒரு சட்டம் தேவை என்பதுதான். ஆனால், அரசாங்கம் அதை துணையாகக் கொண்டு, வேறு சில ஷரத்துக்களையும் சேர்த்து இங்கே ஒரு மசோதாவைக் கொண்டு வந்திருக்கிறார்கள். அவர்கள் கொண்டு வந்த நோக்கம் வேறு, அரசாங்கம் அதை பயன்படுத்திக்கொண்டு, அதை சாக்காக வைத்துக்கொண்டு, இன்னும் சில ஷரத்துக்களை இம்மாதிரியாக சேர்த்து இங்கே இந்த மசோதாவைக் கொண்டு வந்திருக்கிறார்கள். நகரங்களின் அழகு கெடாமல் பார்த்துக்கொள்ள வேண்டுமென்றால், நாடு சுதந்திரம் அடைந்து 10, 11 ஆண்டுகள் கழிந்தும், அதற்காக அரசாங்கம் எடுத்துக்கொண்ட முயற்சி என்ன ? ஸ்தல ஸ்தாபனம், பஞ்சாயத்து போர்டு, அல்லது சென்னை போன்ற பெரிய நகர சபைகளில் விளம்பரம் ஒட்டுவதற்கு ஆங்காங்கு (ஹோர்டிங்குகள்) ஏற்பாடுகள் செய்கின்றார்களா என்றால், எங்கேயோ ஒரு சில இடங்களில் அம்மாதிரி பலகைகள் இருக்கின்றனவே தவிர, தேவையான அளவுக்கு, அவசியமான அளவுக்கு, போதுமான அளவுக்கு ஏற்படுத்தப்படவில்லை. இந்த நிலைமைக்குக் காரணம், அதற்கான குற்றத்தையும் அரசாங்கத்தின் மீதுதான் சுமத்துகிறேன். ஸ்தல ஸ்தாபனங்களுக்கு இதனாலே வருமானம் வரக்கூடும். அம்மாதிரியாக விளம்பரங்களை ஒட்டுவதற்கு " ஹோர்டிங்குகளை " அமைத்திருக்க வேண்டும். அதைத்தான் செய்திருக்க வேண்டும். இந்த மசோதா முதலிலே இந்தச் சபையில் பிரேரேபித்த நேரத்தில், கவுன்சிலில் பிரேரேபித்த நேரத்தில் இதிலே ஒரு பிரிவு சேர்க்கப்பட்டிருந்தது. அதாவது, ஸ்தல ஸ்தாபனங்கள் " ஹோர்டிங்குகளை " ஏற்பாடு செய்யும்படியாக கேட்டுக்கொள்ளப்படும் என்பது தான் அந்த ஷரத்து. அந்த ஷரத்தை இப்பொழுது பொறுக்குக் கமிட்டியில் எடுத்துவிட்டார்கள். ஸ்தல ஸ்தாபன சட்டத்தை திருத்தும் பொழுது அதில் இம்மாதிரி ஒரு ஷரத்தை வேண்டிய இடத்தில் சேர்த்துக் கொள்ளலாம் என்று இப்பொழுது சொல்லுகிறார்கள். அம்மாதிரி அந்தப் பிரிவை ஒதுக்கி வைத்துவிட்டு, இந்த மசோதாவை இப்பொழுது அவசரம் அவசரமாகக் கொண்டு வரவேண்டிய காரணம் என்னவென்று புரிய

17th February 1959] [Sri A. Govindasamy]

வில்லை. நகரங்களின் அழகு கெடாமல் பார்த்துக்கொள்ள வேண்டுமென்றால், ஸ்தல ஸ்தாபனங்கள் "ஹோர்டிங்குகளை" தகுந்த இடங்களில் ஏற்பாடு செய்வதற்கு அரசாங்கம் வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளவேண்டும். அப்படிச் செய்வார்களேயானால், நகரங்களின் அழகு கெடாமல் பார்த்துக்கொள்ள உள்ளபடியே அவர்கள் வழிவகைகள் செய்ததாகக் கருதப்படும். நகரங்களின் அழகை பாதுகாக்க வேண்டுமென்று சொல்லிக்கொண்டு, பிரசாரத்தையும், விடுதலை உணர்ச்சியையும் தடுக்கும் தீதான காரியத்தை இந்த மசோதா செய்கிறது. நோக்கம் அது அல்ல என்று சொன்னாலும், ஜனநாயக உரிமையை பாதுகாக்காத விளைவில் தான் அது கொண்டு போய் விடும் என்ற காரணத்தினால், இந்த மசோதா தேவையில்லை, அவசியமில்லை, தீதானது, தீமை பயக்கக்கூடியது என்று நான் கருதுகிறேன்.

அதிலும் சிறப்பாக எதிர்க்கட்சிக்காரர்கள் செய்யும் நல்ல பிரச்சாரங்களை தடுக்கின்ற வகையில்தான் இந்த மசோதா அமைந்திருக்கிறது. ஆபாசத்தை ஒழிக்கவோ அல்லது கெட்ட எண்ணங்களை தூண்டும் பிரச்சாரத்தை ஒழிக்கவோ இது பயன்படுமா என்கிற கேள்வியை எழுப்புகின்ற நேரத்தில் அமைச்சர் அவர்கள் கூறுகிறார்கள், நாங்கள் நல்ல பிரச்சாரங்களை எல்லாம் தடுப்பதற்காக இதை கொண்டு வரவில்லை, ஆபாசமான விளம்பரங்களை தடுப்பதற்காகத்தான் இதைக் கொண்டு வந்திருக்கிறோம் என்று சொல்லுகிறார்கள். ஆனால் இம்மாதிரிப் பட்ட சுலோகங்கள், இம்மாதிரிப்பட்ட பிரச்சாரங்கள் எல்லாம் மற்ற நாடுகளில் அனுமதிக்கப்படவில்லையா என்று கேட்கிறேன். மற்ற நாடுகளில் எல்லாம் சுவரொட்டிகளுக்கு எல்லாம் அனுமதி கொடுக்கின்றபோது இந்த அரசாங்கம் மாத்திரம் இம்மாதிரிப்பட்ட விஷயங்களில் தலையிடுவானேன். அவசர அவசரமாக இந்த சட்டத்தைக் கொண்டு வருவானேன் என்பது தான் தெரியவில்லை. எல்லா காரியங்களுக்கும் அகில இந்திய ரீதியாக பேசும் இவர்கள் அகில இந்தியாவின் சபையாக இருக்கக்கூடிய பார்லிமெண்டில் கூட இத்தகைய ஒரு சட்டத்தை நிறைவேற்றியிருக்கிறார்களா என்று பார்த்தால் அங்கேயும் கிடையாது, மற்ற நாடுகளிலும் கிடையாது, இந்த நிலையில் இந்த அரசாங்கம் மாத்திரம் இந்த சட்டத்தைக் கொண்டு வருவானேன்? ஆனால் இந்த சட்டத்தில் குறிப்பிட்டிருக்கின்ற பிரிவுகளின் பிரகாரம், பலாத்காரம், அநாகரீகமான பிரச்சாரங்கள் முதலியவைகளை தடுப்பதற்கும் ஆபாசமான விளம்பரங்களை தடுப்பதற்கும் இந்த சட்டம் கொண்டு வரப்படுவதாக சொல்லப்படுகிறது. ஆனால் ஏற்கனவே இந்த அரசாங்கத்தின் கையில் இவைகளை எல்லாம் தடுப்பதற்கு இந்தியன் பீனல் கோடின்படி நல்ல பாதுகாப்பை வைத்துக்கொண்டுதான் இருக்கிறார்கள். இந்தியன் பீனல் கோடிலிருக்கும் 295-எ பிரிவின் பிரகாரம் இவைகளை எல்லாம் தடுக்க முடியும். மதத் துவேஷங்களை பரப்புவதை • தடுப்பதற்கு இந்தியன் பீனல் கோடில் இருக்கின்ற 295-எ என்கிற பிரிவே போதுமானது. அதோடு வயலன்ஸ், அதாவது பலாத்காரம், அதே போன்று மிஸ்சீப் காரியங்களை பரப்புவதை தடுப்பதற்கும் 425-வது பிரிவின்படி நடவடிக்கை எடுக்கலாம் அதே போன்றுதான் ஆட்சேபகரமான காரியங்களை தடுப்பதற்கு, 292-வது பிரகாரம் நடவடிக்கை எடுக்கலாம் என்றிருக்கிறது. இந்த சட்டங்களையெல்லாம் கையில் வைத்துக்கொண்டு இப்போது ஏன் இந்த சட்டத்தைக் கொண்டு வருகிறார்கள் என்பதுதான் தெரியவில்லை. இன்றைய தினம் உண்மையிலே, பத்திரிகையில் வருகின்ற விளம்பரங்கள், கார்ட்டூன்கள் இவைகளை எல்லாம் இந்த அரசாங்கம் அனுமதிக்கின்றது. ஆனால் அவ்விதம் பிரசுரிக்கப்படும் கார்ட்டூன்களை வெட்டி எடுத்து வேறு பிரதி எடுத்து அச்சிட்டு சுவரொட்டிகளாக ஒட்டினால்மட்டும் குற்றமாகிவிடுகிறது. இதை அரசாங்கம் மறுத்துவிட முடியாது. நமது போலீஸ் அமைச்சர் பக்தவத்சலம் அவர்களை போலிஸ்காரர் வேஷத்தில் போட்டு சில பத்திரிகைகள் கார்ட்டூன்களாக வருகின்ற நேரத்தில் அதைப் பார்க்கின்ற அமைச்சர் அவர்கள் அல்லது அமைச்சர் அவர்களது ஆட்கள் புண்படுகின்ற நேரத்தில் இதன் பேரில் நடவடிக்கை எடுப்பதற்கு ஒன்றும் கிடையாது. ஆனால் அதை சுவற்றில் ஒட்டினால் மாத்திரம் குற்றமாக கருதப்படுகிறது. இந்த சட்டத்தின் மூலம்

10-20 a.m.

மதவாதிகளுக்கு பாதுகாப்பு அளிக்கிறது. அதே நேரத்தில் மதத்தின் பேரில் நம்பிக்கையில்லாத மக்கள் பெரும்பகுதியினர் நம் நாட்டில் இருக்கிறார்கள். அவர்களுக்கு இந்த சட்டத்தின் மூலம் அரசாங்கம் என்ன பாதுகாப்பு கொடுத்திருக்கின்றது என்று கேட்க விரும்புகிறேன். இன்றைக்கு மதத்தைத் துவேஷிக்கக்கூடியவர்கள் வெட்டுவேன், குத்துவேன் என்றெல்லாம் சுவரொட்டிகள் மூலமாகவும் சுலோகங்கள் மூலமாகவும் பிரச்சாரம் செய்யப்பட்டதற்கு எல்லாம் அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்தது என்று கேட்கிறேன். நேர்மாறாக அவர்களுக்கு தகுந்த பாதுகாப்புதான் கொடுத்தது. இந்தச் சட்டத்தை பொது நோக்கத்தோடுதான் நிறைவேற்றியிருக்கிறோம் என்று வேண்டுமானால் சொல்லலாம். ஆனால், இதில் சொல்லப்பட்டிருக்கும் பிரிவுகளை பார்க்கும்போது இதன் மூலம் ஒரு சாராருக்குப் பாதுகாப்பு அளிப்பதற்காகத்தான் இச்சட்டம் கொண்டு வரப்பட்டிருக்கிறதே தவிர வேறு ஒன்றுமில்லை என்பதை நான் மிக வன்மையாக கண்டித்து சொல்ல வேண்டிய நிலையில் இருக்கிறேன். இந்த நிலைமையில் வியாபாரத் துறையிலும் சரி, கலைத் துறையிலும் சரி, சினிமாத் துறையிலும் சரி, சரியான முறையில் விளம்பரங்களை செய்வதற்கு முடியவில்லையானால் நிச்சயமாக அதிலுள்ள முன்னேற்றம் தடைபடும் என்பதில் சந்தேகமில்லை. இன்றைக்கு சினிமா மீது யாருக்கும் வெறுப்பு கிடையாது, அதிலும் ஆளும் கட்சிக்கு வெறுப்பே இருக்க முடியாது என்பதற்கு அவர்களது சமீப கால நிகழ்ச்சிகளே சான்றாகும். இன்றைக்கு ஆளும் கட்சியாக இருக்கக்கூடிய காங்கிரஸ், அகில இந்திய காங்கிரஸ் கூட்டங்களுக்குகூட அதிகமான கூட்டம் வருவதற்காக சினிமாக்காரர்களைதான் அழைத்து வருகிறார்கள். இதற்கும் விளம்பரம் இல்லாமல் முடியாது. இதில் யாரும் ஆத்திரப்படுவதற்கு இடமில்லை. காங்கிரஸ் கூட்டங்களுக்கு எல்லாம் அதிகமாக கூட்டம் கூடுவதற்காக சினிமாக்காரர்களை வைத்துத்தான் நிகழ்ச்சிகளை நடத்துகிறார்கள். (இச்சமயத்தில் ஸ்ரீ எஸ். லாஸர் அவர்கள் தமது இருப்பிடத்தில் இருந்து எழுந்திருந்தார்). கனம் லாஸர் அவர்கள் கொஞ்சம் பொறுமையோடு இருந்து கேட்பார்களானால் என்னால் சொல்ல முடியும், சமீபத்தில் நடந்த தமிழ்நாட்டு காங்கிரஸ் மகாநாட்டுக்கு சிவாஜி கணேசன் போன்ற பிரபல சினிமாக்காரர்களை கொண்டு வந்தார்கள். இதற்காக பெரிய பெரிய போஸ்டர்கள் எல்லாம் ஒட்டப்பட்டிருந்ததை நாம் எல்லோரும் அறிவோம். இதற்கெல்லாம் விளம்பரங்கள் இல்லாமல் இருந்தால் அதிகமாக கூட்டம் வந்திருக்க முடியாது.

**Sri S. LAZAR** : Sir on a point of order நாம் இப்போது விவாதிக்கக்கூடிய மசோதாவில் சினிமாவைப்பற்றி எதுவுமே கிடையாது. அப்படி இருக்கும்போது கனம் அங்கத்தினர் அவர்கள் இந்த மசோதா சினிமாக்காரர்களை மிகவும் தாக்குகின்றதுபோலவும், இவர்கள் அதற்காக பரிந்து பேசுவது போலவும் பேசுகின்றார்கள்........ will be in order because we are on a different Bill which has nothing to do with cinemas or film exhibitions.

**Mr. SPEAKER** : I think Mr. Govindasamy apprehends that this Bill may affect putting up of very big advertisements with regard to cinemas. That is his fear and he is entitled to express it. It is not out of order, though it may be irrelevant.

**Sri A. GOVINDASAMY** : தலைவர் அவர்களே, உங்களுடைய விளக்கத்திற்காக நான் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். இந்த மசோதாவினால் கலைத்துறைக்கோ அல்லது சினிமாத் துறைக்கோ எந்த விதமான பாதகமும் ஏற்பட்டு விடாது என்று அமைச்சர் அவர்கள் கருத்தை தெரிவித்திருந்தார்கள். அதைக் குறித்துத்தான் நான் சொன்னேன். சமீபத்தில் தமிழ்நாடு காங்கிரஸ் மகாநாட்டில் சினிமா நட்சத்திரங்களான சிவாஜி கணேசன் போன்றவர்களை கொண்டு பங்கு கொள்ள செய்துதான் அங்கு மகாநாடு கூட்ட முடிந்தது. ஆகவே இந்த மசோதாவினால் ஆளும் கட்சிக்குக்கூட பாதகம் ஏற்படும் என்பதை

17th February 1959] [Sri A. Govindasamy]

தெரிவிக்க விரும்புகிறேன். இன்றைக்கு வெளிநாட்டிலிருந்து பெரிய தலைவர்கள் எல்லாம் நம் நாட்டுக்கு வருகிருர்கள். சமீபத்தில் "டிட்டோ" போன்றவர்கள், எடின்பரோ மன்னர் போன்றவர்கள் நம் நாட்டுக்கு வரும்போது அவர்களின் வருகையை பெரிய விளம்பரங்கள் மூலம் தான் மக்களுக்கு அறிவிக்க முடிந்தது. ஆகவே இம்மாதிரிப்பட்ட சந்தர்ப்பங் களில் விளம்பரங்கள் தேவை என்பதை அரசாங்கம் மறுக்க முடியாது. ஆகவே இம்மாதிரிப்பட்ட சந்தர்ப்பங்களில் பொதுக்கூட்டம் நடத்துவது என்ருல் எதிர்க்கட்சிக்காரர்களுக்கு மட்டுமல்ல ஆளும் கட்சியினருக்கும் பெரிய பாதகமாகத்தான் வந்து சேரும் என்பதை குறிப்பிட்டுக் காட்ட விரும்புகிறேன். அதிலும் குறிப்பாக எதிர்கட்சிக்காரர்களுக்கு இதனுல் பெரிய பாதகம் ஏற்படும் என்பதை அரசாங்கம் உண்மையிலேயே உணர்ந்து தான் இந்த சட்டத்தைக் கொண்டு வந்திருக்கிருர்கள். இந்த பொதுக் கூட்டங்களை நடத்துவதற்கு என்ன முறையை கையாளுவது? துண்டு பிரசுரங்கள், நோட்டீஸ் மூலம் விளம்பரம் செய்வது என்ருல் எல்லா மக்களுக்கும் அறிவிக்க முடியாது, அதற்கு வேண்டிய வசதியும் இருக் காது. ஆகவே சுவரொட்டிகள் (வால் போஸ்டர்) மூலம்தான் விளம்பரம் செய்யமுடியும். இம்மாதிரிப்பட்ட 500 சுவரொட்டிகள் ஒட்ட வேண்டு மென்ருல் அதற்கெல்லாம் அனுமதி பெற்றுத்தான் ஒட்ட வேண்டிய நிலையில் இருக்கிறது. ஒரு சுவரொட்டிக்கு ஒரு ரூபாய் என்று சுவர் சொந்தக்காரர் கேட்பதாக இருந்தால் 500 ரூபாய் கொடுத்துதான் இந்த சுவரொட்டிகளை ஒட்ட முடியும். இது முடியாத காரியமாகும். மேலும் இந்த சட்டம் ஆபாசமான விளம்பரங்களை தடுப்பதற்கு ஆட்சேபகரமான விளம்பரங்களை தடுப்பதற்கும் வேண்டிதான் கொண்டு வரப்பட்டிருக்கிறது என்று சொல்லுகிருர்கள். இம்மாதிரி ஆட்சேபகரமான விளம்பரங்கள், ஆபாசமான விளம்பரங்கள் செய்பவர்களுக்கு கடுமையான தண்டனை இதன் மூலம் விதிப்பதற்கு வகை செய்யப்பட்டிருக்கிறது. தண்டனை 1,000 ரூபாய் என்று விதிக்கப்பட்டிருக்கிறது. அதோடு ஒரு வருட சிறை தண்டனையும் கொடுப்பதற்கும் வகை செய்யப்பட்டிருக்கிறது. இன்றைக்கு ஆபாசம் என்று அரசாங்கம் எதை கருதுகிறது என்று தெரியவில்லை. அந்தவிதத்தில் பார்த்தால் இன்றைக்கு பல வீடுகளிலும் கிருஷ்ண லீலா படம் வைக்கப் பட்டிருக்கிறது. அதில் இருக்கின்ற காட்சிகள் எல்லாம் ஆபாசமில்லையா? அதை பார்க்கின்ற வாலிபர்கள், யுவதிகள் கெட்டுவிடமாட்டார்களா என்று கேட்கிறேன். மத துவேஷம் செய்யக்கூடிய விளம்பரங்கள் செய்யக்கூடாது என்று சொல்லுகின்ற நோத்தில் "கண்ணப்பர்" சினிமா பற்றிய படத்தில் சிவலிங்கத்தைக்காட்டி அதன் மேல் கால் வைத்து மிதிப்பது போன்ற காட்சி காட்டப்படுகிறது. இவையெல்லாம் மத துவேஷம் போன்று கருதப்படலாகாதா என்று கேட்க விரும்புகிறேன். ஆகவே இதில் போடப்பட்டிருக்கிற படம் என்ன என்பதை பார்க்காமல் யார் போட்டிருக்கிருர்கள் என்பதை பார்த்துதான் நடவடிக்கை எடுப்பார் களோ என்று சந்தேகபடவேண்டியிருக்கிறது. மேலும் இந்தக் குற் றத்தை செய்பவர்களுக்கு தண்டனை விதிக்கப்படும் என்று சொல்லப்பட் டிருக்கிறது. இவ்விதம் கூறப்படுவதில் இந்த குற்றத்தை யார் உண்மை யாக செய்திருந்தாலும் சுவரொட்டிகள் முதலியவைகளை ஒட்டுகின்றவர் களுக்கு தண்டனை கொடுக்கவும் இந்த ஷரத்தில் இடம் வைத்திருக்கிருர் கள். யாரோ செய்கிற குற்றத்திற்காக அவர்களுக்குத் தண்டனை கொடுக் கிருர்கள். அந்தச் சுவர் லைசென்ஸ் பெற்ற சுவரா இல்லையா என்று தெரியாமல் கூலிக்காரர்களும், சிறுவர்களும் அதிலே ஒட்டிவிட்டால் அவர் களுக்குக் கடுமையான தண்டனை. இப்படித் தெரியாமல் ஒட்டிவிட்டால், அது எந்தக் கட்சிக் கூட்டம், எந்தக் கட்சிக்காரர்கள் செய்திருக்கிருர்கள் என்று அவர்களுக்கும் தண்டனை கொடுக்க இடமிருக்கிறது. இப்படியில் லாமல் இருப்பதற்கு என்ன பாதுகாப்பு இருக்கிறது என்று பார்க்கும் போது இந்தச் சட்டம் தேவையில்லை—அவசியமில்லை—என்று கூறவிரும்பு கிறேன்.

10-30 a.m.

"ஒழிக" என்று சொன்னுல் குற்றம் என்று கொண்டு "அறியாமை ஒழிக, அறிவு வளர்க" என்று சொல்லும்போது "ஒழிக" என்று வரு

கிறது என்று அவர்கள் மேல் கேஸ் போட்டு, கோர்ட்டுக்குப் போகும்போது அங்கே திறமையான வழக்கறிஞர்களை வைத்து, வாதாடித் தான் அந்தக் குற்றத்திலிருந்து தப்பித்துக்கொள்ளக் கூடிய நிலைமை ஏற்படும். இங்கே அமைச்சர் அவர்கள் சொல்லுகிறார்கள், இதனால் பிரசாரமோ, விளம்பரமோ பாதிக்காது என்று. இங்கே அந்த மாதிரி விவாதித்தாலும் ஒவ்வொரு கோர்ட்டுக்கும் அமைச்சர் அவர்கள் சாட்சியாக உடன் வரமுடியுமா ? கொடுத்திருக்கக் கூடிய விதி விலக்கைப் பார்த்தாலும், அமைச்சர் அவர்கள் சொல்லுகிற சமாதானத்தைப் பார்த்தாலும், வழக்குத் தொடருகின்றவர்களுடைய மனப்பான்மையைப் பொறுத்துத்தான் இது இருக்கும் இந்த நிலைமையிலே இந்தச் சட்டம் தேவையில்லை என்றுதான் நான் சொல்லுகிறேன்.

ஆபாசமான பழக்கங்களைத் தடுத்து மக்கள் மனதில் மாற்றத்தைச் செய்ய பிரசாரம் செய்வதற்கு வழிவகைகள் செய்யக்கூடும். ஆனால் அவைகளைச் செய்ய அரசாங்கம் தயாராயில்லை. அவைகளின் மீது கவனம் செலுத்தாது, இத்தகைய ஒரு சட்டத்தை யாரையோ ஒடுக்க வேண்டும் என்ற எண்ணத்தோடு கொண்டு வந்திருக்கிறார்கள். இன்றைக்குச் சுவரிலே "ஸ்லோகன்" கள் எழுதுகிறார்கள். பெருத்த அளவில் பிரசாரத்திற்கு உபயோகப்படக்கூடியது சுவரிலே "ஸ்லோகன்கள்" எழுதுவதாகும். புத்தகம் படிக்காதவர்கள் சுவற்றிலே இருப்பதை மற்றவர்கள் பார்த்து, அவர்களிடமிருந்து கேட்டு அதனுடைய கருத்தை புரிந்துகொண்டு தங்கள் மனதை மாற்றிக்கொள்ள வசதியுள்ளதாக இருக்கிறது.

பட்டாளத்தைத் தூண்டிவிடக் கூடிய நிலையிலோ அல்லது போலீஸ்காரர்களைத் தூண்டிவிடக்கூடிய நிலையிலோ இருந்தால் அதற்கும் தண்டனை இருக்கிறது இந்தச் சட்டத்திலே. பட்டாளத்திலே ஆட்கள் சேர வேண்டாம், பட்டாளத்திற்குப் பணம் கொடுக்கவேண்டாம் என்று சொன்னவர்கள் காங்கிரஸ்காரர்கள். யாராவது பட்டாளத்தையோ, போலீஸ்காரர்களையோ தூண்டி விடுவார்களா ? இதற்குப் பாதுகாப்புக் கொடுக்க வேண்டுமென்று போட்டிருப்பதானது, அவர்களுடைய பழங்கால சரித்திரம்தான் இதற்கு இடம் கொடுத்திருக்கிறது என்று இங்கே நான் வலியுறுத்திக் கூறாமல் இருக்க முடியாது.

இந்தியாவிலிருக்கிற ஒரு பகுதியார் இன்னொரு பகுதியார் மீது கோபத்தை உண்டாக்கக் கூடிய முறையில்—ஆத்திரத்தை மூட்டக் கூடிய முறையில்—இருக்கக்கூடாது என்று ஒரு ஷரத்து இருக்கிறது. "வடநாட்டுச் சுரண்டல் ஒழிக" என்று சொல்லும்போது, வட நாட்டுச் சுரண்டல் தான் ஒழிய வேண்டுமென்று சொல்லப்படுகிறதே தவிர, வடநாட்டுக்காரர்களே ஒழிய வேண்டுமென்று சொல்லப்படுவதல்ல. அதையும் வடநாட்டுக்காரர்கள் ஒழிய வேண்டுமென்று சொல்கிறார்கள் என்று நினைத்து—கோபத்தை தூண்டுகிறார்கள் என்று நினைத்து—அவர்கள் மீது நடவடிக்கை எடுத்து, வழக்கு தொடரக் கூடும். அங்கேயும் நல்ல—சிறந்த—வழக்கறிஞர்களை வைத்து—அவர்களின் துணை கொண்டு—வட நாட்டுச் சுரண்டலைத்தான் ஒழிக்கவேண்டுமென்று சொன்னோமே தவிர, வட நாட்டுக்காரர்களை ஒழிக்க வேண்டுமென்று சொல்லவில்லை என்று நிரூபித்து தப்பித்துக்கொண்டு வர நேரிடும். வட நாட்டுச் சுரண்டலை இது அனுமதிக்கிறதா என்று கேட்கிறேன். இதற்கெல்லாம் பாதுகாப்பு கொடுக்காத நிலையில், எதையோ மனதில் வைத்துக் கொண்டு—மதத்தை துவேஷிக்கிறார்கள்—மதத்தில் இருக்கிற ஆபாசத்தை எடுத்துச் சொல்லுகிறார்கள்—அதைத் தடுக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு, "வட நாடு, தென்னாடு" என்று பேசுகிறார்கள், அதைத் தடுக்க வேண்டும் என்ற நிலையிலே இந்தச் சட்டம் வருகிறது என்று அஞ்சுகிறேன். மதவாதிகளின் மனது புண்படக்கூடாது என்று இந்தச் சட்டம் கொண்டுவரப்படுகிறது. நான் சொல்லுகிறேன், ஒரு போஸ்டரில் "குழந்தைக்கு பாலில்லை, தயிரில்லை, தேனில்லை—பாலையும், தேனையும், தயிரையும் பாழாக்குவானேன்" என்று போட்டால், அபிஷேகம் செய்வதை மனதில் கொண்டு மதவாதிகள் செய்வதைக் கண்டிக்கிறான் என்று அதன் காரணமாக அவன் மீது நடவடிக்கை எடுத்து அவனுக்குத்

தண்டனை. குழந்தைக்குப் பாலில்லை, தயிரில்லை, மருந்துக்குக்கூட தேன் இல்லை என்று இருக்கும்போது ஏராளமாக வீண் செலவு செய்வதை—மூடப்பழக்கத்தில் நம்பிக்கை வைத்துச் செய்வதை—இந்த ரேஷனலிஸ்டிக் வியூஸ் உள்ளவர்கள் பிரசாரம் செய்வதற்குத் தடையாக இருக்கக்கூடாது என்று நான் கண்டிக்கிறேன். ஒரு கரண்டி எண்ணைக்கு வசதியில்லாத நேரத்தில், டின் டின்னாக குடம் குடமாக—எண்ணையையும், நெய்யையும் போட்டு எறிக்கிறீர்களே, குழந்தையின் தலைக்குத் தடவக்கூட எண்ணை யில்லாதபோது எண்ணையையும், நெய்யையும் எறிப்பானேன் என்று கேட்டால், திருவண்ணாமலையை மனதில் வைத்துக்கொண்டு தான் இம்மாதிரி எழுதியிருக்கிறார்கள் என்று அவர்கள் மீது நடவடிக்கை சட்டம் உறுதுணையாக இருக்கிறதேயல்லாது, மூடநம்பிக்கையை அகற்றவேண்டுமென்று சொல்லிப் பிரசாரத்தில் ஈடுபட்டவர்களுக்கு இந்தச் சட்டம் எந்த வழியில் வசதி செய்து கொடுத்திருக்கிறது என்று கேட்கிறேன்.

அரசாங்கம் எடுத்துக் கொண்டு நடத்தும் எல்லா திட்டங்களுக்கும் விளம்பரம் தேவைப்படுகிறது. எல்லாவற்றிற்கும் அரசாங்கம்............

MR. SPEAKER : The hon. Member has already taken more than fifteen minutes. He is only repeating what he has said.

SRI A. GOVINDASAMY : I want five minutes more. I am on a different point now.

நான் இன்னும் சில நிமிடங்களில் முடித்துவிடுகிறேன். அரசாங்கப் விளம்பரத்திற்கென்றே ஒரு இலாகாவை வைத்திருக்கிறார்கள். அரசாங்கப் ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றுகிறோம் என்று படம் போடுகிறார்கள். எங்கே என்ன நடந்தாலும் அதற்குச் சில போஸ்டர்களைப் போடுகிறார்கள். கைத்தறி வாரமாக இருந்தாலும், சிறு சேமிப்பு நிதியாக இருந்தாலும், அதற்குச் சினிமாக்காரர்களின் துணை—தயவு—தேவையாக இருக்கிறது. அவர்கள் மனது புண்படுமாகையால், பகுத்தறிவுப் பிரசாரத்திற்கு இது தடையாக இருக்குமாதலால், எதிர்க் கட்சிகளை ஒடுக்குவதாக இருக்கும் என்ற காரணத்தினால் இந்தச் சட்டத்தைக் கைவிடவேண்டும்—இது தேவையில்லை—என்று கூறி நான் முடித்துக் கொள்கிறேன்.

* SRI T. SAMPATH : Mr. Speaker, I welcome this Bill There has been a long-felt need for an enactment of this nature. Disfigurement of public places, public buildings, schools, temple walls, etc., by writing slogans and objectionable and obscene matters has become quite common. These writings have reached very undesirable proportions in recent years. Particularly, boys and girls of impressionable age are spoiled by such advertisements. Indecent and scurrilous writings in public places and roads and on private buildings have been resorted to very freely. Some of these are intended for blackmail purposes alone. Objectionable advertisements and slogans and writings intended to wound the religious feelings of the people have tremendously increased. They incite class hatred and communal hatred. Such acts have sometimes led to very unpleasant consequences. These acts are considered as anti-social acts in Western countries and very heavy penalties have been provided for such offences. I am glad that the Government have taken up this question at least now and have come forward to put down such acts by means of this legislation. My Friend, Mr. Govindaswamy in his minute of dissent has stated that the existing provisions in the Indian Penal Code—Sections 292, 295-A and 425—are quite adequate. With great respect, I wish to say that

I differ from him. The existing provisions in the Indian Penal Code are not adequate for realising the objects of the Bill. The scope and provisions of this Bill are quite different. He also apprehended that this Bill was intended to stifle political parties. It is not so because Explanation 'A' says: 'Expressing disapprobation or criticism of any law or of any policy or administrative action of the Government with a view to obtain its alteration or redress by lawful means' shall not be deemed to be objectionable.

10-40 a.m. As regards the complaint that this Bill will hit hard the cinema advertisements and business people, I do not think there is any force in such a complaint. As long as the advertisement is not objectionable and as long as the propaganda of any political party is not intended for the purpose of inciting any person to resort to violence or sabotage, the provisions contained in the Bill would not apply to such propaganda.

I am glad, Sir, that the Bill covers effigies also. The Select Committee has amended the provision. We know that effigies of top leaders are sometimes made and are openly dragged in the streets and burnt even. Hon. Members know what an atrocious act it is. I am therefore glad that the Government have made provision to prevent such occurrence.

Then, I come to the preamble portion. I welcome the changes made therein. The words 'objectionable or unauthorized' have been added. That is the answer to the point made by my hon. Friend Sri A. Govindasamy. The changes are quite necessary.

Coming to the explanation under sub-clause (*b*), scope is given to express or criticise or bring in social reform or justice but at the same time it says that an advertisement would not be deemed to be objectionable merely because it criticises any social or religious practices without malicious intention and with an honest view to promote social or religious reform or social justice. According to me I feel it would be very difficult to judge the intention of the offender. It may give a loophole, which the offending person is likely to take advantage of. This in my view would take away by one hand what is given by the other hand, particularly the words 'malicious intention' would enable the offenders to escape. Likewise in the definition clause, under item (iv) the words 'deliberately intended' would cause some difficulty. It would be difficult to make a distinction between honest intention and deliberate intention. It would be very difficult to prove deliberate intention. So it would be better if the word 'deliberately' is deleted. In the same clause which covers other advertisement there is no provision for posters and advertisements relating to inciting communal hatred and communal feeling. I would in this connection like to draw the attention of the Hon. Minister to an amendment that I have given notice of namely; after the word 'or', include the words, 'creates communal hatred.'

I am glad, Sir, that the offences committed under this Act are made cognisable offences and I am sure it will have a very salutary effect. With these remarks I support the Bill.

17th February 1959]

**Sri V. K. KRISHNAMURTHY:** அவைத் தலைவர் அவர்களே, மாமன்றத்தில் விளங்குகின்ற இம் மசோதாவை முழு மனதுடன் ஆதரித்து வரவேற்று, விரைவில் சமுதாயம் பலனடைவதற்கு ஆவன செய்யுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

சிறந்த நம் தமிழ்ச் சமுதாயம், சிறந்த முறையிலிருப்பதிலிருந்து சரிந்திருப்பதற்குக் காரணம் விளம்பரங்களின் பெயரால் வர்க்கப் பகைமை இனப் பகைமை. மொழிப் பகைமை, மதப் பகைமை இன்னும் ஆபாசங்கள், ஒழுங்கீனங்கள் இன்னபிறவெல்லாம் மலைபோல் வளர்ந்து கொண்டிருக்கின்றன. தலைசிறந்த தமிழகத்தை எண்ணிப் பார்க்கும்பொழுது அறப்பழங் காலத்தில் எந்தத் துறவிகள், எந்த ஞானிகள் எவைகளைக் கண்டித்தார்களோ அவைகள் அத்தனையும் இந்த நாட்டில் விளங்குகின்றன.

தமிழகத்திற்கு சாத்திரத்தைப் படைத்த திருமூலர் :

" பார்க்கின்ற மாதரைப் பாராதகன்று போய்
ஓர்க்கின்ற உள்ளம் உருக அழல்மூட்டி
பார்க்கின்ற கண்ணை பாழ்பட மூலத்தே
சேர்க்கின்ற யோகி சிவயோகி தானே "

என்று குறிப்பிடுகிறார். அந்த முறையிலே பார்க்கும்போது எந்த ஒழுங்கீனத்திற்கு ஆபாசத்திற்கு சமுதாயத்தை அழைத்துக்கொண்டு செல்வதற்கு—கதைகள், உரையாடல்கள், கலையின் பெயரால், நாகரீகத்தின் பெயரால் முன்னேற்றத்தின் பெயரால், விளம்பரங்கள் வளர்ந்துகொண்டிருக்கின்றன. இத்தகைய கொடுமைகளால் சமுதாயமே சரிந்துவிடும் சமுதாயமே அழிந்துவிடும் என்று வருத்தத்துடன் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

தமிழ்நாடு தலைசிறந்த நாடு. அறம்—ஒழுக்கம் இருக்கவேண்டும் என்று தொல்காப்பியர் காலம் முதல் இக்கால ஞானிகள் வரை கூறியிருத்தல் வெள்ளிடைமலை. இந்நாடு சிறந்த முறையில் இருக்கவேண்டுமென்றால் அறம்—கற்பு—ஒழுக்கம் முதலியவைகளைக் கொண்டு விளங்கின் தலை சிறந்த நாடாக இருக்கும். கலையின் பெயரால், மொழியின் பெயரால், நாகரீகத்தின் பெயரால் தமிழ் மக்கள் சிறந்தவர்கள்—உயர்ந்தவர்கள் என்றாலும்கூட மனிதன் மனிதப் பண்புடன் வாழும் நிலையில் நம் தமிழ் சமுதாயம் இல்லை.

தமிழகத்திற்குத் தோத்திரத்தைப் படைத்த மாணிக்கவாசகர் :

" கச்சற நிமிர்ந்து, கதிர்த்து, முன்ப ணைத்து
எய்த்திடை வருந்த எழுந்து, புடை பரந்து
ஈர்கிடைபோகா இளமுலை மாதர்தம்
கூர்த்த நயனக் கொள்ளையில் பிழைத்தும் "

என்று கூறி ஈராயிரமாண்டுகளுக்கு முன்னால் சமுதாயத்தை வேசியர்—விலைமாதர்—பரத்தையர்—பதியிலார் ஒழுக்கக் குறைவுடைய நடத்தையால் கெடுத்ததைக் கூறி அக் கொடுமையினின்று சமுதாயம் விலகி மீண்டும் நல்ல சமுதாயமாகப் படைக்கப்பட வேண்டுமென்று அவர் கண்ணீர் சிந்தியிருக்கிறார்.

அண்மையில் தோன்றிய இராமலிங்க அடிகளார் சமுதாயம் சரிந்து சிதைந்து—ஒழுக்கமின்மையால் தாழ்ந்த நிலைக்கு சென்றிருந்ததை உற்று நோக்கி உள்ளம் வெதும்பி

" ......மெய்யுறுக் காட்ட வெருவி வெண்துகிலால்
மெய்யெலாம் ஐயகோ மறைத்தேன் "

என்று கூறியுள்ளார். ஆணைப் பிறந்த அடிகளார் தன் உடலைக் காட்டக் கூடாதென்று நினைத்து வெள்ளாடை உடுத்தினார். சமுதாயம் எந்த அளவில் வீழ்ச்சியுற்றிருந்திருத்தல் வேண்டுமென்பதைக் கூறத் தேவையில்லை. என்றாலும் இன்றைய நிலையைப் பார்க்கும்போது கதையின் பெயரால்—கலையின் பெயரால்—உரையாடல் பெயரால் இன்னபிற எல்லா

வற்றின் பெயரால் தமிழ்நாட்டுப் பண்பு பாழாகியிருக்கிறது ; தமிழ்நாடு கறைபடுத்தப்பட்டிருக்கிறது ; மதம் பற்றியவர்கள் மதம் பற்ருத காரணத்தால், சீர்திருத்தப் போர்வையில் மதத்திற்கு ஊறு செய்யும் வகையில் ஏற்றவாறு திறுத்திக் கூறுமியல்புடையோருக்களவே இல்லை. தலை சிறந்த சமுதாயத்தை அமைக்க வேண்டும் என்ற இம்மசோதாவை வேறுபட்ட கட்சியோ—மாறுபட்ட கட்சியோ—கூறுபட்ட கட்சியோ—எப்படி இருப்பினும் ஒன்றுபட்டு பிரிவினை இன்றி ஆதரித்து வரவேற்பதைக் கைவிட்டு எதிர்க்க முன்வந்திருப்பதை எண்ணும்பொழுது இல்லாத ஒன்றுக்குத் திரித்துக் கூறி தன் எண்ணத்திற்கு ஏற்றவாறு நிறம்பூசும் இயல்பை ஷேக்ஸ்பியர் மிகச் சிறந்த முறையிலே சித்தரிக்கிருர் :

**" Men may construe things after their fashion clean from the purpose of the things themselves".**

எத்தகைய நல்ல திட்டம் வந்தாலும் அதை அறவே விடுத்துப் புறம்பான முறையில் திரித்து பகுத்தறிவின் பெயரால் பகரும் இயல்பு கனம் திரு. கோவிந்தசாமி அவர்களிடமிருத்தல் கண்கூடு. சேக்கிழார் படைத்த பேரிலக்கியத்தை இழிவுபடுத்த இயம்பியது வருந்துதற்குரியது. தலைசிறந்த கண்ணப்பர் ஒரு கண் இழந்து அடுத்த கண்ணைப் பிடுங்க முனையும் பொழுது இட அடையாளத்திற்கு காலைத் தவிர பிறிதொன்றையும் வைக்க முடியாததால் இதை தனக்கேற்றவாறு திரித்துக் கூறியதைப் பார்க்கையில் இவர் எந்த நூலைப் பயின்ருர் என்று கேட்க விரும்புகின்றேன். இன்மை வாதத்தைப் பரப்ப கண் இழந்த உயரிய நல்ல நிலையை சமயத்திற்கு விரோதம் என்று கூறுகிருர். இருண்டவர்கள் மருண்ட கொள்கையைக் கூறும்பொழுது சமுதாயத்தை வாழவைக்கும் இறைநெறியைக் குறைவாகப் பேசுவது சைவத்திற்கு இழுக்காகும். மிண்டிய மாயாவாதமென்னும் சண்டமாருதத்தை அரசியலில் பிணைத்து பாவக் கடலைத் தோற்றுவித்து அறங்கடந்த செயலைப் புரிந்து வருவதைத் தொடர்பில்லாத இம் மசோதாவுடன் பிணைத்து பொருந்தா முறையில் கூறுமியல்புக்கு வருந்தாமலிருக்கவில்லை ; அவர் எந்த அளவு மதத்தை எதிர்த்துப் பேசவேண்டுமோ அந்த அளவுக்குத் தொடர்பின்றியே பகர்ந்துள்ளார். அவர் கூற்றுக்கும் மசோதாவிற்கும் தொடர்பில்லை என்ருலுங் கூட தான் எதை நினைக்கிருரோ அதைத் திருத்திக் கூறுகிருர். சமுதாயத்தைச் சீர்குலைப்பதற்காக, சீர்திருத்தத்தின் பெயரால் மதத்தை வன்மையாக எதிர்த்தார் என்று வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

தமிழ் நாட்டின் தரம் இப்பொழுது தாழ்ந்து விட்டது. தமிழ் நாட்டின் உயர்வு ஊறுபட்டிருக்கிறது ; தமிழ் நாட்டின் பண்பு புண்பட்டிருக்கிறது ; தமிழ் நாட்டின் கலை கறைபட்டிருக்கிறது ; தமிழ் நாட்டின் நாகரீகம் நலிவுற்றிருக்கிறது ; இளைஞர்கள் காவியங்களைப் படிக்கும்போது பொருளுணர்ந்த பிறகு மனதில் பதிகிறது ; ஆனல் ஓவியத்தைப் பார்த்த மாத்திரத்தில், ஆராய்ச்சி இல்லாமல் உடனே திடீரென்று ஓவியத்தின் தன்மை எதைக் குறிக்கிறதோ அது திடீரென்று பற்றிவிடும். ஆகையால் ஓவியம் அன்பையும்—அமைதியையும்—அருளையும் ஊட்டக் கூடிய முறையில் படைக்கப்பட்டிருக்குமானல் இந்த மசோதா வந்திருக்க வேண்டியதில்லை. சமுதாயம் சிறந்த முறையில் இருக்கவேண்டும் என்பதற்காகவே இம் மசோதா வந்திருக்கிறதென்று கூறுவதோடல்லாமல் அரசியல் கட்சிகளை அடக்கவோ—ஒடுக்கவோ வரவில்லை.

கருவி கரணங்களை ஒடுக்கி புலனை அடக்கி கட்டமைந்த ஒழுக்கத்திற்கு அடிகோலும் இறைநெறிக் கொள்கைகளை விளக்கும் தெய்வ நூல்களைப் பழிக்கவே சீர்திருத்தத்தின் பெயரால்—பகுத்தறிவின் பெயரால்—முன்னேற்றத்தின் பெயரால்—கலையின் பெயரால் விளங்கும் விளம்பரங்களை—உரையாடல்களை—ஆபாசக் கற்பனைகளை அறவே அகற்றி மாசு எய்திய சமுதாயத்தை மாண்புற வைக்கவே இம்மசோதா வந்துள்ளது. எனையோரும் இம் மசோதாவை ஆதரிக்குமாறு மிகவும் பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

17th February 1959] [Sri V. K. Krishnamurthy]

விளம்பரத்தின் பெயரால் வருமானம் கிடைக்குமென்று கனம் திரு. கோவிந்தசாமி அவர்கள் கூறியது மிகவும் வியப்பாக இருக்கிறது. அற நூலாம் திருக்குறள் பிறந்த தமிழகத்தில் அழக்கொண்ட பொருளும்; அறங்கடந்த பொருளும் தேவையில்லை என்று தெரிவித்துக்கொண்டு காலங் கடத்தாமல் கடிதில் இம் மசோதாவைச் சட்டமாக்கி கட்டமைந்த ஒழுக்கத்தை சமுதாயத்தில் பரப்பி சிறந்த சமுதாயத்தைப் படைக்க விரைவில் ஆவன புரியுமாறு அமைச்சரைப் பணிவன்புடன் கேட்டுக் கொண்டு இம்மசோதாவை வரவேற்று ஆதரிக்கிறேன். வணக்கம்.

**Sri V. K. KOTHANDARAMAN:** கனம் சபாநாயகர் அவர்களே, விகாரப்படுத்துவதை தடுப்பதற்கு வேண்டி கொண்டு வரப்பட்டிருக்கும் இந்த மசோதாவை, மசோதா என்று சொல்லக்கூடிய விகார மசோதாவை, நான் மனதார வரவேற்காமல் எதிர்த்து பேசக்கூடிய நிலைமையில் இருக்கிறேன். காரணம் மதாபிமானிகளை புண்படுத்துவதாகவும், அப்படிப் புண்படுத்துவதைத் தடுக்க வேண்டுமென்கின்ற பெயரால் இது போன்ற பலாத்காரத்தை தூண்டக்கூடிய விளம்பரங்கள் வருமேயானால் அதைத் தடுப்பதற்காகவும் வேண்டி இப்படிப்பட்ட ஒரு மசோதா, மசோதா என்கிற பெயரால் கொண்டு வரப்பட்டிருக்கிறது. ஆபாசமாக, விகாரமான விளம்பரங்களைத் தடுப்பதற்காகவும் இதைக் கொண்டு வருவதாகச் சொல்லுகிறார்கள். இதைக் கொண்டு வருகிற நேரத்தில் இதற்கு முன்னதாக அவைகளைத் தடுப்பதற்கு சட்டம் இல்லையா என்பதைப் பார்க்கும்போது பல சட்டங்கள் இருக்கின்றன. இது போன்ற சட்டங்கள் இருக்கின்ற காரணத்தால்தான் கட்டிடங்களின் பேரில் "Stick No Bills" என்று ஒட்டுகிறார்கள். அப்படி ஒட்டப்பட்டிருக்கிற சுவர்களில் எந்த விதமான விளம்பரமும் செய்யப்படுவது இல்லை. போஸ்டர்களும் ஒட்டப்படுவது இல்லை. ஆகவே இது போன்ற நடவடிக்கைகள் எடுப்பதற்கு சட்டங்கள் இருந்தபோதிலும்கூட இந்த நேரத்தில் இதைப்போன்ற தனியான ஒரு சட்டத்தைக் கொண்டு வருவதன் நோக்கம் என்ன என்பதைப்பற்றி என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. அப்படி புரிந்துகொள்ள முடியாத நிலையிலும் இருக்கிறேன்.

10 50 a.m.

இது போன்ற சட்டங்கள் கொண்டு வருவதற்கு இதற்கு முன்பு இது போன்ற சட்டங்கள் கொண்டு வரவேண்டும் என்று ஏதாவது கிளர்ச்சிகள் நடந்தனவா அல்லது ஏதாவது மகஜர்கள் வந்தனவா அல்லது ஏதாவது லெட்டர்கள் வந்தனவா என்று பார்த்தால் எந்த விதமான மகஜர்களும் லெட்டர்களும் வந்ததாகத் தெரியவில்லை. கிளர்ச்சிகள் நடந்ததாகவும் தெரியவில்லை. இன்றைக்கு மக்கள் பலவிதமான சட்டங்களைக் கொண்டு வரவேண்டும் என்று சொல்லுகிறார்கள். அப்படிப்பட்ட சட்டங்களை இன்னும் கொண்டு வரவில்லை. அவற்றிற்கெல்லாம் நடவடிக்கை எடுத்துக்கொண்டதாகத் தெரியவில்லை. உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டியவைகளுக்கு எந்த விதமான நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளப்பட்டதாகத் தெரியவில்லை. ஆனால் மத சம்பந்தமானவைகளை தடுக்க புண்படுத்தக்கூடிய அளவில் இருக்கக் கூடியவைகளை தடுக்க இந்தச் சட்டம் கொண்டு வரப்பட்டிருப்பதாகச் சொல்லப் படுகிறது. ஆனால் நான் என்ன நினைக்கிறேன் என்றால் இந்தச் சட்டத்தின் மூலமாகத்தான் ஜாதி மத பூசல்களையும், சண்டைகளையும் மேலும் அதிகப்படுத்தக்கூடிய அளவில் போகும் என்றே நினைக்கிறேன். அமைதியாக இருக்கக்கூடிய இந்த நேரத்தில் பலாத்காரத்தைக் தூண்டக்கூடிய அளவில் இந்தச் சட்டம் கொண்டு வரப்படுகிறது என்று கருத வேண்டியதாக இருக்கிறது. பலாத்காரத்தில் ஈடுபடக்கூடிய அளவில் சர்க்காரே நடவடிக்கைகளில் ஈடுபடப்போகிறார்களா? அந்த அடிப்படையில் அதற்கு முன் கூட்டியே தடுத்துக்கொள்வதற்காக இது போன்ற சட்டத்தைக் கொண்டு வருகிறார்களா என்பதை அறிய விரும்புகிறேன். அந்த முறையில்தான் நினைக்க வேண்டியதாக இருக்கிறது.

விளம்பரம் இல்லாமல் எந்த வியாபாரமும் நடைபெறாது. விளம்பரம் இல்லாமல் எந்த அரசியல் கட்சியும் நடைபெறாது. மதறாஸ் சிட்டியில்

பார்த்தால் அரசியல் கட்சிகள் பெரிய வால் போஸ்டர்களை ஒட்டியிருப்பதைப் பார்க்கலாம். மந்திரிகள் பெயரால் போடப்பட்ட பல விளம்பரங்களையும் பார்க்கலாம். மந்திரிகள் கலந்து கொள்ளக்கூடிய பல கூட்டங்களை விளம்பரப்படுத்தக்கூடிய போஸ்டர்களையும் பார்க்கலாம். அதே போன்று ஒவ்வொரு அரசியல் கட்சிக்கும் விளம்பரங்கள் தேவையாக இருக்கின்றன. இது நம் எல்லோருக்கும் தெரிந்த விஷயம். அதனால் இது போன்ற சட்டங்களைக் கொண்டு வருவதானது அவர்களுக்கு இருக்கக்கூடிய உரிமையை பிடுங்குவதாக ஆகிறது. அரசியல் கட்சிகளை ஒடுக்குவதற்கு எடுத்துக்கொள்ளக்கூடிய முதல் நடவடிக்கையாக இருக்கிறது. அரசியல் கட்சிகள் போதுமான அளவில் விளம்பரங்களை செய்யக் கூடாது, போதுமான கூட்டங்கள் கூட்டி அவர்களுடைய கருத்துக்களை சொல்லக்கூடாது என்பதற்காக கொண்டு வரப்படுவதாக இருக்கிறது. இன்றைக்கு பேச்சு உரிமை, எழுத்து உரிமை எல்லாம் கொடுக்கப்பட்டிருப்பதை இதன் மூலம் எடுத்து விடுவதாக ஆகிறது. ரேஷன் சிஸ்டம் என்ற அடிப்படையில் மூன்று மணி நேரம்தான் பேச வேண்டும், அதற்கு மேல் பேசக்கூடாது என்கிற நிலைமையிலும், ஒலிபெருக்கி வைப்பதற்கு அனுமதி வேண்டும் என்றும், ஏற்கெனவே அதை இலவசமாக உபயோகப்படுத்தலாம் என்று இருந்தது, அதற்குக் கட்டணம் இப்பொழுது கட்ட வேண்டும் என்றும் சொல்லப்படுகிறது. மக்களுடைய உரிமையை முழுக்க முழுக்கப் பரிக்காவிட்டாலும் அரைகுறையாகப் பரிக்கப்பட்டு வருகிறது. முன்பு இலவசமாக ஒலி பெருக்கி வைத்துக்கொள்ள வேண்டும் என்று இருந்தது இப்பொழுது காசு கொடுத்து லைசென்சு வாங்கி வைக்க வேண்டும் என்று இருக்கிறது. எங்கு அதிகாரிகள் இருக்கிறார்களோ அங்கு அவர்களைத் தேடிச் சென்று லைசென்சு வாங்கி வரவேண்டியதாக இருக்கிறது. ஆகவே இந்த குறைகளைப் பார்த்தால் அரசியல் கட்சிகள் வளரக் கூடாது என்கிற நோக்கத்துடன் பல காரியங்களைச் செய்து வருவதாகத் தோன்றுகிறது. ஆகவே இது போன்ற ஒரு சட்டத்தைக் கொண்டு வருவது என்று சொன்னால் அரசியல் கட்சிகளை ஒடுக்குவதற்காக இது முதல் ரூபத்தில் வருகிறதோ என்று நினைக்க வேண்டியதாக இருக்கிறது. இப்படியே போய்க்கொண்டிருந்தால் அதன் முடிவு எதில் கொண்டு போய் விடும் என்று தெரியவில்லை. இதற்கு ஒரு பழமொழி கூட சொல்லுவார்கள். "தோலைக்கடிச்சு, துருத்தியைக் கடிச்சு, ஆட்டைக்கடிச்சு, மாட்டைக் கடிச்சு மனிதனைக் கடித்தது" என்று சொல்வதுபோல் இதன் முடிவு எதில் கொண்டு போய் விடும் என்பது தெரியவில்லை. இப்படி படிப்படியாகப் போவதற்கு இந்தச் சட்டம் முதல் படியாக இருக்குமோ என்று அச்சப்பட வேண்டியதாக இருக்கிறது. கடைசியில் அரசியல் கட்சிகள் சட்ட விரோதமானது என்று சொல்வதற்கு ஒரு நிலைமை ஏற்பட்டு விடுமோ என்று கூட தோன்றுகிறது. ஆகவே இந்த நேரத்தில் இது போன்ற ஒரு சட்டத்தைக் கொண்டு வரவேண்டிய அவசியமே கிடையாது. ஏற்கெனவே இருக்கக்கூடிய சட்டங்கள் மூலமாக, இந்தச் சட்டத்தினால் எடுக்கலாம் என்ற நடவடிக்கைகளை எடுப்பதற்கு வசதி இருக்கிறது. அதனால் இந்தச் சட்டம் கொண்டு வருவதை நான் எதிர்க்கிறேன் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்படிப்பட்ட ஒரு சட்டம் வேண்டும் என்று பொது மக்கள் கிளர்ச்சி செய்யவில்லை மகஜர்கள் அனுப்பவில்லை, லெட்டர்கள் எழுதப்படவில்லை. எந்தெந்த சட்டங்களைக் கொண்டு வரவேண்டும் என்று மக்கள் கிளர்ச்சி செய்கிறார்களோ, மகஜர் அனுப்புகிறார்களோ லெட்டர்கள் எழுதுகிறார்களோ அப்படிப்பட்ட சட்டங்களைத்தான் கொண்டு வரவேண்டும். அதற்கான நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமேயொழிய இப்படிப்பட்ட சட்டத்தைக் கொண்டு வரவேண்டாம் என்பதையும் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

**SRIMATHI T. N. ANANDANAYAKI :** கனம் சபாநாயகர் அவர்களே, சென்னையிலுள்ள வெளியிடங்களை விகாரப்படுத்துவதைத் தடுக்க இந்தச் சட்டத்தைக் கொண்டு வந்துள்ளோம். இதைப்பற்றி பேசும்போது எதிர் 'கட்சி அங்கத்தினர் ஒருவர் " அது ஒரு விகார மசோதா " என்று

17th February 1959] [Srimathi T. N. Anandanayaki]

குறிப்பிட்டார். இது விகார மசோதா அல்ல. விகாரத்தைச் செய்கிறவர் களை விகாரமான விளம்பரங்களை ஒட்டுகிறவர்களைத் தடுப்பதற்கு கொண்டு வந்துள்ள மசோதா இது. இந்த மசோதாவை சரியாக படித்துப் பார்த் திருந்தால் இது நன்ருகத் தெரிந்திருக்கும், புரிந்திருக்கும். இந்தச் சட்டத்தைக் கொண்டு வருவதனுல் பேச்சு உரிமையையும் எழுத்து உரி மையையும் தடுக்கப்படுகிறது என்றும் குறிப்பிட்டார். இந்த உலகத்தி லுள்ள ஜனநாயக நாடுகளில் நம்முடைய நாடு எவ்வளவோ முன்னடைந்து நிற்கிறது. மக்களுக்கு எவ்வளவு உரிமை கொடுக்கப்படவேண்டுமோ, அவ்வளவு உரிமைகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அந்த உரிமைகளை யார் பயன்படுத்திக்கொள்ளுகிருர்களோ அவர்கள் நல்ல முறையில் பயன்படுத்திக்கொள்ளலாம். ஆனுல் நாங்கள் பத்து வருஷங்கள் பார்த் துக்கொண்டிருந்தோம். கொடுக்கப்பட்ட உரிமைகளை நல்ல முறையில் பயன்படுத்தப்படுகிறதா என்று. நல்ல மக்கள் கொடுக்கப்பட்ட உரிமைகளை நல்ல முறையில் பயன்படுத்திக்கொள்ளுவார்கள். நாகரீகமான மக்கள் கொடுக் கப்பட்ட உரிமைகளை நல்ல முறையில் பயன்படுத்திக்கொள்ளுவார்கள். அப்படி பயன்படுத்திக்கொள்ளவில்லையானுல்தான் இப்படிப்பட்ட சட்டங் களைக் கொண்டுவர வேண்டியதாக இருக்கிறது. அவர்களுக்குக் கொடுக்கப் பட்ட உரிமைகளை சரியானபடி பயன்படுத்திக்கொண்டிருந்தால் இப்படிப் பட்ட சட்டங்கள் வந்திருக்காது. கொடுக்கப்பட்ட உரிமைகளை ஒழுங்கான முறையில் பயன்படுத்திக்கொள்ளாமல் இருந்ததின் காரணத்தினுல்தான் இந்தச் சட்டத்தைக் கொண்டுவர வேண்டியதாக இருக்கிறது. இப்படிப் பட்ட சட்டத்தைக் கொண்டுவந்தால் நாகரீகத்தை நல்ல முறையில் காப் பாற்ற முடியும். அந்தக் காரணத்தினுல்தான் இந்த மசோதாவைக் கொண்டுவந்திருக்கிருர்கள் அரசாங்கத்தார்.

நாகரீகத்திற்கு விளக்கம் கொடுத்த பல அறிஞர்கள், பல பெரியவர் கள் எல்லோரும் என்ன சொல்லியிருக்கிருர்கள் என்ருல் பிறரைப் புண்படுத்தாமல் இருக்க எதை எதைச் செய்யவேண்டுமோ அதுதான் நாகரீகத் தின் செயல் என்று கூறினுர்கள். அதை ஆங்கிலத்தில் கூட சொல்லு வார்கள்.

" A gentleman is one who does not inflict pain on others " என்று கூறினுர்கள். ஒரு நாகரிக மனிதன் என்ருல் மற்றவனை எந்த வகையிலும் நோக வைக்கக் கூடாது. அவன்தான் நாகரீக மனிதன் என்று கருதப் படும். வள்ளுவனுடைய வாக்கைப் பார்த்தாலும் என்னசொல்லியிருக்கிருர் என்ருல்,

> " பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
> நாகரிகம் வேண்டு பவர் ",

என்று கூறியிருக்கிருர். எந்த துறையில் எந்த முறையில் எந்த வகை யில் புண்படுத்தாமல் நடந்துகொள்ள வேண்டும் என்று சொல்லியிருக்கிருர். விளம்பரம் செய்யும்போது எவ்வளவோ உணர்ச்சி வசப்பட்டு பேசுகிருர் கள். அவர்களை இப்பொழுது கண்டிக்க முடியாது. நல்ல முறையில், நியாயமான முறையில் நடந்துகொண்டால் அவர்களை அரசாங்கம் தண்டிக் காது. நியாயமான முறையில் விளம்பரங்கள் செய்தாலும் அரசாங்கம் எந்த விதமான தண்டனையும் கொடுக்காது. சட்டபூர்வமாக நடந்துகொண்டால் எந்த விதமான தண்டனையும் கிடையாது என்பது சட்டத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறது. சட்டத்திற்குப் புறம்பாக நடந்துகொள்ளுகிறவர் களை கண்டிப்பாக தண்டிக்க வேண்டியதுதான். ஒழுங்கான முறையில் நடந்துகொண்டால் அவர்களுக்கு வேண்டிய உரிமைகள் கொடுக்கப்படும். அதற்கு வேண்டிய ஷரத்தும் அந்தச் சட்டத்தில் போடப்பட்டிருக்கிறது. ஒன்று அவர்களுக்கு இது புரியாமல் இருந்திருக்கலாம். அல்லது புரிந்து கொண்டிருந்தும் அதைச் சொல்லாமல் இருந்திருக்கலாம். புரிந்துகொண் டிருந்தாலும் அந்த எண்ணத்தை வெளியில் காட்டிக்கொள்ளாமல் இருந்திருக்கலாம். எப்படிப்பட்ட உரிமை கொடுக்கப்படும் என்பது இந்தச் சட்டத்திலேயே அளிக்கப்பட்டிருக்கிறது. இரண்டாவது ஷரத்து எக்ஸ்ப்ளனேஷன் முதலாவது பிரிவைப் பார்த்தால் அது நன்ருகத் தெரியும்.

11-00 a.m.

அந்த முறையிலே கொடுக்கப்பட்ட உரிமையை பாழாக்கக் கூடிய வகையில் " நாலடியார்கள் " தோன்ற ஆரம்பித்துவிட்டார்கள். நம்முடைய தமிழகத்தில் நாலடியார் நூலில் " ஆலும் வேலும் பல்லுக்குறுதி நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி " என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் சுவர்களிலே இப்பொழுது எழுதப்படும் நாலடிகளால் சொல்லுக்கு உறுதி ஏற்படாது. எவ்வளவுதான் அரசாங்கத்தை இந்த " நாலடியார்கள் " கீழ்த்தரமாகத் தாக்கினாலும் கூட, மக்கள் கவலைப்படுவதில்லை. மக்கள் அவர்களைப் பற்றி நன்றாகத் தெரிந்துகொண்டார்கள். ஆபாச உணர்ச்சிகளை வெளிப்படுத்த சுவர்களைப் பயன்படுத்தி வருகிறார்கள். பழைய " நாலடியார் " நல்லதைக் கொடுத்தது. இந்த " நாலடியார் " களோ, மக்களை நாசப்படுத்துகிறது. நரம்பு இல்லாத நாக்கு எதை வேண்டுமானாலும் எழுதும். யார் நம்மைக் கேட்கப்போவது என்ற காரணத்தினால் அவர்கள் இஷ்டப்படி எழுதிவருகிறார்கள். கேட்கப் பயந்து கொண்டிருந்த காரணத்தினால்தான் கவலைப்படாமல் எழுதினார்கள். நம் நாட்டைச் சுற்றிப் பார்க்க வெளி நாடுகளிலிருந்து வருபவர்கள்—ஏன் நம் நாட்டிலேயே இருக்கக் கூடிய நல்லவர்கள் அதைப் பார்க்க நேரிட்டால் நம்முடைய நாட்டுப் பண்பைப் பற்றி என்ன நினைப்பார்கள். இதைப் பற்றிப் பல கோடி மகஜர்கள், பல மனுக்கள் அரசாங்கத்திடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. வீட்டை அழகாகச் சுண்ணம்பு அடித்து வைத்திருந்தால் இந்த " நாலடியார்கள் " சுவற்றிலே எழுதிவிட்டுப் போய்விடுகிறார்கள். வேறு எதிலும் எழுதினால் கலைந்துவிடும் என்று கருதி, கலைத்தாலும் போகாமல் இருக்க வேண்டும் என்பதற்காகத் தாரினால் எழுதுகிறார்கள். பொதுவாக இளைய பிள்ளைகள்தான் இதைச் செய்கிறார்கள். சில அரசியல் கட்சிக்காரர்கள் இந்த மாதிரி இளைஞர்களைத் தூண்டிவிடுகிறார்கள். இந்த இளைய பிள்ளைகளை நல்ல பாதையில் நடத்துவது நம்முடைய பொறுப்பு. இந்தச் சுவர் சுலோகங்களை எழுதுபவர்கள் படித்தவர்களாக இருப்பதில்லை. பெரியவர்கள் எழுதித் தருகின்ற வாசகத்தை இவர்கள் சுவற்றிலே எழுதுகிறார்கள். சுலோகத்தின் கருத்து என்னவென்றே புரியாது. ஆகவே இளைஞர்களை நல்ல பாதையில் நடத்த இந்தச் சட்டம் மிகவும் துணை புரியும். இந்தச் சட்டம் மிகவும் போற்றத்தக்கது. பல்லாயிரம் ரூபாய் போட்டுக் கட்டியிருக்கிற வீடுகளின் சுவர்களை இவர்கள் பாழ்படுத்துகிறார்கள். எத்தனையோ சொந்தக்காரர்கள் இதைப் பற்றி மனுக்கள் அனுப்பி இருக்கிறார்கள். " இதை நிறுத்த உங்களுக்குச் சக்தி இல்லையா ?" என்று கேட்டிருக்கிறார்கள். இந்தச் சட்டத்தை இப்பொழுதாவது கொண்டுவந்தது மிக மிக நல்லது என்று கூற விரும்புகிறேன்.

இந்தச் சட்டத்தின் மூன்றாவது ஷரத்தின்படி பார்த்தால் " ஒருவர் சுவரிலே எழுதினார் என்பதை ருசுப்படுத்தும் பொறுப்பு அரசாங்கத்தைச் சேர்ந்தது " என்று இருக்கிறது. தங்களுடைய சம்மதத்தின்பேரில் கொடுத்திருப்பவர்களானால், அந்தச் சம்மதம் வாங்கப்பட்டதா ? இல்லையா ? என்பதும் காட்டப்பட வேண்டும். ஆகையால் திடீரென்று எந்த முறையிலாவது உள்ளே தள்ளிவிட வேண்டுமென்று அரசாங்கம் சர்வாதிகாரம் ஏற்படுத்த முன்வரவில்லை. " இந்தியன் பினல் கோடு இருக்கிறது. அதிலே இதை தடுப்பதற்கேற்ற ஷரத்துக்கள் இருக்கின்றன. இந்த மாதிரி சட்டம் ஏன் கொண்டுவர வேண்டும் ?" என்று கேட்கிறார்கள். " இந்தியன் பினல் கோடு " சட்டத்தில் போடப்பட்டிருக்கக்கூடிய ஷரத்துக்களில் பல கஷ்டங்கள் இருக்கின்றன. என்னென்ன முறையில் கேஸைத் தயார் செய்தாலும், நல்ல முறையிலே " எவிடன்ஸ் " இருந்தாலும் " **obscene matters** " என்று சொல்லி தள்ளுபடி செய்துவிடுகிறார்கள். இப்படி இருப்பதால் எத்தனையோ ஆபாசமான பத்திரிகைகள் நம்முடைய நாட்டில் உலவிக்கொண்டு வருகின்றன. ஆகவே இதைப் போல ஒரு சட்டம் மிகமிக அவசியம் என்று கூற விரும்புகிறேன்.

" கண்ணப்ப நாயனார் லிங்கத்தைக் காலால் உதைத்தாரே, அது ஆபாசம் இல்லையா ? " என்று ஒரு அங்கத்தினர் பேசும்போது குறிப்பிட்டார். கண்ணப்ப நாயனாருக்கு இருந்த உள்ளத்தைப் பற்றி மக்களுக்குத் தெரியாமலில்லை. நன்றாகத் தெரிந்துகொண்டுதான் இருக்கிறார்கள். அன்பு

17th February 1959] [Srimathi T. N. Anandanayaki]

உள்ளம் கொண்டவர்களுக்கு கண்ணப்ப நாயனாரின் அன்பு உள்ளம் தெரிந்தது. ஆனால் இங்கு பேசியவர் உள்ளத்தில் ஆபாச உணர்ச்சி எழுந்திருக்கிறது என்பதை மக்கள் நன்றாக உணர்ந்துகொண்டுதான் இருக்கிறார்கள்.

SRI K. ANBAZHAGAN : On a point of order, Sir, இங்கே பேசுகின்ற அங்கத்தினர் அவர்கள் ஏற்கனவே பேசிய ஒரு அங்கத்தின ருடைய உள்ளமே ஆபாசமாக இருக்கிறது என்று கூறுகிறார்கள். நேரடியாக ஒரு அங்கத்தினரை அவமதிக்கக்கூடிய மாதிரி பேசுவதற்கு இந்த மன்றத்தில் இடம் அளிக்கலாமா ?

MR. SPEAKER : I uphold the point of order raised by the hon. Member, Sri Anbazhagan. I would request the hon. Member, Srimathi Anandanayaki not to cast aspersions on any hon. Member of this House. The words ' ஆபாச உணர்ச்சி ' are objectionable.

SRIMATHI T. N. ANANDANAYAKI : அதை கீழ்த்தரமாகச் சொன்னேன் என்று நினைக்கவேண்டாம்.

MR. SPEAKER : I rule that those words are not parliamentary.

SRIMATHI T. N. ANANDANAYAKI : I bow to your ruling and withdraw those words. அந்த முறையிலே, அந்த உள்ள எழுச்சியையும் இந்த உள்ள வெறுப்பையும் வைத்துக்கொண்டு எது ஆபாசம் என்று கண்டுபிடிக்க முடியும். சினிமாப் படங்கள் சில கீழ்த் தரமான உணர்ச்சிகளை எழுப்பிவிடுகிறது. இந்த மாதிரி ஆபாசங்களை ஒழித்துக் கட்ட வேண்டுமென்று மாதர் சங்கங்களிலிருந்தெல்லாம் தீர்மானங்கள் போடப்பட்டு அரசாங்கத்துக்கு வந்திருக்கின்றன. இத்தகைய தீர்மானங்களை எல்லாம் வாங்கி வைத்துக்கொண்டு, எத்தனையோ ஆண்டு காலமாக நன்றாகச் சிந்தித்துப் பார்த்து பிறகுதான் இப்பொழுது சட்டம் கொண்டு வரப்பட்டிருக்கிறதேயொழிய, திடீரென்று அரசாங்கம் இந்தச் சட்டத்தைக் கொண்டு வந்துவிடவில்லை. பண்பாட்டையும், ஒழுக்கத்தையும் வளர்க்கப் பயன்படும் இந்தச் சட்டத்தை எல்லோரும் எங்களோடு சேர்ந்து, ஒத்து வரவேற்று இருக்கவேண்டும். மக்களைப் பண்படுத்துவதற்காகக் கொண்டு வந்திருக்கிற இந்தச் சட்டத்தைக் குறித்து வேண்டாத உணர்ச்சி யைப் பரப்புவது மிகத் தவறு என்ற காரணத்தினால் எல்லாக் கட்சிகளும் ஒன்றாக தமிழ் மாண்பைக் காக்கும் இந்தச் சட்டத்தை ஆதரிக்க வேண்டு மென்று கேட்டுக்கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

(Sri V. K. Kothandaraman in the Chair.)

SRI V. SANKARAN : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோ தாவானது எல்லாக் கட்சியினராலும், எல்லா வகுப்பினராலும் வரவேற்கப் படவேண்டிய ஒரு மசோதா என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இதைப் பற்றிச் சொல்லும்போது கனம் கோவிந்தசாமி அவர்கள் "இது எதிர்கட்சிகளின் பிரச்சாரத்தைப் பெரும் அளவில் தடை செய்து விடும் ; சினிமாக்காரர்கள் விளம்பரம் செய்வதைப் பாதித்து விடும்" என்று கண்ணீர் வடித்தார்கள். உண்மையில் இந்த மசோதா பூராவையும் படித் திருந்தால் அது போன்ற ஒரு வாதத்திற்கு இடம் இல்லை என்பதை நன்றாக உணர்ந்துகொள்ள முடியும். கட்சிப் பிரசாரங்கள் சரியான முறையில், நன்றாக இருக்கவேண்டுமென்ற காரணத்தினால்தான் இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது. அத்துடன் இதில் எதிர்க்கட்சி களின் பிரசாரத்திற்கும் பூரண பாதுகாப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. எந்த விதமான ஒழுங்கான கட்சிப் பிரசாரத்தையும் தடை செய்வதாக இல்லை என்பது இந்தச் சட்டத்தைப் பூரணமாகப் படித்தவர்களுக்கு இது நன்கு விளங்கும். ஒரு மதத்திலே அவருக்கு நம்பிக்கை இல்லையென்றால் அதைக் கைக் கொள்ளக் கூடாது என்று சொல்லலாம். ஆனால் பிற மதத் தினரை அவமதிக்கும் முறையில், துவேஷிக்கும் முறையில் பேசினால் இந்த

மசோதா அதைக் கட்டுப்படுத்த உதவுகிறது. வகுப்பு வாதத்தை எடுத்துக் கொண்டால் வித்தியாசங்கள் இருக்கக்கூடாது என்று பிரசாரம் செய்வதை கண்டிப்பாக இந்தச் சட்டம் தடை செய்யவில்லை. ஆனால் அதே சமயத்தில் வகுப்பு துவேஷத்தை வளர்க்க வேண்டுமென்று ஒருவன் பிரசாரம் செய்தால் இந்த மசோதா தடை செய்யும் என்பது நிச்சயமாகத் தெரிகிறது. இன்றைக்குப் பலவித ஆபாச குணங்கள் பொருந்திய விளம்பரங்களை நாம் பார்க்கிறோம். இந்த முறையில் ரொம்பக் கண்டிப்பாக இதையெல்லாம் வரையறை செய்யவேண்டும். உண்மையிலேயே தவறாக இருந்தால் அதை எடுத்துக் காட்டுவதற்குப் பல முறைகள் இருக்க வேண்டுமென்றே கிளர்ச்சி என்று சொல்லிக்கொண்டு நியாயமில்லாத தன்மையில் செய்யப் படுகிற காரியங்களைத் தடை செய்தாகவேண்டும். நியாயமான கிளர்ச்சிகளை அவர்கள் நடத்தட்டும். நியாயமற்ற செயல்களைச் செய்யும்போது அதை நாம் தடுக்கவேண்டும். இதை ஏன் ஆட்சேபிக்கவேண்டும் என்று கேட் கிறேன்.

அதே சமயத்தில் இன்னொரு வாதம் சொன்னார்கள். பட்டாளத்தில் சேரவேண்டாம் என்று அப்போது காங்கிரஸ்காரர்கள் பிரசாரம் செய்ய வில்லையா என்றார்கள். இது ராணுவக் கட்டுப்பாட்டுக்கு மாரண்பட்ட செயல், இதைச் சொன்ன காங்கிரஸ்காரர்கள் அப்படிச் சொன்னதன் பலனை அனுபவிக்கவும் தயாராய் இருந்தார்கள். இப்படிப்பட்ட காரியங்களைச் செய்யப் போகும்போது அதனால் ஏற்படும் விளைவை—தண்டனையை— ஏற்றுக் கொள்ளத் தயாராய் இருக்கவேண்டுமேயொழிய அதைவிட்டு அதற்கும் நாங்கள் தயாராய் இல்லை என்கிற ரீதியில் இந்தச் சட்டத்தை மாற்றும்படிச் சொல்லக்கூடாது என்று சொல்லிக்கொள்ள, விரும்பு கிறேன்.

அடுத்தபடியாக பலவிதமான ஆபாசச் சுவரொட்டிகளைப் பார்க்கிறோம். ஆபாசப் படங்கள் அடிக்கடி பத்திரிகையில் வருகின்றன. சினிமாப் பெண் களை எல்லாம் ஆபாசமான முறையில் சித்தரிக்கிறார்கள். இதையெல்லாம் தடுக்காமல் விட்டுவிட வேண்டுமென்றால்—இவைகள் நம்முடைய நாகரீகத்திற்கு அழிவு தேடவில்லையா என்று கேட்கிறேன். இப்படி பத்திரிகையில் வருவதைத் தடுக்க நடவடிக்கை எடுக்கப்படுமா என்று ஒரு கேள்வி கேட்டபோது அதற்குப் பதில் அளிக்கும் வகையில் அதற்கும் ஒரு தனி மசோதா கொண்டுவரப்படும் என்று சொன்னார்கள். சீக்கிரத்தில் அதையும் கொண்டுவர வேண்டியது அவசியம் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக இந்த மசோதாவில் வேண்டுமென்றே மதச் சம்பந்த மாக பிறர் மனம் புண்படும்படியாகச் செய்யப்படுகிற காரியங்கள் செய் தாலும் குற்றம் என்று வருகிறது. அதோடு ஆட்சேபகரமான விளம்பரங் கள் என்பதில் clause 2 (*b*) (IV)-ல் 'is deliberately intended to outrage the religious feelings on any class of the citizens of India by insultidg or blaspheming or profaning the religion or the religious beliefs of that class' என்று இருக்கிறது. இதற்கு வியாக்கியானம் கொடுக்கப்படுகிற இடத்தில் Explantion (2) வேண்டுமென்றே இந்தக் காரியத்தைச் செய்தால் தான் குற்றமாகக் கருதப்படும் என்று சொல்லப்படுடிருக்கிறது. வேண்டு மென்றே செய்யப்பட்ட காரியமா, இல்லை சீர்திருத்தம் செய்வதாக Bonafide ஆக எண்ணி செய்யப்பட்ட காரியமா என்பதை எப்படிக் கண்டு பிடிப்பது. இது தெளிவு இல்லாது இருக்கிறது. ஆகவேதான் இந்த ஷரத்து 2 (*b*) ல் இருக்கக்கூடிய நான்காவது பிரிவில் உள்ள "deliberately" என்ற வார்த்தையையும், "any class of the" என்ற வார்த்தைகளுக்குப் பின் வருகிற 'the' என்பதையும் எடுத்துவிடவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன். ஒருவனுடைய மனதிற்குள் இருக்கிற நோக்கம் என்ன என்று நமக்குத் தெரியாது. நம்மால் கண்டுபிடிக்கவும் முடியாது. மனதிற்குள் என்ன இருக்கிறது என்பதை விசாரணை செய்ய வேண்டு

17th February 1959] [Sri V. Sankaran]

மென்றும் கோர்ட்டுகளால் அது முடியாது. ஆகவே இந்த வார்த்தைகளை வைத்துக்கொண்டு தப்பித்துக் கொள்ள ஏதுவாக இருக்கக்கூடாது என்பதறகாக நான் கொடுத்திருக்கும் திருத்தத்தை ஏற்றுக்கொள்ளும் படியாகக் கேட்டுக் கொள்கிறேன்

வகுப்பு துவேஷத்தை உண்டு பண்ணக் கூடிய, மத சம்பந்தமான உணர்ச்சியைப் பண்படுத்தக் கூடிய எத்தகைய விளம்பரங்களாகவோ சுவரொட்டிகளாகவே இருந்தாலும் தண்டிப்பதற்கு வழி இருக்க வேண்டும். அப்படிப்பட்ட காரியங்களைச் செய்வதற்கு ஒரு துளியும் இடம் இருக்கக் கூடாது.

ஷரத்து 2 (b) (i)-ல

"incite any person to commit murder, sabotage or any offence involving violence: or

என்று போடப்பட்டிருக்கிறது. 'involving violence' என்று பலாத்காரம் சம்பந்தமாக குற்றம் இருந்தால் தான் என்று பொருள்படும்படியாக இருக்கிறது. இதற்கு அவசியம் இல்லை. திருடச் சொல்லலாம். கொள்ளை அடிக்கச் சொல்லலாம். பிறரை ஏசும்படியாக இருக்கலாம். இப்படிப் பட்ட எல்லாவற்றையும் குற்றமாகக் கருதி தண்டிக்கக் கூடிய தாய் இருந்தால் அதுவே போதும் என்று சொல்லிக்கொள்ள விரும்பு கிறேன். ஆகவே, "involving violence" என்பதற்கு அவசியம் இல்லை என்று கருதுகிறேன்.

அடுத்தபடியாக "place open to public view" என்கிற ஷரத்தை எடுத்துக் கொண்டால் இரண்டும் (வி), (டி) ஆக இரண்டு பிரிவாக இருக்கிறது. எல்லாவற்றையும் ஒன்றாக இணைத்து "place open to public view" includes a private place or building, monement, statute, effigy, post, wall, fence என்று இருப்பதில் எல்லா இடங்களும் பூரணமாகப் பாதுகாக்கப்படவேண்டியது அவசியம். அப்படிச் செய்தால் எல்லோரும் வரவேற்கக் கூடிய சட்டமாக அமையும். அதே சமயத்தில் இன்னொரு வார்த்தையும் சொன்னார் கள். தனிப்பட்டவர்களுடைய கட்டிடங்களுக்கு இந்தச் சட்டத்தின் மூலம் ஏன் பாதுகாப்புத் தரவேண்டும். ஏற்கெனவேயே தனியார் சுவர்களில் சுவரொட்டிகள் ஒட்டினால் தண்டிக்க சட்டம் இருக்கிறதே இது எதற்கு என்றார்கள். முன்பும் இதுமாதிரி சட்டம் இருக்கிறது அதை மீண்டும் வலியுறுத்துவதாக இந்தச் சட்டம் இருப்பதில் ஆட்சேபணை என்ன என்று கேட்க விரும்புகிறேன் ஆகவே இதை எல்லோரும் ஆதரிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

SRI P. S. CHINNADURAI: கனம் சபாநாயகர் அவர்களே, இந்தச் சபை முன்பாக சமர்ப்பிக்கப்பட்டிருக்கிற மசோதா ஒரு மயக்கம் தரும் மசோதா என்று குறிப்பிட விரும்புகிறேன். இந்த மசோதாவில் நல்ல நோக்கங்களை சர்க்கார் எந்த அளவுக்கு அமுல் நடத்த வேண்டுமென்று கருதுகிறார்களோ அதில் சற்றும் தாழ்ந்தவர்கள் அல்ல எதிர்க்கட்சியில் அமர்ந்திருக்கிற அங்கத்தினர்கள். நான் உண்மையாக நம்புகிறேன். இந்தச் சபையின் அந்த நல்ல நோக்கத்தை தமிழ் நாட்டிலுள்ள ஒவ்வொரு தாயும், தந் தையும் ஏற்றுக் கொள்ளச் செய்வார்கள். சிறந்த ஒழுக்கத்தை விரும் பாத தாய், தந்தையர்கள் இருக்க முடியாது. குழந்தைகளிடத்தில் நல்ல பண்பாடு வளரவேண்டும் என்பதில் தாய்க்கும், தந்தைக்கும் அதிகப்படி யான அக்கறை உண்டு. இதில் நாம் மிக்க பெருமை கொள்ளலாம். இந்த நல்ல நோக்கத்தை அமுல் நடத்துவதற்கு இப்படிப்பட்ட மசோதா தேவையா என்று பார்க்கிறபோது இந்த மசோதா இல்லாமல் இந்த நல்ல நோக்கத்தை நிச்சயமாக அடையலாம் என்ற நம்பிக்கை எல்லோருக்கும் இருக்கிறது. அந்தக் காரணத்தினால் இந்த மசோதா தேவையற்றது என்று நான் கருதுவேனானால் ஏதோ பண்பாட்டுக்கு எதிராக நான் பேசுவ தாக அல்ல. ஒழுக்கக் கேட்டை நாங்கள் விரும்புவதாக அல்ல. அப்படிப் பட்ட எண்ணம் பிறரால் கற்பிக்கப்பட்டுவிடுமே என்ற ஐயத்தால் காரியம்

செய்ய முடியாது. இதைச் செய்வதனால் ஒழுக்கத்தைக் காப்பாற்றியவர்கள் என்ற பெருமை வந்துவிடாது. இதனால் தான் இது ஒரு மயக்கம் தரும் மசோதா என்று நான் குறிப்பிட்டேன். இந்த சபையிலுள்ள அங்கத்தினர்களை சர்க்கார் கட்சியினர் என்றோ எதிர்க் கட்சி அங்கத்தினர்கள் என்றோ பாகுபாட்டுக்கு உட்படுத்தி நான் இப்போது பேசவில்லை ; இந்த சபையிலுள்ள அங்கத்தினர்கள் எல்லோரையும் ஒரு மயக்கத்தில் ஆழ்த்தும் மசோதாதான் இது என்று குறிப்பிட விரும்புகிறேன். சபையிலுள்ளவர்களுக்கு மட்டுமின்றி மக்களுக்கும் இது மயக்கத்தைத் தான் கொடுக்கும். நமது ராஜ்ய மக்களை விட்டுவிட்டோம். இவ்வாறு சட்டமியற்றினால் மற்ற ராஜ்யங்களிலுள்ள மக்கள் என்ன நினைப்பார்கள் ? " தமிழ்நாட்டில் ஒழுக்கம் எவ்வளவு குன்றிப் போய்விட்டது ? மக்களின் ஒழுக்கத்திற்காக ஒரு சட்டத்தைக் கொண்டுவர வேண்டிய அளவிற்கு தமிழ்நாட்டில் ஒழுக்கம் கெட்டுப்போய்விட்டது போல் இருக்கிறதே ? தமிழ் நாட்டின் பண்பே குறைந்துபோய் விட்டதே ? அதனால் தான், அங்கே சட்டசபையில் இப்படிப்பட்ட ஒரு மசோதாவைக் கொண்டுவந்து நிறைவேற்றியிருக்கிறார்கள் " என்று தான் அண்டை ராஜ்ய மக்களும் அயல் நாட்டு மக்களும் நினைப்பார்கள். இவ்வாறு, இந்த மசோதாவால் எல்லோருக்கும் மயக்கம் ஏற படக்கூடும். எனவே தான் இது ஒரு மயக்கம் தரும் மசோதா என்று கூறுகிறேன். உண்மையிலேயே, இப்படிப்பட்ட ஒரு மசோதாவைக்கொண்டு வராமலிருந்து, மசோதாவின் அதே நோக்கம் பொது மேடைகளில் அரசியல் கட்சிகளால் வற்புறுத்தப்பட்டு வருமேயானால், நிச்சயமாக உரிய பலனை நாம் எதிர்பார்க்கலாம். அதில் சந்தேகமே கிடையாது.

இந்த மசோதாவின் 4-வது ஷரத்தை எடுத்துக்கொள்வோம். எந்தச் சுவரிலும், அதன் சொந்தக்காரருடைய அனுமதியைப் பெறாமல், எழுதவோ, விளம்பரங்களை ஒட்டவோ கூடாது என்று அதில் சொல்லப்பட்டிருக்கிறது. அனுமதி பெறாமல் அவ்வாறு செய்வதற்கு தண்டனைகொடுப்பதற்குரிய சட்டங்கள் ஏற்கனவே இருக்கின்றன. 'நோட்டீஸ் ஒட்டக் கூடாது' என்று எழுதப்பட்டுள்ள சுவர்களைத் தவிர மற்றச் சுவர்களில் நோட்டீசுகள் ஒட்டுவதும், எழுதுவதும் மிக சகஜமாக இருக்கிறது. இது இன்று நேற்று நடக்கவில்லை. நம் நாடு ஜனநாயக பாதையில் இயங்கத் துவங்கிய நாள் முதற்கொண்டு இந்த முறையில் விளம்பரங்கள் நடைபெற்றுத்தான் வருகின்றன. இது மிகவும் மலிவான விளம்பரம் என்றும் நான் சொல்வேன். இவ்வாறு விளம்பரம் செய்வதற்கு யாருடைய அனுமதியையும் வாங்க வேண்டிய அவசியம் இல்லை. லைசென்ஸ் வாங்க வேண்டிய அவசியம் இல்லை. இதனைத் தடுக்க இன்று அவசியம் ஏற்பட்டு விட்டதா என்று இந்த அரசாங்கத்தைக் கேட்க விரும்புகிறேன். ஆபாச விளம்பரங்களைத் தடுக்க மசோதா கொண்டு வரப்படும் வேளையில் பல ஆண்டுகளாக அனுமதிக்கப்பட்டு வந்த சாதாரண விளம்பரங்களையும் சட்டத்தின் மூலம் தடுக்க வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டதா என்று அறிய விரும்புகிறேன். இந்த மசோதா சட்டமானால் என்ன நேரும் ? இது சட்டமானால் ஒவ்வொரு அரசியல் கட்சியும் ஒவ்வொரு அரசியல் ஸ்தாபனமும் என்ன செய்ய வேண்டியிருக்கும் ? அவைகள் தங்கள் சுவரொட்டிகளை அச்சடித்தவுடன் வீட்டுச் சொந்தக்காரர்களுடைய அனுமதிக் கடிதங்களை வாங்க வேண்டிவரும். எழுதுவதற்கு மட்டுமன்றி வெறும் சுவரொட்டிகள் ஒட்டுவதற்கும் அனுமதி வாங்க வேண்டிவரும். அவ்வாறு அனுமதியில்லாமல் யாராவது சுவரொட்டிகளை ஒட்டிவிட்டால், வீட்டுச் சொந்தக்காரர் புகார் செய்யாவிட்டாலும், சுவரொட்டியை ஒட்டியவரை போலீஸ்காரரே பிடித்து ஒரு கோர்ட்டில் நிறுத்தி விடலாம். அவரை அப்படி கோர்ட்டில் நிறுத்திவிட்டால் அவர் அனுமதியைப் பெற்றிருக்கிறார் என்று, ஒட்டியவரோ ஒட்டும்படி கூறியவரோ சுவரின் சொந்தக்காரரோ கூறியாக வேண்டும். அத்துடன் நில்லாது சுவரின் சொந்தக்காரரின் எழுத்துபூர்வமான அனுமதியைக் கொண்டுவந்து காட்டியாக வேண்டும். இல்லாவிட்டால் சுவரொட்டியை ஒட்டியவருக்கு மூன்று மாத சிறை தண்டனை தப்பாது, 200 ரூபாய் அபராதம் தப்பாது. சுவரொட்டியை ஒட்டச் சொல்லியவரைவருக்கும் தண்டனை

17th February 1959] [Sri P. S. Chinnadurai]

கொடுக்கும் முறையில் இந்த மசோதா அமைந்திருக்கிறது. அப்படிப் பார்க்கும்போது, இது பொதுஜன ஸ்தாபனங்களேயும் அரசியல், சமூக ஸ்தாபனங்களேயும் எந்த அளவிற்கு பாதிக்கும் என்று அரசாங்கத்தார் சிந்தித்துப் பார்த்தார்களா ? அவ்வாறு சிந்தித்துப் பார்த்திருந்தால் இந்த ஷரத்தை என் போட்டிருக்கிறார்கள் என்று கேட்க விரும்புகிறேன். நகரத்தில் அழகான காம்பவுண்ட் சுவர்கள் இருக்கின்றன. அவைகளில் பலவற்றில் சுவரொட்டி ஒட்டக்கூடாது என்று எழுதப்பட்டிருக்கிறது. நல்ல விளம்பரங்களாக இருந்தாலும் ஒட்டக்கூடாது என்று சொல்லுகிறவர்களேக் காண்கிறோம். அப்படிப்பட்டவர்களுடைய சுவர்களில் நாம் சுவரொட்டிகளே ஒட்டப்போவதில்லே. அவர்கள் தங்கள் சுவர்களில் நோட்டீஸ் ஒட்டக்கூடாது என்று ஒரு அறிவிப்பைப் போட்டிருந்தால் போதும். நகரங்களில் மட்டுமன்றி கிராமங்களிலும், இன்ன அபேட்சகருக்கு வோட்டுப் போடுங்கள் என்று கூறும் சுவரொட்டிகளேப் போடுவதற்குக் கூட இது தடையாக இருக்கும். இத்தகைய சுவரொட்டிகளேத் தடுத்தால் நாட்டில் ஜனநாயகம் பாதிக்கப்படும். இதைப்பற்றி அரசாங்கம் சிந்திக்க வேண்டும். ஏதோ ஒரு அரசியல் கட்சிக்காகக் கொண்டுவரப்பட்ட மசோதாவாக இதை நான் கருதவில்லே. நாம் உண்மையிலேயே நல்ல நோக்கம் கொண்டிருந்தாலும் ஆழ்ந்து பார்க்காமல் இந்த மசோதாவைக் கொண்டுவந்து விட்டோமோ என்று அஞ்சுகிறேன். நிச்சயமாக, 4-வது ஷரத்தையாவது எடுத்துவிடலாம் என்று நினைக்கிறேன். அது இந்த மசோதாவில் இருக்கவேண்டிய அவசியமே யில்லே என்பதை இந்த சபையில் வலியுறுத்துகிறேன். இதனைச் சற்று ஆராய்ந்துபார்க்க வேண்டும். இப்போதும் கூட காலம் தாழ்ந்து விடவில்லே என்று கூற விரும்புகிறேன். எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் பேசுவதிலுள்ள நல்ல கருத்துக்களே ஏற்க கனம் அமைச்சர் தயங்கமாட்டார் என்று நம்புகிறேன்.

அடுத்தபடியாக, ஆபாச விளம்பரங்கள் என்றால் என்ன என்று இந்த மசோதாவில் வரையறுக்கப்படவில்லே. ஒரு விளம்பரமானது ஆபாசமானதா இல்லையா என்பதை நிர்ணயிக்கும் பொறுப்பை நீதிபதிக்கு விட்டு விடுகிறோம். இது சம்பந்தமாக, 'விச் இஸ் க்ராஸ்லி இன்டிஸெண்ட் ஆர் இஸ் ஸ்கரிலஸ் ஆர் அப்ஸீன்' என்று இந்த மசோதாவில் போடப்பட்டிருக்கிறது. எது 'இன்டிஸெண்ட்' எது 'அப்ஸீன்' என்று யார் வரையறுப்பது ? ஒருவருடைய மனதிற்கு ஆபாசமாகத் தோன்றுவது இன்னொருவருடைய மனதிற்கு ரொம்பவும் அலங்காரமாகத் தோன்றுகிறது. மசோதாவில், ஆபாசம் என்பது இன்னது என்று தெளிவாக வரையறுக்கப்படவில்லே. இப்படிப்பட்ட மசோதாவைச் சட்டமாக்குவதில் பயனில்லே என்று கூற விரும்புகிறேன். இந்த மசோதா சட்டமானல், அது சினிமா விளம்பரங்களேத் தடைபடுத்தும் என்று பேசப்பட்டது. அப்படி யெல்லாம் இல்லே யென்றும் இன்னொரு தரப்பிலிருந்து பேசப்பட்டது. சில சினிமா விளம்பரங்கள் எனக்கு உண்மையிலேயே சில சமயங்களில் ஆபாசமாகத் தோன்றுகின்றன. சில சமயங்களில் அலங்காரமாகத் தோன்றுகின்றன. இதெல்லாம் மனதைப் பொறுத்தது. இதெல்லாம் வயதைப் பொறுத்தது என்று எண்ணி வந்தேன். ஆனால், இதெல்லாம் மனதையும் சூழ் நிலேயையும் பொறுத்தது என்று இப்போது எண்ணுகிறேன். எத்தனையோ சினிமாப் படங்கள் வருகின்றன. இப்போது வரும் சினிமாப் படங்களில், சோபன இரவின் முற்பகுதியை, படுக்கை அறையை, காட்டாத படமே இல்லே. சினிமாக் கொட்டகைகளில் ஏராளமாக கூட்டம் இருக்கிறது. பொதுமக்கள் இந்தக் காட்சிகளே விரும்புகிறார்களா ? இல்லேயா என்று எனக்குத் தெரியவில்லே. இந்தக் காட்சிகள் ஆபாசம் என்றால் தணிக்கை அதிகாரிகள் இவைகளே ஏன் அனுமதிக்கிறார்கள் ? அவர்கள் அனுமதிக்கும் காட்சிகள் தானே விளம்பரங்களாக சுவரொட்டிகளில் வருகின்றன. அவைகளே சுவர்களில் ஒட்டிவைக்காவிட்டாலும் தள்ளுவண்டிகளில் ஒட்டி சந்து பொந்துகளில் தள்ளிக்கொண்டு போகிறார்கள் என்பதை இந்த சந்தர்ப்பத்தில் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். ஆகையால் அவைகள் ஆபாசம் என்று கருதி இந்த மசோதாவைச் சட்டமாக்கினால் நமது நோக்கம் நிறைவேறாது என்று சொல்ல விரும்புகிறேன். சினி

மாவே ஆபாசமா இல்லையா என்ற கேள்வி இருந்து வருகிறது. சினிமாவே ஆபாசமானது, அதனை ஒழித்துக்கட்ட வேண்டும் என்று நினைக்கிறவர்களும் இருக்கிறார்கள். சினிமா நாட்டுக்கு நல்லது, சமூகத்திலுள்ள தீமைகளைக் களைந்தெறிவதற்கு சினிமா துணைபுரிகிறதாதலால் சினிமா அவசியம் என்று நினைப்பவர்களும் இருக்கிறார்கள். இந்த மாதிரியான சர்ச்சைகளில் இறங்கி சாதக பாதகங்களை ஆராய்ந்து பார்த்து ஒரு மசோதாவைக் கொண்டுவர வேண்டிய அவசியம் இல்லை என்று நினைக்கிறேன். எத்தனையோ மருந்து விளம்பரங்களும் அழகு சாதன விளம்பரங்களும் போஸ்டர்களில் வராவிட்டாலும் புத்தகங்களில் வரத் தான் செய்கின்றன. ‘தளர்ந்துபோன தசை நார்களை மீண்டும் பலப்படுத்த தாது புஷ்டி லேகியம் சாப்பிடுங்கள்’ என்று விளம்பரம் வருகிறது. அந்த விளம்பரத்தில், ஒரு பயில்வானின் படம் போடப்பட்டிருக்கிறது. அந்த பயில்வான் லங்கோடு மட்டும் போட்டுக் கொண்டிருக்கிறான். அந்தப் படம் ஆபாசமானதாக சிலருக்குத் தோன்றுகிறது ; எனக்குக்கூட அவ்வாறு தோன்றுகிறது. அவனுக்கு சரியான ஆடைகள் போடப்படவில்லையே என்று எனக்குத் தோன்றுகிறது. முறுக்கேறிய தசை நார்களைக் காட்ட வேண்டுமானால் அவ்வாறு படம் போட்டுக்காட்ட வேண்டும் என்று சொல்லப்படலாம். ‘தசை நார்கள் அந்த மாதிரி வலுப்பட வேண்டுமானால் இந்த தாதுபுஷ்டி லேகியத்தைச் சாப்பிடுங்கள்’ என்று அந்த விளம்பரத்தில் போடப்பட்டிருக்கிறது. அதைப் பார்த்துவிட்டு சிலர் அதை வாங்கி உண்ணுகிறார்கள். அதை அவர்கள் உண்டதால் பலன் ஏற்பட்டிருக்கிறதோ என்னமோ, எனக்குத் தெரியாது ; அதை நான் சாப்பிட்டதில்லை.

இப்படி, அழகு சாதன விளம்பரங்கள் பல இருக்கின்றன. அப்படி

11-30 a.m.

அழகு சாதன விளம்பரங்களைப் பற்றி விவரித்து இந்த சபையின் நேரத்தை எடுத்துக்கொள்ள நான் விரும்பவில்லை. எத்தனையோ கவர்ச்சிகரமான விளம்பரங்கள் இருக்கின்றன. கவர்ச்சிகரமாக இருக்கிறது என்று யார் யார் நினைக்கிறார்களோ அவர்கள் அதைக் காணத்தான் செய்வார்கள். ஆகவே இன்று இவைகளுக்கு எல்லாம் ஒரு மசோதா கொண்டு வர வேண்டுமென்று நாம் ஏன் கருத வேண்டும். சமூகத்தில் நல்ல பழக்கம் நிலவுவதற்கு, சமூகம் பிரதிநிதிகளாக விளங்கக் கூடிய அரசியல் வாதிகள் பொதுஜன ஸ்தாபனங்கள் இவைகள் ஒழுக்கம் பற்றி மக்களிடையே வலியுறுத்தி அங்காங்கு பேசிக் கொண்டிருந்தால் மட்டும் போதும். தேர்தல் வரும்போது அரசியல் மேடைகளில், நிறைய பொதுக் கூட்டங்கள் போட்டு பேசுகிறோம். மற்ற நாட்களில் நாம் என்ன செய்கிறோம்? நாம் செய்கிற சாதனைகளை எடுத்துக் கூறுவதோடு மட்டுமல்லாமல், நாம் செய்யக் கூடிய சாதனைகளை எடுத்துச் சொல்வதோடு மட்டுமல்லாமல் மக்கள் இடையில் ஒழுக்கத்தை உண்டாக்குவது, மத வேறுபாடுகளைப் போக்கி மக்களிடையே ஒரு சமரஸ மனப்பான்மையை உண்டாக்க, ஜாதி வேறுபாடுகளை விட்டு விட்டு மக்கள் ஒற்றுமையுடன் வாழ வேண்டுமென்றெல்லாம் நாம் மக்களிடம் எடுத்துச் சொல்கிறோம். வடநாட்டார் என்றும் தென்னாட்டார் என்றும் கூறி பிரிவினையை உண்டாக்கக் கூடியவர்களுக்கும் ஜனநாயகத்தில் அவர்களுக்கும் உரிமை இருக்கத்தான் இருக்கிறது, இந்த இனம் அந்த இனம் என்று கூறி பிரிவினையை வளர்க்க கூடியவர்களுக்கும் மக்கள்தான் அதற்கு முடிவு கூறவேண்டும். எது நல்லது எது கெட்டது என்று மக்களிடையே எடுத்துச் சொல்வதற்கு, நாட்டுப் பற்றுள்ளவர்கள் ஏன் அவர்கள் கடமையைச் செய்ய முன் வரக் கூடாது? அப்படி அவர்கள் கடமையைச் செய்ய முன்வருவதற்குப் பதிலாக, மக்களிடையே நல்லறிவை தட்டி எழுப்புவதற்குப் பதிலாக, நல்ல கருத்துக்களை மக்களுக்கு எடுத்துச் சொல்லி தீய சக்திகளையும், கெடுதல்களையும் ஒழித்துக் கட்டுவதற்குப் பதிலாக சட்டத்தைக் கொண்டுவந்து நிறைவேற்றி, அதை போலீசார் கையில் ஒப்படைத்து, நீதிபதிகளின் கையில் விட்டுவிட்டு நாம் சும்மா கை கட்டிக் கொண்டு உட்காரப் போகிறோமா என்று நான் கேட்க விரும்புகிறேன். சட்டம் ஒன்று உண்டாக்கி விட்டோம். போலீசார் அதை அமுல் நடத்த, நீதிபதிகள் சட்டத்தை மீறுபவர்களுக்கு தண்டனை அளிக்க, சமூகத்தில் ஒழுக்கம் நிலவிவிடும் என்று நாம் கருதினால் பொதுமக்களின்

நாட்டுப் பற்றுடைய நல்ல ஊழியர்கள் என்ற முறையில் நாம் நமது கடமையைப் புறக்கணிக்கிறோம் என்றுதான் நான் இந்த நேரத்தில் குறிப்பாக எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். ஆகவே எந்த நல்ல நோக்கத்தோடு இந்த மசோதா கொண்டு வரப் பட்டிருக்கிறதோ அதே நல்ல நோக்கத்தோடு நான் தாழ்மையோடு வேண்டிக் கொள்வேன், உங்களுடைய நல்ல நோக்கத்தோடு ஒத்துழைக்க ஏராளமான பேர்கள் காத்துக்கொண்டிருக்கிறார்கள், ஆகவே இது ஒரு சட்டமாக வெறும் புத்தகரூபத்தில் சட்டத் தொகுப்பிற்கு ஒரு பளுவாக ஆக்கிவிடாதீர்கள் என்று வேண்டிக் கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

**Sri S. LAZAR** : கனம் சபைத் தலைவர் அவர்களே, விளம்பரங்கள் சம்பந்தமாக எந்தளவிற்கு கட்டுப்படுத்த வேண்டுமென்ற நோக்கத்தோடு கொண்டு வந்திருக்கக் கூடிய இந்த மசோதாவை ஆதரித்துப் பேச முற்படுகிற நான் இதைப் பற்றி எதிரிடையாகப் பேசிய அங்கத்தினர்கள், ஒரு கட்சியைச் சார்ந்தவர் ஆத்திரப்பட்டது மற்றொரு கட்சியைச் சார்ந்தவர் விகாரப்பட்டது, மூன்றாவது கட்சியைச் சார்ந்தவர் மயக்கமுற்றதும், உள்ளபடியே என் போன்றவர்களுக்கு ஆச்சரியத்தை கொடுக்கவேயில்லை. அதைப் பார்க்கிறபோது அரசாங்கம் இந்த மசோதாவைக் கொண்டுவந்ததில் எல்லாவித "ஜஸ்டிபிகேஷன்," நியாயமும் இருக்கிறது என்பது தெரிய வருகிறது. ஒருவேளை அரசாங்கம் இதனோடு நின்று விடாது, இது போன்று பேசுவதற்கு பேச்சு உரிமை இருக்கிற அதே நேரத்தில் இது போன்ற முறைகளில் விளம்பரப்படுத்தக் கூடாது என்று சொல்கிற நாம், இதுபோன்ற முறையில் பேசக்கூடாது என்ற முறையில் ஒரு சட்டம் கொண்டு வந்தால் அது இன்னும் நல்ல முறையில் அமைந்ததாக இருக்கும். அதற்கு நல்ல நியாயமும் இருக்கும் என்பது தான் எனது தாழ்மையான கருத்து. ஒருவர் பேசுகிற போது குறிப்பிட்டுச் சொன்னார், இது போன்றதொரு மசோதா உலகத்தில் வேறு எந்த நாட்டிலும் கிடையாது என்றும் இப்படி ஒரு மசோதாவை தமிழ்நாட்டில் நாம் கொண்டுவருவதே நமக்கு ஓரளவு அவமானத்தைக் கொடுக்கிறது என்றும் சொன்னார். இதில் இருக்கக்கூடிய பாகுபாடு இரண்டு விதப்படும். முதலாவதாக, இந்த மசோதாவின் நோக்கம் எந்த விதத்திலும் வீடு அல்லது சுவர் போன்ற எந்த ஒரு இடத்திலும் அந்தந்த சொந்தக்காரர்களின் அனுமதி இல்லாது நோட்டீஸ்கள் அல்லது விளம்பரங்கள் ஒட்டக்கூடாது என்பது. இதுபோன்றதொரு சட்டம் வேறு ஒரு நாட்டிலும் இல்லை என்பதை நான் ஏற்றுக்கொள்கிறேன். அதே சமயத்தில் நாம் ஒன்று கவனிக்க வேண்டும். பிறருடைய வீட்டுச் சுவற்றில் அவர்களுடைய அனுமதியின்றி எந்தக் காரியமும் எந்த நாட்டிலும் யாரும் செய்வது இல்லையாது. எனக்கு முன்னால் பேசிய சின்னதுரை அவர்கள், "ஸ்டிக் நோ பில்ஸ்" என்று குறிப்பிட்டிருந்தால் அந்தச் சுவற்றில் நாங்கள் ஒட்டுவதில்லை, அப்படியில்லாத சுவற்றைப் பார்த்துத்தான் ஒட்டுகிறோம் என்று சொன்னார்கள். அவர்கள் ஒன்று கவனிக்க வேண்டும். சட்ட அடிப்படையில், ஒவ்வொருவருடைய உரிமையின் அடிப்படையில், பண்டமெண்டல் ரைட்டின் அடிப்படையில் பார்க்கிறபோது ஒருவனது அனுமதியில்லாமல் அவனுடைய சுவற்றில் ஒட்டுவதற்குத் தான் நீங்கள் உத்தரவு வாங்கச் சொல்ல வேண்டுமே தவிர "ஸ்டிக் பில்ஸ்" என்று இருந்தால் மட்டுமே அந்த சுவற்றில் ஒட்டலாமே தவிர ஸ்டிக் நோ பில்ஸ் என்ற விளம்பரம் இல்லாததால் அங்கு ஒட்டலாம் என்று சொல்வது அர்த்தமற்ற ஒரு வாதம் என்று நான் குறிப்பிட விரும்புகிறேன். "ஸ்டிக் பில்ஸ்" என்று இருந்தால் மட்டுமே, அதற்கு அவர்கள் அனுமதி கொடுத்தால் தாராளமாக ஒட்டலாம். அதில் ஒருவரது உரிமையும் பறிபோகாது. அதேபோல் மூன்றாவது பிரிவைப்பொறுத்தவரைக்கும், ஆட்சேபகரமான விளம்பரங்கள் செய்யக் கூடாது என்ற முறையில் மூன்றாவது பிரிவு அமைந்திருக்கிறது. உள்ளபடியே அப்படிப்பட்டதொரு அம்சம் வேறு எந்த நாட்டிலும் இல்லாத ஒரு அம்சமாகும் என்பதை நான் பகிரங்கமாக ஒத்துக் கொள்ளத் தயாராயிருக்கிறேன். இந்த இடத்தில் நாம் சற்று சிந்தித்துப் பார்க்கவேண்டும். நாம் மற்ற நாடுகளில் நாகரீகத்தை அல்லது கலாசாரத்தை ஒட்டிச்சொல்வதாக இருக்கிறோமே அல்லது நாம் மேடை

[Sri S. Lazar] [17th February 1959

களில் பேசுகிறபடி, நாம் எண்ணிக்கொண்டிருக்கிறபடி, நம் தமிழ்நாட்டின் கலாசாரம் சிறப்புடையது, அதைக்காப்பாற்ற வேண்டும் என்று எண்ணத்தில் இருக்கிறோமா என்பதை முதலில் ஆலோசித்துப் பார்க்கவேண்டும். மற்ற நாடுகளில் உள்ள கலாசாரம்தான் நமக்குத் தேவை என்ற முடிவுக்கு வந்தால் இந்த மூன்றாவது பிரிவு தேவையில்லை என்பதனை நான் ஒத்துக் கொள்கிறேன். ஒவ்வொரு இடத்திலும் நம்முடைய நாகரீகத்தைப்பற்றியும், கலாசாரத்தைப் பற்றியும் பிரமாதமாகப் பேசிவிட்டு அந்தக் கலாசாரத்தைக் காப்பாற்றவேண்டுமென்ற நோக்கத்தோடு ஒரு சட்டம் கொண்டு வரும்போது அதற்குத் தக்க 'காரணங்கள் இருக்கின்றன என்பதைப் பற்றி சில அங்கத்தினர்கள் வெகு அழகாக எடுத்துச் சொன்னார்கள். கிருஷ்ணமூர்த்தி உட்பட கனம் அனந்தநாயகி அவர்களும் சிறப்பாக எடுத்துச் சொன்னார்கள், இந்தச் சட்டம் கொண்டுவருவதற்கு அவசியம் இருக்கிறதென்று. நமது நாட்டின் பண்பாட்டையும், கலாசாரத்தையும் பாதுகாக்கவேண்டுமென்ற எண்ணம் நமக்கு இருக்குமானால் இதுபோன்ற சட்டம் தேவைப்படுகிறது என்று எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். அடுத்தபடியாக ஒரு அங்கத்தினர் சொன்னார், ஏற்கனவே இதற்கு இந்தியன் பீனல் கோடில் 202, 405 பிரிவுகள் இருக்கிறதே என்று. நான் மிகவும் மனவருத்தத்தோடு அதைப் பரிசீலனை செய்து பார்த்தேன். ஆனால் அதுபோன்ற குறிப்பு எதுவும் அதில் இல்லை. 292 பிரிவைப் பார்த்தால் "இன்டீஸன்ட் ஆண்ட் அப்சீன் மாட்டர்ஸ்" என்றிருக்கிறது. விகாரமான ஆபாசமானவைகளைப் பற்றி மட்டும்தான் இருக்கிறது. ஆபாசமான விளம்பரங்கள் செய்வதைத் தடுக்க மட்டுமல்ல இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது. ப்ளாக் மெயில் செய்வதை, பிறரை பயமுறுத்திப் பணத்தை அபகரிப்பதையும் இது தடுக்கிறது. Grossly indecent or scurrilous போன்ற விளம்பரங்களைத் தடுக்க வேண்டுமென்று சட்டம் கொண்டு வரும்போது. இந்தவிதமான விளம்பரங்களைத் தடுக்க 292-வது பிரிவில் எந்த விதமான வகையும் செய்யப்படவில்லை. அடுத்தபடியாக, அவர் சொன்ன பிரிவு 425 ஐ.பி.சி. அவர்கள் தவறுதலாக அப்படிக் குறிப்பு கொடுத்திருக்க வேண்டுமென்று நினைக்கிறேன். அதற்கும் இதற்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லை. அது, "மிஸ்சீப்" ஐ பொறுத்தது. வேறு செக்ஷன்களைக் குறிப்பிட்டுச் சொல்லியிருந்தால், ஓரளவு சமீபத்தில் வந்த சுப்ரீம் கோர்ட் தீர்ப்புப்படி 295 (ஏ) பிரிவின்படி மதசம்பந்தமான முறைகளுக்கு பாதுகாப்பு கொடுக்கவேண்டுமென்ற நோக்கத்தோடு இதில் ஒரு பிரிவு இருக்கிறது என்று வாதாடியிருப்பார்களானால் அதை வரவேற்றிருப்பேன். ஆனால், அந்த 295-ஏ-ல் இருப்பதில் கூட "ரெலிஜியஸ் இனஸல்டு" என்பதற்கு மட்டும் தான் பாதுகாப்பு கொடுக்கப்பட்டிருக்கிறதே தவிர, இப்பொழுது நாம் செய்திருக்கிற முறைப்படி 4-வது பிரிவிலே 'deliberately intended to outrage the religious feelings of any class of the citizens of India by insulting or blaspheming, etc.' என்று இருக்கிறபடி, அதிலே ஒருவார்த்தை கூட கிடையாது என்பதை அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். 'insulting or blaspheming or profaning the religion or the religious beliefs of that class' என்பதிலிருந்து பாதுகாப்பு அந்த வகையிலே நமக்கு இல்லை. அதுமட்டுமல்ல. கடைசி பிரிவில் குறிப்பிடப்பட்டிருக்கிறபடி கனம் அங்கத்தினர்கள் பார்த்திருப்பார்கள் என்று நினைக்கிறேன். கடைசியிலே 10-வது பிரிவிலே 'The provisions of this Act are in addition to, and not in derogation of, the provisions of any other law for the time being in force' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையினாலே, இந்தச் சட்டத்தில் கண்டிருக்கிறபடி ஒன்று, இரண்டு வகையான குற்றங்களுக்கு ஏற்கனவே வகை செய்யப்பட்டு இல்லாத போதிலும் கூட, பொதுவாக இந்த முறைகளைக் அத்தனையும் தடுக்கவேண்டும் என்ற நோக்கத்தோடு இந்த மசோதாவைக் கொண்டு வந்திருக்கிறபோழுது, இதை வரவேற்காமல் இருக்க முடியாது. இதைத் தயவு செய்து பரிசீலனை செய்து பார்க்கவேண்டும். ஆட்சேபகரமான விளம்பரங்கள் கூடாது. எதிர்க்கட்சியில் பேசிய அங்கத்தினர்களின்

11-40 a.m.

கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். நான் சொல்லுவதை தயவு செய்து கேளுங்கள். ஒவ்வொரு பிரிவையும் பற்றி பேசுகிறேன்.

முதலாவதாக 'incite any person to commit murder, sabotage or any offence involving violence' பலாத்காரத்தின் அடிப்படையிலே கொலை, கொள்ளை போன்ற குற்றங்கள் செய்வதைத் தூண்டும்படியான விளம்பரங்கள் கூடாது. இதை ஆட்சேபிப்பதற்கு என்ன காரணம் இருக்கிறது அம்மாதிரி விளம்பரங்கள் இருக்கவேண்டுமென்பது உங்களுடைய அபிப்பிராயமா? இரண்டாவதாக, 'seduce any member of any of the armed forces of the union or of the police forces from his allegiance or his duty, or prejudice the recruiting of persons to serve in any such force or prejudice the discipline of any such force.' போலீஸ் படையிலே இருப்பவர்களையோ, ராணுவத்தில் இருப்பவர்களையோ அவர்களுடைய நாட்டிற்குத் துரோகம் செய்யக்கூடாது. அவர்கள் துரோகம் செய்யக்கூடிய முறையில் தூண்டுதலான விளம்பரங்கள் கூடாது என்று சொல்லப்படுகிறது. ராணுவத்தினர் நாட்டிற்கு துரோகம் செய்யவேண்டுமென்பது உங்கள் கொள்கையா? போலீஸில் இருக்கக்கூடியவர்கள் துரோகம் செய்யவேண்டுமென்பது எதிர்க் கட்சியினர் கருத்தா என்று தெரிந்துகொள்ள ஆசைப்படுகிறேன்.

'மூன்றாவதாக 'incite any section of the citizens of India to acts of violence against any other section of the citizens of India' மக்களுடைய ஒரு பகுதியை, மற்றொரு பகுதிக்கு விரோதமாகத் தூண்டிவிடக்கூடாது. கலவரம், பெரிய அடிதடி பெரிய அளவிலே நடக்கவேண்டுமென்பது எதிர்க்கட்சியின் கருத்தா என்று நான் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். நான்காவதாக, மத சம்பந்தமாக விரோதமான முறையில், அவர்களுக்கு ஆத்திரம் ஏற்படக்கூடிய முறையில், அவர்களுடைய எண்ணத்திற்கும், கருத்துக்கும் மாறுபட்ட பகுதியினரின் பேரில் வெறியை உண்டுபண்ணக்கூடிய முறையிலே விளம்பரங்கள் இருக்கக்கூடாது என்று சொல்லப்படுகிறது. அதையும் தடுக்கக்கூடாது என்று சொன்னால், அப்படி ஒரு எண்ணம் இருக்கவேண்டும் என்பது உங்களுடைய கருத்தா என்று தெரிந்துகொள்ள ஆசைப்படுகிறேன். There should not be any indecent or obscene matters put up in the advertisements. என்ற முறையிலே இருக்கிறது. அவைகள் இருக்கவேண்டுமென்பது உங்களுடைய கருத்தா? இந்த ஐந்து முறையான குற்றங்கள் இருக்கக் கூடாது என்பதை இச் சபையிலே உள்ள எல்லா அங்கத்தினரும் ஒத்துக்கொள்ளுவார்கள் என்பதை நான் பகிரங்கமாகச் சொல்ல முடியும். ஆனால் மசோதாவில் இருக்கும் ஷரத்துக்களை வேறு முறையில் அர்த்தம் செய்துகொண்டு, அல்லது வேறு சில கருத்துக்களை மனதில் வைத்துக் கொண்டு, இங்கே ஒரு அங்கத்தினர் பேசியது போல இதே போன்ற ஒரு சட்டத்தை வேறு முறையிலும் கொண்டு வந்து தங்களுக்கு இருக்கக்கூடிய அரசியல் உரிமைகளைப் பறித்துவிடுவார்களோ, அரசியலில் நமக்கு ஓர் அளவுக்குச் செல்வாக்கு இருக்கிறது. அதை இம்மாதிரி சட்டம் கொண்டு வந்து தடுத்துவிடுவார்களோ, அதன் காரணமாக நம் கட்சி வளராமல் இருந்துவிடுமோ என்ற பயம் இருந்தாலொழிய, இந்த மசோதாவை எதிர்ப்பது இதற்கு ஆதரவு கொடுக்காமல் இருப்பது அர்த்தமற்ற செயலாக இருக்கும் என்பதை நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

(மிஸ்டர் ஸ்பீக்கர் தலைமை வகித்தார்.)

கடைசியாக எனது ஒரு விண்ணப்பம். 8-வது பிரிவைப் பார்க்கும் பொழுது, இந்த மசோதாவின்படி எந்தவிதமான குற்றத்தையும் செய்யக் கூடிய ஒருவனை எந்த நிமிஷத்திலும் எந்த நேரத்திலும், போலீஸார் அரெஸ்டு செய்யலாம் என்ற முறையிலே அது அமைந்திருக்கிறது. அதாவது இது ஒரு "காக்கானைஸபிள் அபென்ஸ்," என்று சொல்லப்பட்டிருக்கிறது. எனக்கு முன்பு பேசிய எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் இதை அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவந்து, மற்றைய குற்றங்களுக்கு

இருக்கிற முறைப்படி வாரண்டு இல்லாமல் அரெஸ்டு செய்யக்கூடாது, அதன் பிறகு தான் அரெஸ்ட் செய்யவேண்டுமென்ற முறையில் இதை திருத்தவேண்டுமென்று சொல்லியிருந்தால், உள்ளபடியே அவர்களை நான் பாராட்டியிருப்பேன், பெருமைப்பட்டிருப்பேன். அதற்குப் பதிலாக வேறு கருத்துக்களை எடுத்துச் சொன்னார்கள். என்னுடைய தனிப்பட்ட கருத்து இது தேவையல்ல என்பது தான். இதுபோன்ற குற்றங்களை நாம் இதுவரையில் அனுமதித்து வந்திருக்கிறோம். இப்பொழுது இவை களைத் தடுக்கவேண்டுமென்ற நோக்கத்தோடு இந்த மசோதா கொண்டு வ ப்பட்டிருக்கிறது. ஆகவே, அதிகக் கொடூரமாக இல்லாமல், ஓரளவு நடைமுறையில் எந்த அளவுக்குத் திருத்தம் ஏற்படுகிறது என்பதைப் பார்த்து விட்டு, பின்னால் அவசியம் ஏற்பட்டால், அடுத்த கட்டத்தில், இதை ஒரு "காக்னைஸபிள் அபெனஸாகச்" செய்துகொள்ளலாம் என்று கனம் அமைச்சர் அவர்களை வற்புறுத்தி கேட்டுக்கொண்டு, இந்த மசோதாவை முற்றிலும் வரவேற்கிறேன், ஆதரிக்கிறேன் என்று சொல்லிக்கொண்டு, எனது உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

**SRI SAMI SAHAJANANDA :** கனம் தலைவர் அவர்களே, இந்த மசோதாவை நான் பூரணமாக வரவேற்கிறேன். மனிதப் பிறவி மிகவும் உயர்ந்த பிறவி. அந்தப் பிறவியின் பயனை அடைவதாயிருந்தால், ஒழுக் கம்தான் பிரதானம். அந்த ஒழுக்கமானது எல்லோருக்கும் உண்டாக வேண்டுமென்றால், நம்முடைய சாஸ்திரங்களினால் தான் உண்டாகும். சாஸ்திரங்களில் முக்கியமானது வேதம், ஸ்மிருதி, இதிகாசம், புராணங்கள். இவைகளை எல்லோரும் படிக்கவேண்டும். இதிகாசங்களில் இரா மாயணம், பாரதம் இவை இரண்டும் உலகத்தில் இரண்டு கண்களாக விளங்குகின்றன. இரண்டையும் சமீபத்தில் சிலர் ரொம்பவும் கேவல மான முறையில் பிறர் மனது புண்படக்கூடிய முறையில், நடித்துக்காண் பித்தார்கள். சிலர் இவைகளைப்பற்றி கேவலமாகப் பேசுகிறார்கள். அது மட்டுமல்லாமல் விநாயகர் சுவாமி உருவத்தைப் போட்டு உடைத்தார்கள். ராமர் படத்தைக் கொளுத்தினார்கள். இம்மாதிரி பல அக்கிரமமான காரி யங்களைச் செய்கிறார்கள். இவைகளையெல்லாம் பார்த்துக்கொண்டு நான் உயிரை விடாமல் வாழ்வது ரொம்பவும் கஷ்டமாக இருக்கிறது. கனம் சபாநாயகர் அவர்களே, இம்மாதிரி பிறர் மனதைப் புண்படுத்தும்படியான செயலைச் செய்வது ரொம்பவும் தவறு. பெரிய புராணத்தில் கண்ணப்ப நாயனார் சிவலிங்கத்தை செருப்புக் காலால் உதைத்தார் என்று அதனுடைய கருத்தை அறியாதவர்கள் சொல்லுகிறார்கள்.

"மார்காவர்ஜித பாதுகா பசுபதே : அங்கஸ்ய கூர்சாயதே".

என்று சங்கரர் கூறியிருக்கிறார். பெரிய புராணத்தில்

11.50 a.m.

பொருப்பினில் வந் தவன்செய்யும் பூசனைக்கு முன்பென்மேல்
அருப்புறுமென் மலர்முன்னை அவை நீக்கும் ஆதாவால்
விருப்புறும் அன் பெனும் வெள்ளக் கால்பெருகிற்றென வீழ்ந்த
செருப்படி அவ் விளம் பருவச் சேயடியிற் சிறப்புடைத்தால்

என்று புகழ்ந்து பேசப்படுகிறது. மேலே இருக்கின்ற புஷபத்தை நீக்க வேண்டுமென்று அன்பின் பெருக்கினால் கண்ணப்ப நாயனார் செருப்புக் காலால் நீக்குவது, கடவுளுடைய திருஷ்டியில் அவருடைய குமரனான முருகவேள் அடியினும் சிறப்பாக இருக்கிறது. இதனுடைய உட்கருத்து இது தான். இதை நன்றாகப் புரிந்துகொள்ளவேண்டும்.

அன்புதான் அங்கே பிரதானம். எந்தக் காரியங்கள் செய்தால் ஆண்ட வனுக்குத் திருப்தி உண்டாகுமோ அந்தக் காரியங்களைத்தான் பக்தர்கள் செய்வார்கள். அதைத்தான் பெரிய புராணத்தில் கண்ணப்ப நாயனார் செய்திருக்கிறார். இன்னும் பெரிய புராணத்தில், மனைவியையே கூட்டிக் கொடுக்கிறார்கள், மனைவி கூந்தலைக் களைகிறார்கள், பிள்ளையை வெட்டு கிறார்கள், இம்மாதிரி புராணம் ஆபாசமாகப் பேசுமா என்று கூட சிலர்

பேசுகிறார்கள். இதை அம்மாதிரி திருஷ்டியுடன் நோக்கக்கூடாது. ஆண்டவனுக்கு எந்தச் சமயத்தில் எதைச் செய்தால் திருப்தி உண்டாகுமோ அதைத்தான் அடியார்கள் செய்கிறார்கள். அன்புதான் பிரதானம் என்பதை உணரவேண்டும். அப்படியில்லாமல் இதையெல்லாம் சாதாரண திருஷ்டியோடு பார்த்து குறை சொல்லுவது மிகவும் தவறு.

சிதம்பரத்தில் நந்தனர் ஹாஸ்டலுக்கு எதிரே உள்ள பெரிய சத்திரத்தின் சுவரில் பார்ப்பானே வெளியேறு என்று பெரிய எழுத்துக்களில் எழுதினார்கள். இம்மாதிரி மனம் புண்படும் காரியத்தைச் செய்வது மிகவும் தவறு. இவைகளையெல்லாம் தடுப்பதற்கு இந்தச் சட்டம் அவசியம். மதத்தைக் காப்பதற்கு இந்தச் சட்டம் அவசியம். ஒழுக்கத்தைக் காப்பதற்கு இந்தச் சட்டம் அவசியம். யாருக்கு ஒழுக்கம் தேவையில்லை என்று தோன்றுகிறதோ, யாருக்கு பக்தி இருக்க வேண்டாம் என்று தோன்றுகிறதோ, யாருக்கு தங்கள் இஷ்டம் போல் நடக்கலாம் என்று தோன்றுகிறதோ அவர்கள்தான் இதை எதிர்ப்பார்கள். ஒழுக்கம் உடையவர்கள் இதை எதிர்க்கமாட்டார்கள். நான் இந்த மசோதாவை மனப்பூர்வமாக வரவேற்கிறேன் என்று சொல்லிக்கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

SRI V. SUBBIAH: கனம் சபாநாயகர் அவர்களே, இந்தச் சட்டமானது எதிர்காலத்தில் பல சிக்கல்களை உண்டாக்காமல் இருக்கும் என்று சொல்ல முடியாது. இன்றைய சமுதாயத்தில் ஒழுக்கத்தை கொண்டு வருவதற்கு இந்தச் சட்டம் தேவைதானா என்பதைப் பார்த்தால் இப்போது இருக்கக்கூடிய பீனல் கோடை திருத்தினாலே போதுமானதாகி விடும். மேலும் இந்தச் சட்டத்தினால் வருமானம் வரும் என்று அரசாங்க நினைக்கின்றதோ என்று எண்ண வேண்டியிருக்கிறது. கடைசியாக இந்த சட்ட அமைப்பில் இருக்கின்ற விதிகளைப் பார்த்தால் அதன் மூலமாக எதிர்க்கட்சியினர்களுக்கும் மற்றும் பல கட்சியினருக்கும் இதன் காரணமாக சில கஷ்டங்கள் ஏற்படலாம் என்று எண்ண வேண்டியிருக்கிறது. இன்றைய சமுதாயத்தில் எல்லோருமே நல்லவர்களாகவும், ஒழுக்க முள்ளவர்களாகவும் இருக்க வேண்டும் என்றுதான் விரும்புகிறார்கள். ஆயினும் இதற்காக ஒரு சட்டத்தின் மூலம் ஒழுக்கத்தை ஏற்படுத்தி விடலாம் என்று நினைத்து இந்தச் சட்டத்தை கொண்டு வந்திருப்பார்கள் என்றால் அதை நாம் வரவேற்க முடியாது. எத்தனையோ சட்டங்கள் எல்லாம் நமது நாட்டில் வந்திருக்கின்றன. அதிலும் விளம்பரத்தின் மூலம் வருமானம் வருகிறது என்று நினைத்து இம்மாதிரிச் சட்டங்களைக் கொண்டு வரலாமே தவிர ஒழுக்கத்தை கொண்டு வருவதற்காக இம்மாதிரிச் சட்டங்கள் எல்லாம் பயன்படாது என்றுதான் கருதுகின்றேன். இம்மாதிரி சட்டங்களை நிறைவேற்றினால் அவைகள் எல்லாம் நல்ல முறையில் செயல்படுமா என்பதைப் பார்த்தால் அவைகள் எல்லாம் சரியாக செயல்படுவதில்லை என்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது. . . .

ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்.

என்று வள்ளுவர் பெருமான் கூறியுள்ளார். இதன்படி தமிழ் நாடு ஒழுக்கத்திற்கு சிறப்பிடமாகத்தான் இருந்திருக்கிறது. அதற்காக மசோதா கொண்டு வருவதால் பயன் ஏற்பட்டு விடாது. ஆனால் இப்போது அதற்காக மசோதா கொண்டு வந்திருக்கிறோம். இப்போது வேண்டுமானால் இச்சட்டத்தின் மூலம் சுவர்களில் விளம்பரம் செய்வதையும் மரங்களில் விளம்பரம் செய்வதையும் தடுத்துவிட முடியும். ஆனால் ரோடுகளில்—தார் ரோடில்—எழுதினால் என்ன செய்ய முடியும், அதே போன்றுதான் பலூன் போன்றவைகளில் எழுதிப் பறக்கவிட்டு விளம்பரம் செய்தால் அதையெல்லாம் எப்படித் தடுக்க முடியும் என்று கேட்கிறேன். இதன் மூலம் குற்றம் செய்பவர்களைக் கடுமையாகத் தண்டிக்கவும் இதில் வகை செய்யப் பட்டிருக்கிறது. இந்த தண்டனை மிகவும் குறைந்த தண்டனையாக இருக்க வேண்டும். மக்கள் இதைப்பற்றி சரியாகப் புரிந்து கொண்டு செயலாற்றுவது

வரையிலும் குறைந்த தண்டனைதான் இருக்க வேண்டும். அப்போது தான் இதைப்பற்றி நன்கு அறிந்து சமுதாய வளர்ச்சியில் அக்கறை கொண்டு அதில் ஈடுபடுவார்கள். அதல்லாமல் எத்தனை சட்டங்கள் இயற்றினலும் மக்களுடைய மனம் மாருவிட்டால் எந்தச் சட்டமும் பயன் தராது. அம்மாதிரிப்பட்ட மனமாற்றம் ஏற்படும் வரையிலும் இம்மாதிரி அவசரம் அவசரமாகச் சட்டங்கள் கொண்டு வருவதால் ஒரு வித பயனும் ஏற்படாது. ஆகவே மக்களுடைய மனமாற்றத்திற்கு வழி செய்யாமல் இம்மாதிரி சட்டங்களை அவசரம் அவசரமாக கொண்டு வருவதால், எதிர்க்கட்சிகளில் இருக்கக்கூடியவர்கள் சொல்வதைப் போன்று இந்த அரசாங்கம் ஜனநாயகத்திற்குப் புறம்பாகத்தான் போய்க்கொண்டிருக்கிறது என்று அஞ்ச வேண்டிய நிலையில் அமையும் என்பதை தெரிவித்துக் கொண்டு என்னுடைய வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

*SRI A. VEDARATHNAM : கனம் சபாநாயகர் அவர்களே, இந்தச் சபை முன் வந்திருக்கின்ற இந்த மசோதாவை நான் ஆதரிக்கும் முகத்தான் சில வார்த்தைகள் நான் பேச விரும்புகிறேன். எனக்கு முன்னல் பேசிய பல கனம் அங்கத்தினர்கள் இந்தமாதிரியான சட்டம் வேண்டியதில்லை, இம்மாதிரி அடக்குமுறைச் சட்டங்கள் மூலமாக ஒழுக்கத்தை பரப்புவதைக் காட்டிலும் உபதேசத்தின் மூலமாக ஒழுக்கத்தைப் பரப்புவதுதான் நல்லது என்றும் குறிப்பிட்டார்கள். நல்ல பிரசாரங்கள் மூலம் ஒழுக்கத்தைப் பரப்பலாம் என்று பலர் தெரிவித்தார்கள். நல்ல பிரசாரம் செய்வதின் மூலமாக நம் நாட்டில் தவறு செய்கின்றவர்களைத் திருத்திவிட முடியும் என்றல் இந்தச் சட்டசபையே நம் நாட்டுக்குத் தேவையில்லை, பல சட்டங்கள் எல்லாம் தேவையில்லை, இந்த நாட்டுக்கு போலீஸே தேவையில்லை. இந்த நாட்டில் புத்தர் காலத்திலிருந்து பலர் இதோபதேசங்களைச் செய்திருக்கிறர்கள். இப்பேர்ப்பட்ட சிறந்த உபதேசங்களை அதன் பின்னல் யாரும் பார்த்திருக்க முடியாது, யாரும் கேட்டிருக்க முடியாது. அப்பேர்ப் பட்ட உபதேசங்களை எல்லாம் செய்த பிறகும்கூட தவறு செய்கின்றவர்கள் இந்த நாட்டில் இருந்து கொண்டுதான் இருக்கிறர்கள். சட்டத்தினல் தான் இம்மாதிரி தவறு செய்கின்றவர்களை (இன்காரிஜிபிள்) திருத்த முடியும் என்று நினைக்க வேண்டியிருக்கிறது. அதல்லாமல் உபதேசங் களினல் முடியும் என்று நினைப்பதற்கில்லை. வள்ளுவர் பெருந்தகையார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னல்......

அச்சமே கீழ்களது ஆசாரம், எச்சம்
அவா வுண்டேல் உண்டாம் சிறிது

என்று குறிப்பிட்டிருக்கிறர்கள். கீழ் மக்களுக்கு எத்தகைய உபதேசங்களை சொல்வதினலும் பயன் ஏற்படாது. தவறு செய்கின்றவர்களை அச்சுறுத்தினல் தான் திருத்த முடியும் என்ற கருத்தை தெரிவித்திருக்கிறர். சொல் லினல் பயன்படுபவர்கள் சான்றேர்கள்தான். "சொல்லப் பயன்படுவர் சான்றேர்" என்று வள்ளுவர் கூறியிருப்பது போன்று உபதேசங்கள் எல்லாம் சான்றேர்களுக்குத்தான் பயன்படும். இவ்விதம் உபதேசங் களின் மூலம் திருத்த முடியும் என்றல் நமது நாட்டில் பல பெரியார் கள் செய்து வரும் சன்மார்க்க உபதேசங்களின் மூலமாக நம் நாடு எவ்வளவோ திருந்தியிருக்க வேண்டும். மேலும் இந்தமாதிரியான சட்டம் உலகத்தில் வேறு எந்த நாட்டிலும் இல்லை என்று குறிப்பிட்டார்கள். ஆனல் உலகத்திலே வேறு எந்த நாட்டிலும் நாட்டுக்கு கேடு விளையக்கூடிய செயல்களைச் செய்கின்ற ஒரு கூட்டம் இம்மாதிரி இல்லை என்பதையும் நினைவில் வைத்திருக்கவேண்டும். இந்த நாட்டில் மாத்திரம்தான் இப் படிப்பட்ட ஒரு சட்டம் கொண்டு வரவேண்டிய நிலைமை ஏற்பட்டது என்று சொன்னல் இந்த நாட்டில்தான் இவ்விதமான செயல்கள் நடக்கின்றன, வேறு நாட்டில் இம்மாதிரி செயல்கள் புரிகின்றவர்கள் கிடையாது. அதனல் தான் இந்த நாட்டில் இம்மாதிரி சட்டம் கொண்டுவரப்பட்டிருக்கிறதே தவிர வேறு எந்த காரணமும் இல்லை. யார் ஒழுக்கக்கேடான செயல்களை புரிகின்றர்களோ அவர்களைத் தண்டிப்பதற்குத்தான் இந்தச் சட்டத்தில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. அதனல் எந்தவிதமான தவறும் ஏற்பட்டு

17th February 1959] [Sri A. Vedarathnam]

விடாது. அதேமாதிரி சில அங்கத்தினர்கள் சொன்னார்கள், பகுத்தறிவு காரியங்களைப் பரப்புவதற்கும், அறியாமையைப் போக்குவதற்கும் செய்யப் படுகின்ற காரியங்களுக்கும் இந்தச் சட்டத்தினால் பாதகம் ஏற்படும் என்று தெரிவித்தார்கள். இந்த மாதிரியான நல்ல காரியங்களை, அதற்கான உபதேசங்களை செய்தால் யாரும் அவர்கள் பேரில் நடவடிக்கை எடுக்க மாட்டார்கள். இப்போது அறியாமையை போக்குகிறோம், பகுத்தறிவைப் பரப்புகிறோம் என்று சொல்லி சுவற்றில் என்னவெல்லாம் எழுதப்படு கிறது என்பதை நாம் பார்க்கவேண்டும். "அவுட்டுத்திரி ஒழிக", "உச்சிக்குடுமி ஒழிக" என்றெல்லாம் விளம்பரங்கள் செய்யப்பட்டிருக் கின்றன. தன் கட்சியில் பலமில் ாதகை உணர்ந்த வக்கீல் எதிர்க் கட்சி வக்கீலைத் திட்டுவதுபோல. (வக்கீல் நண்பர்கள் கோபித்துக் கொள்ளக் கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன்)—தங்களுடைய கருத்துக்களை, தங் களுடைய கொள்கைகளை நேரான வழியில், சன்மார்க்க வழியில்—போதிக்க முடியாதவர்கள்தான் இம்மாதிரியான செயல்களில் இறங்குகிறார்கள். தங்கள் கருத்துக்களை நல்ல முறையில் மக்களிடம் தெரிவிக்க முடியும். என்று எண்ணமுள்ளவர்கள் இம்மாதிரியான வசைபுராணம் செய்வதில் இறங்கமாட் டார்கள். அவ்விதம் ஆற்றல் பெற்றவர்கள் நேரிய முறையில் எளிய முறையில் மக்களிடம் தங்கள் எண்ணங்களைச் சொல்ல முன் வந்திருப் பார்கள். கனம் கோவிந்தசாமி அவர்கள் சொன்னார்கள், "கிருஷ்ண லீலா" படத்திலும் ஆபாசங்கள் இருக்கின்றன என்றும் "திருவண்ணா மலை தீபம்" அறியாமையால் நடத்தப்படுகிறது என்றும் சான்றுகளாக எடுத்துக்காட்டினார்கள். கிருஷ்ண லீலா-வில் இருக்கும் கருத்தை சீர்தூக்கி பார்க்கின்றவர்களுக்குத்தான் தெரியும். தாயைப் பார்க்கின்ற கண்ணால் தாசியைப் பார்ப்பதில்லை. தாயை நோக்குகின்ற உள்ளம் வேறு, தாசியை பார்க்கின்ற உள்ளம் வேறு. இரண்டையும் ஒரே கண்ணால்தானே பார்க் கிறோம் என்று நினைத்துவிடக்கூடாது. தாயின் உள்ளம் வேறு, தாசியின் உள்ளம் வேறு, இதைச் சாதாரண மக்களும்கூட அறிவார்கள். இந்த வித்தியாசத்தை உணர்ந்தவர்கள் யசோதாவையும் ருக்மணியையும் சினிமா ஸ்டார்களாக நினைத்துக்கொண்டு பார்ப்பதில்லை. அதேபோன்று கண்ணப்பர் ஏன் சிவலிங்கத்தைக் காலால் மிதித்தார் என்பதை சுவாமி சகஜானந்தா அவர்கள் தகுந்த மேற்கோளோடு, தகுந்த ஆராய்ச்சியோடு எடுத்துக்காட்டினார்கள். கண்ணப்பர் என்பவர் 63 நாயன்மார்களில் மிகவும் சிறந்த பக்தர். அவர் ஆறாவது நாளிலேயே அவரது லட்சி யத்தைப் பெற்றார். ஆறாவது நாளிலேயே முக்தி பெற்ற ஒரு சிறந்த பக்தர் கண்ணப்ப நாயனார் என்பவர். அவருடைய பக்தியைப்பற்றி அறிந்த வர்கள் அவர் சிவலிங்கத்தைச் செருப்பால் உதைத்தார் என்ற கண் ணோட்டத்தோடு பார்க்கமாட்டார்கள். அவரது பக்தியைப்பற்றி பார்ப்பார் கள். அதே போன்று திருவண்ணாமலையில் ஏராளமான மக்கள் டின் டின்னாக எண்ணெயைக் கொண்டுபோய் தீபத்திற்கு ஊற்றிக்கொண்டி ருக்கிறார்கள் என்று சொன்னார்கள். அவர்களுக்கு ஒன்று சொல்லுகிறேன். நான் புராணம் சம்பந்தப்பட்ட வரலாற்றை சொன்னால், அவைகள் எல்லாம் வெறும் புரட்டு என்று சொல்லித் தள்ளிவிடுவீர்கள், விஞ்ஞான ரீதியாக ஒன்றை நினைவூட்ட விரும்புகிறேன். பல நோய்க்குக் காரணம் கிருமிகள். இந்த நோய்க் கிருமிகள் தண்ணீரிலே விருத்தியாகின்றன, தரையிலே விருத்தியாகின்றன, காற்றிலே பரவுகின்றன. இந்த மாதிரி இருக்கிறது என்று அவர்களும் ஒத்துக்கொள்வர்கள். அந்த முறையிலே "ஸ்டெம் போரர்" என்ற பூச்சி ஒன்று இருக்கிறது. இந்த விவசாயப் பயிர்களிலே வருகிறது இந்த நோய்க்கிருமி. இதைக் குருத்துப் பூச்சி என்று தமிழிலே சொல்லுவார்கள். இந்தப் பூச்சியை அழிப்பதற்கு எந்த விதமான மருந்தும் பிரயோசனப்படாது. "போலிடால்" போன்ற விஷ சத்துள்ள—காற்றிலே கலந்து வந்து அந்தக் காற்றை சுவாசித்தாலே கெடுதலைச் செய்யக் கூடிய சத்துள்ள—மருந்துகூட ஸ்டெம் போரரை அழிப்பதில்லை. ஏனென்றால் அந்தப் பூச்சி குருத்தைச் சாப்பிட்டுக் கொண்டே பயிரின் உள்ளேயே வேரூச்சச் செல்கிறது. ஆகையினால் எந்த மருந்தும் அதை உள் சென்று பாதிக்காது. விவசாயத்திலே ஜப்பானி யர்கள் நவீனமான முறைகளைக் கண்டுபிடித்தவர்கள் இந்தப் பூச்சிக்கு

12 noon

[Sri A. Vedarathnam] [17th February 1959

என்ன மருந்து கண்டுபிடித்திருக்கிறார்கள். இது பறக்கக்கூடிய பூச்சி—விட்டில் போன்ற பூச்சி இந்த "ஸ்டெம்போரர்". அதை ஒழிக்க அவர்கள் அந்தப் பூச்சி முட்டையிடுகிற பருவ காலத்தில்—நாய்கள் குட்டி போடுகிற காலம் என்பது போல ஒவ்வொரு மிருகத்திற்கும் குட்டி போடுகிற பருவ காலம் உண்டு, அதே போல பூச்சிகளுக்கும் ஒரு பருவ காலம் உண்டு—அந்தக் காலத்தைக் கண்டு பிடித்து, அப்போது வயல்களிலெல்லாம் அகல் விளக்குகளை வைக்கிறார்கள். ஜப்பானியர்கள் விவசாயத்தில் பெயர் பெற்றவர்கள். கார்த்திகை தீபம் போட்டால் எப்படி வெளிச்சம் இருக்குமோ, அதே மாதிரி அந்த வயல்களைப் பார்த்தால் தோன்றும். ஸ்டெம் போரர் கார்த்திகை மாதம் பௌர்ணமியில்தான் முட்டையிட்டுக் குஞ்சு பொறிக்கும்—அது தான் குஞ்சு பொறிக்கக்கூடிய காலம். அதை நம் முன்னோர்கள் விஞ்ஞான ரீதியில் எப்படி அறிந்தார்களோ, அந்த கார்த்திகை மாதம் பௌர்ணமியன்று நாடு முழுவதும்—வீடு வாசல் முழுவதும்—ஆலயங்கள் முழுவதும்—உயர்ந்த இடங்களிலெல்லாம் வெளிச்சத்தை வைத்தால் விட்டில் போல் அந்தப் பூச்சிகளெல்லாம் பறந்து விழுந்து மடிந்து விடும் என்ற காரணத்தினால்தான் வைக்கிறார்கள். திருவண்ணாமலையில் மலை உச்சியில் ஏன் வைக்கிறார்கள் என்றால் கண்ணுக்கு எட்டிய தூரத்தில் இருக்கும் கிருமிகளெல்லாம் வந்து விழுந்து கிருமி நாசத்தைச் செய்வதற்காகத்தான் வைக்கிறார்கள். அதோடுகூட அட்மாஸ்பியரிக் டிஸ்இன்பெக்ஷன் செய்ய அகில் போன்ற வஸ்துக்களைப் போடுகிறார்கள். இந்தப் புகை எத்தனையோ கஜ தூரத்தில் வாயுமண்டலத்தில் இருக்கிற கிருமிகளையெல்லாம் நாசம் செய்கிறது என்று அறிஞர்கள் கூறுகிறார்கள். அறிவுத்திறனோடு—சாஸ்திரத்தை—சிறந்த விஷயங்களை நமது தர்மத்திலே சுகாதார விதிகளை சாஸ்திரத்தோடு இணைத்து, வேறு சட்டங்கள் பிரயோசனப்படாது, சாஸ்திரம் என்று சொன்னால்தான் மக்கள் பக்தி காரணமாக ஒவ்வொருவரும் தவறாமல் கட்டுப்படுவார்கள் என்று அதை சேர்த்து நம் மத தர்மங்களாக விதித்திருக்கிறார்கள். எனவே நூற்றுக் கணக்கான டின்கள் எண்ணெயைக் கொட்டுவதும் நெய்யை ஊற்றுவதும் வியர்த்தமாகவில்லை, வீணாகவில்லை என்று அவர்களுக்கு நினைவூட்ட விரும்புகிறேன். இந்த உண்மையைக் கூர்ந்து கவனிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இன்றைக்கும் ஜப்பானிய நாட்டிலே ஸ்டெம் போரர்களை அழிக்க வயல்களில் தீபம் போடுகிறார்கள் என்று சொன்னால், பல நூற்றாண்டுகளுக்கு முன்னாலேயே கண்டுபிடித்து, கிருமிகளை நாசம் செய்ய வழி செய்திருப்பதை ஆராய்ந்து அறிந்து கொள்ளாமல்—எதையும் தவறு என்று சொல்வது சுலபம்—நன்கு சூழ்ந்து ஆராயாமல் அப்படி எந்த விஷயத்தையும் சொல்லாமல் இருக்கவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

இந்த மாதிரி ஆபாசமான விஷயங்களை இது கண்டிக்கிறதேயல்லாமல் எதிர்க் கட்சியை இந்த மாதிரி தவறான்முறையில் அடக்கவேண்டும் என்று சட்டம் கொண்டு வருகிறார்கள் என்று கூறுகிறார்கள், அது பெரும் தவறு என்று சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அந்த மாதிரி இவர்களுடைய பேச்சு உரிமையை, செய்கிற காரியங்களைத் தடுக்கவேண்டும் என்ற முறையில் முக்கியமான சட்டம் கொண்டு வரவேண்டிய அவசியம் அரசாங்கத்திற்குக் கிடையாது. நம் ஜனநாயகத்தில் எதிர்க் கட்சிகளுக்கு அளித்திருக்கிற உரிமை இங்கே மந்திரிகளை எப்படி வேண்டுமானாலும் திட்டலாம், அதற்கு எந்த வித நடவடிக்கையும் எடுத்துக்கொள்ள முடியாது என்ற விஷயத்தை அவர்களே நன்கு அறிவார்கள். ஒரு சிறிய சம்பவத்தை நான் கூறவேண்டுமானால் தேசீய மொழி விசாரணைக் குழு இங்கே வந்தது எல்லோருக்கும் நினைவிருக்கலாம். அதிலே மந்திரிகள் இருந்தார்கள், மாஜி மந்திரிகள் இருந்தார்கள், பார்லிமெண்ட் பிரதிநிதிகள் இருந்தார்கள், எல்லோரும் சேர்ந்து வந்தார்கள். அந்த தேசீய மொழி விசாரணைக் குழு வந்தபோது "நாம் அதை எதிர்க்கவேண்டும், கருப்புக் கொடி பிடிக்கவேண்டும், கோ பாக் என்று சொல்லி எங்கள் எதிர்ப்பு உணர்ச்சியை கோஷங்கள் மூலமாகக் காட்டவேண்டும், ஊர்வலம் மூல

17th February 1959] [Sri A. Vedarathnam]

மாகக் காட்டவேண்டும்" என்று எதிர்க்கட்சியினர் கேட்டார்கள். அப்போது போலீஸ் அமைச்சர் அவர்கள் அனுமதி கொடுத்து, இந்த நாட்டு சர்க்கார் நியமித்த அந்தக் கமிஷனை எதிர்க்க நம் சர்க்கார் அவர்களுக்குப் பெர்மிஷன் கொடுத்திருக்குமானால், அதைக் காட்டிலும் சிறந்த ஜனநாயகச் செய்கையை நாம் காண முடியாது என்ற விஷயத்தை நான் அவர்களுக்குச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். அரசாங்கம் செய்த குற்றங்களை எடுத்துக்காட்டி பிரசாரம் செய்வதிலே எந்தவிதத் தடையும் கிடையாது. 'எவ்வளவு வேண்டுமானாலும் அவர்களுடைய கருத்தைத் தெரிவிக்கலாம். அவர்கள் கூறுவதை காட்டிலும் அதிகமாகக் கூற முடியும். அப்படிக் கூறினால்கூட அதைத் தடுக்கச் சட்டம் கிடையாது என்ற விஷயத்தை நினைவூட்டி, இதெல்லாம் இந்தக் கட்சிகளைத் தடுக்க மறைமுகமாகச் சட்டத்தைக் கொண்டு வருகிறார்கள் என்று சொன்னால் அது நீதியல்ல—நியாயமல்ல—தர்மமல்ல; இப்படி நியாயமில்லாமல் பேசுகிறார்கள் என்று நான் கூறுவேன். அந்த மாதிரி நீதியோடு, தர்மத்தோடு, நியாயமாகச் செய்கிற பிரசாரத்தை இந்தச் சட்டம் தடுக்காது. காந்தியடிகளின் பரம்பரையிலே வந்தவர்கள்—காந்தியடிகளின் வாரிசாக வந்தவர்கள்—கடைசி ஆள் இருக்கும் வரையில் அந்த மாதிரி முறையைக் கையாள மாட்டார்கள் என்று நினைவூட்டி, அதற்கல்ல, இங்கே பிற நாட்டிலிருந்து எத்தனையோ பேர்கள் வருகிறார்கள், அவர்களெல்லாம் பார்த்தால் சகிக்க முடியாத அளவுக்கு, நம் நாட்டு மக்களே, கொஞ்சம் நாகரீகம் உள்ளவர்கள் அண்ணாந்து பார்க்க முடியாத அளவுக்கு இன்றைய தினம் சுவர்களில் விளம்பரங்கள் செய்யப்பட்டுள்ளன.' அந்த மாதிரி இருப்பதை எந்த நாகரீக சர்க்காரும் பார்த்துக்கொண்டு இருக்க முடியாது. இந்த முறையில்தான் ஒரு கட்சி வளரவேண்டும் என்று சொன்னால் அந்த மாதிரி நினைக்கும் ஸ்தாபனமானது வாழ்வதற்கு லாயக்கற்றது—தகுதியற்றது—என்று கூற விரும்புகிறேன். இந்த மாதிரி நிலையை இத்தனை ஆண்டுகள் பிரசாரம் மூலமாகக் கட்டுப்படுத்த முடியாத காரணத்தினால் இப்படி ஒரு மசோதா இந்தப் பிரதேசத்தில் வர நேர்ந்திருக்கிறது. இதை எந்த முறையில் கட்டுப்படுத்துவது என்று புரியவில்லை. இதையெல்லாம் தடுக்க இந்த மாதிரி ஒரு சட்டம் இருக்க வேண்டிய அவசியம் வந்தது விசனிக்கத் தகுந்த விஷயம். இதை நான் முழு மனதோடு ஆதரிக்கிறேன்

12-10 p.m.

**Sri C. N. ANNADURAI** : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, தகாத முறையிலே ஒட்டப்படுகிற விளம்பரங்களைத் தடுப்பதற்காகவும், அப்படிப்பட்ட விளம்பரங்கள் ஆபாசத்தைத் தூண்டுவனவாக இருக்குமானால் அவைகளைப் தடுப்பதற்காகவும் ஒரு சட்டத்தைத் தனியாகக் கொண்டு வரவேண்டிய அவசியத்தில் ஆட்சிப் பொறுப்பிலுள்ளவர்கள் ஆளாக்கப்பட்டிருப்பதைப் பற்றி எனக்கு முன்னால் பேசிய அங்கத்தினர் சர்தார் வேதரத்தினம் பிள்ளை அவர்கள் விசனப்பட்டதைப் போலவே, ஆபாசத்தைத் தடுக்கவேண்டும் என்ற நோக்கத்தைக் கூறிக் கொண்டு, அந்த நோக்கம் நல்ல விதத்திலே நிறைவேற்றப்பட முடியாத முறையில், ஒரு சட்டத்தை அவர்கள் கொண்டு வருகிறார்களே என்று நானும் விசனப்படுகிறேன். அப்படி ஆபாசம் இந்த நாட்டிலே அதிகப்படுத்தப்பட்டிருப்பதாகவும், அதை அடக்கியே தீரவேண்டும் என்றும் ஆட்சியாளர்கள் ஏற்றுக்கொண்டிருக்கிற பொறுப்பு—ஆபாசம் எது என்பதை அவர்கள் அறிந்திருப்பது போலவும், ஆபாசத்தைப் பல வகைகளிலும் தடுக்கின்ற பொறுப்பு ஆட்சியில் இருக்கின்ற இவர்களிடம் தரப்பட்டிருப்பது போலவும், வேறு யாரோ பல பேர்கள் ஆபாசத்தை உண்டாக்கிக் கொண்டிருக்கிறார்கள் என்ற மனப்பான்மையிலும் இந்தச் சட்டத்தைக் கொண்டு வருகிறார்கள். ஆபாசம் என்பது அவரவர்களுடைய மனப் போக்கிற்குத் தகுந்தபடியும், காலத்திற்குக் காலம் மாறுபட்டும் வருகிறது என்பதை நாம் இன்றைய தினம் உணர்ந்து பார்ப்போமானால், கருத்துக்கள் உருவாகிக் கொண்டிருக்கும் இந்தக் காலத்தில் கட்டுப்படுத்தக் கூடிய சட்டங்களைப் போடுவது ஜனநாயகத்திற்கு முரணானது என்பது மட்டுமல்ல—பகுத்தறிவு வளர்வதற்கு அது பெரும் தடையாகவும் இருக்கும்.

இருபது, இருபத்தைந்து ஆண்டு காலத்திற்கு முன்னாலே ஆலயத்திற்குள் பழங்குடி மக்கள் நுழைவது ஆபாசம் மட்டுமல்ல, பெரிய பாவம் என்று கருதப்பட்டது. ஆலயத்திற்குள் பழங்குடி மக்கள் போக வேண்டும் என்று பேசப்பட்ட நேரத்தில், நுழைந்தால் ஆலயத்தில் இருக்கும் புனிதத்தன்மை போய்விடும் என்று கற்றறிந்த மேதைகளெல்லாம் சொன்னார்கள். அப்படிப்பட்ட கற்றறிந்த மேதைகள் சொன்னது, கற்றதைச் சொன்னார்களே தவிர, உலகத்தையொட்டிச் சொல்லவில்லை என்ற காரணத்தால், ஆலயப் பிரவேசச் சட்டத்தைக் கொண்டுவந்து பழங்குடி மக்களுக்கு நல்ல உரிமைகள் தரப்படவேண்டும் என்ற நல்ல நிலைமை ஏற்படுத்தப்பட்டது.

எந்த நேரத்தில் புதுமை எடுத்துச் சொல்லப்பட்டாலும், அது ஆபாசமாகத் தான் முதலிலே கருதப்பட்டு, அதனாலே பல்வேறு வகையான அனர்த்தங்கள் ஏற்படும் என்று ஊரிலே உள்ளவர்கள் பேசி, அதற்குப் பிறகு Survival of the fittest என்று ஆங்கிலத்தில் சொல்வது போல், எதற்கு நல்ல உயிரோட்டம் உள்ள வலுவு இருக்கிறதோ அந்தப் பிரசாரம் நிலைக்கும், மற்றப் பிரசாரம் தோற்கும்.

ஒரு கனம் அங்கத்தினர் இங்கே குறிப்பிட்டதைப் போல, “ இவர்கள் ஏதோ எழுதிவிடுகிறார்கள் ; ஆனால், மக்கள் அவைகளிலே எதும் மயங்கி விடவில்லை ; மக்கள் ஏமாந்துவிடவில்லை என்பதை எங்கள் எண்ணிக்கையைப் பார்த்துத் தெரிந்துகொள்ளுங்கள் ” என்று குறிப்பிட்டார்கள். மக்கள் அந்தப் பிரசாரத்தை நம்பவில்லை என்று நீங்கள் வாதமாகக் காட்டுகிறபோது, எதற்காகச் சட்டம் கொண்டுவர வேண்டும் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.

இதற்கு ஏற்கனவே உள்ள சட்டம் இடம் அளிக்கிறது என்று எங்கள் தரப்பிலிருந்து எடுத்துச் சொல்லிய நேரத்தில், நம்முடைய லால்குடி தொகுதி அங்கத்தினர், “ 295 (எ) செக்ஷன் அதற்குப் போதுமானது அல்ல ” என்று சொன்னார்கள். சொல்லிவிட்டு, அவர்கள் “ இண்டியன் பினல் கோட் ” ஐத் தேடினார்கள். துரதிருஷ்டவசமாக அது அவர்களுக்குக் கிடைக்கவில்லை ; அதிருஷ்டவசமாக அது எனக்குக் கிடைத்தது. கிடைத்த காரணத்தாலே, ஏற்கனவே உள்ள சட்டம் இதற்குப் போதும் என்பதற்கேற்ற வாசகங்கள் இருப்பதை நான் இந்த நேரத்தில் கவனப் படுத்த விரும்புகிறேன்.

“ 295—A. Whoever with deliberate and malicious intension of outraging the religious feelings of any class of citizens of India, by words, either spoken or written, or by visible representations insults or attempts to insult the religion or the religious beliefs of that class, shall be punished with imprisonment. . . . ”

என்று அந்தப் பிரிவு இருக்கிறது. இந்தச் சட்டத்ினுடைய நோக்கத்தைப்பற்றி அறியவேண்டுமென்றால், இந்த மசோதாவுக்குப் பின்னாலே இருக்கும் ஒரு சிறு வரலாற்றை இந்த மன்றத்திலே நான் சொல்லப் பிரியப்படுகிறேன். 1956-ல் இந்த மசோதாவினுடைய ஒரு சுருக்கம் ஒரு தனிப்பட்ட அங்கத்தினராலே தரப்பட்டது. தனிப்பட்ட அங்கத்தினரால் 1956-ல் தரப்பட்ட மசோதாவில், “ சுவர்களையும் ஊர்களையும் அசுத்தப் படுத்துகிறார்கள், அதனால் ஆபாசமாகக் காட்சியளிக்கிறது, வரைமுறையற்ற முறையில் விளம்பரத் தாளை ஒட்டுவதனால் ஊருக்கு இருக்கும் அலங்காரம் கெடுகிறது. அழகு பாழ் படுகிறது. அதைத் தடுக்க வேண்டும் ” என்ற முறையிலே தான் இந்த மசோதாவை ஒரு தனிப்பட்ட அங்கத்தினர் கொண்டுவந்தார். இதை ஒரு நல்ல வாய்ப்பாகக் கருதிக் கொண்டு ஆட்சியாளர்கள், “ நாங்கள் இதைச் சர்க்கார் மசோதாவாகக் கொண்டு வருகிறோம் ” என்று வாக்களித்து, அவரும், எதிர்ப்பாராத அளவு—ஆனால் இன்றையதினம் அவர் ஆதரிக்கக்கூடும்—அவர் எதிர்ப்பாராத

17th February 1959] [Sri C. N. Annadurai]

பல ஷரத்துக்களை இதிலே புகுத்தியிருக்கிறார்கள். ஆகையால்தான், இந்த மசோதாவிலே இருக்கும் ஷரத்துக்களைப்பற்றி ஆராய்வதற்குக்கூட எனக்கு மனம் இடம் தராமல் இந்த நோக்கத்தை நான் வன்மையாகக் கண்டிக்கிறேன்.

ஆபாசத்தைத் தடுப்பதற்கு நீங்கள் யார் என்று உங்களை உலகம் என்றையதினம் கேட்கும் என்றால், ஆபாசம் எது என்று அறிவதற்கு நீங்கள் அருகதை பெற்றவர்கள் என்று உலகம் ஏற்றுக்கொண்டால், இது ஆபாசம், இது ஆபாசம் அல்ல என்று நீங்கள் சொல்லக்கூடும்.

சினிமா விளம்பரங்களைப் பார்த்து, இது ஆபாசம் என்று கருதப்படு வதை பல அங்கத்தினர்கள் எடுத்துச் சொன்னார்கள். நிச்சயமாக நான் உங்களுக்குச் சொல்வேன்—தமிழ்நாட்டிலே தயாரிக்கப்படுகிற சினிமா விளம்பரங்களுக்குத் தமிழ்ப் பெண்களை விளம்பரத் தாள்களிலே போட்டால் அது எந்த அளவுக்கு ஆபாசமாகக் கருதப்படுகிறதோ, அந்த அளவுக்கு மற்ற இடங்களில் கருதப்படுவது இல்லை. அதே நேரத்தில் வட நாட்டுப் பெண்களை சினிமா விளம்பரத் தாளிலே போட்டால் தமிழ் நாட்டில் உள்ளவர்கள் அதை அந்த நாட்டினுடைய பழக்கத்தில் ஒன்றாக இருக்கிறது என்று கருதிவிடுகிறார்கள். தமிழ் இலக்கணத்தில் " இடக்க ரடக்கல் " என்று ஏற்கெனவே சொல்லிவைத்திருக்கிறார்கள். கெட்டதை நாம் அடக்கியே பேச வேண்டும் என்ற " இடக்க ரடக்கல் " என்னும் இலக்கணத்திற்குக் கட்டுப்பட்டு, நீங்களே யூகித்துக்கொள்வீர்கள் என்று சொல்லாமல் விட்டுவிடுகிறேன். நாட்டுக்கு நாடு, காலத்திற்குக் காலம் மாறுபாடு கொண்டிருக்கும் பல்வேறு கருத்துக்களை நீங்கள் தடுக்க வேண்டும் என்று விரும்புவது—எங்கள் தரப்பிலே உள்ள கனம் அங்கத் தினர்கள் எடுத்துச் சொன்னது போல், அவலை நினைத்துக் கொண்டு உரலை இடித்த கதையாக, எதை எதைச் செய்தால் எதிர்க்கட்சிப் பிரசாரத்தைத் தடைபடுத்த முடியும் என்ற எண்ணத்திலே நீங்கள் செய்கின்றீர்கள் என்று உங்கள் பேரிலே பகிரங்கமாகக் குற்றம் சாட்டுகிறேன். ஆபாசத்தை அடக்குவதற்கு இவர்களுக்கு இருக்கும் ஆற்றல் பயன்படவில்லையா என்று நான் அவர்களைக் கேட்கிறேன். இன்னது ஆபாசம் என்று பொது மக்க ளிடத்தில் எடுத்துச் சொல்லி, இதுவரை தாரால் எழுதப்பட்ட எந்தச் சுவற்றில், எத்தனை சுவற்றில் வெள்ளை அடித்தார்கள் காங்கிரஸ் தொண் டர்கள்? வெள்ளை அடித்து அந்த ஆபாசத்தை மூடினார்கள். எந்த வீட்டிலே எழுதப்பட்டதோ, அதை அந்த வீட்டுக்காரர்களோ மற்றவர்களோ, ஊரிலிருக்கும் பொதுநலத் தொண்டர்களோ பார்த்து, இது எழுதப்பட்டி ருப்பதால் ஊருக்கு ஆபாசம் விளைகிறது, பலாத்கார உணர்ச்சி தூண்டப் படுகிறது, ஆகையால் இதை அழிப்போம் என்று அழிக்கப்பட்ட சுவர்கள் எத்தனை ?

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : ' I rise on a point of order, Sir. கனம் சபாநாயகர் அவர்களே, ஒரு ஒழுங்குப் பிரச்னை எழுப்பு கின்றேன். நண்பர் அவர்கள், "எந்த இடத்திலே காங்கிரஸ்காரர்கள் ஆபா சத்தை அழித்தார்கள் ? " என்று கேட்கிறார். நான் அவருக்குச் சொல்கிறேன்—சேலம் ஜில்லாவில் பல இடங்களில் அம்மாதிரி ஆபாசங்கள் சுவற்றில் எழுதப்பட்டதாகப் புகார் வந்து, அவை அழிக்கப்பட்டிருக்கின்றன. இல்லை என்று மறுப்பதற்கில்லை. ஆகையால், அவர் சொல்வது தவறு.

MR SPEAKER : This is not a point of order. The Hon. member is giving information.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : கனம் அங்கத்தினர் தவறாகச் சொல்லுகிறார் அதற்காகத்தான். . .

MR. SPEAKER : The Hon. member cannot say that.

[17th February 1959

**SRI C. N. ANNADURAI** : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, அதற்கு ஏற்ற விதத்திலே ஒரு தொண்டர் படை நாட்டிலே அமைக்கப்பட்டிருக்குமானால், அமைக்க இன்னையதினம் ஆட்சியாளர் முற்படுவார்களானால், நாங்கள் சார்ந்திருக்கும் கழகத்தின் சார்பில், அந்தத் தொண்டர் படையில் எத்தனை பேரைச் சேர்க்க முடியுமோ அத்தனை பேரைச் சேர்த்து வைப்பதற்கு கழகத்தின் சார்பில் தயாராக இருக்கிறேன். ஆபாசம் ஒழிக்கப்படவேண்டும் என்பதிலே யாருக்கும் அக்கறை இல்லாமல் போய்விடாது. ஆனால், எது ஆபாசம் என்பதைக் குறிப்பிட்டுக் காட்டுவதற்கு, அந்தந்த இடங்களிலேயுள்ள விருப்பு வெறுப்புக்குத் தக்கபடி, அந்தந்த இடத்திலுள்ள அரசியல் மாச்சரியங்களுக்குத் தக்கபடி வழக்குகள் ஜோடித்துத் தொடர்வதற்கும் வழிவகை செய்து, நீங்கள் ஏற்படுத்துகிற இந்தச் சட்டம் மறைமுகமாக—நீங்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும்—எதிர்க்கட்சிப் பிரசாரத்தைத் தடுக்கத்தான் பயன்படும். ஆங்கிலத்தில் உள்ள வார்த்தையை இங்கே கவனப்படுத்தினால் ஆட்சியாளர்கள் என்பால் கோபப்படமாட்டார்கள் என்று கருதுகிறேன். "Writing on the wall" என்பது அகராதியில் அனுமதிக்கப்பட்ட வார்த்தைகளாகும். சுவற்றிலே எழுதப்பட்டிருப்பதைப் பார்த்துத்தான் நாட்டு மக்கள் என்ன கருதுகிறார்கள் என்பதை ஆட்சியாளர் அறிந்துகொள்ளமுடியும். ஜூலியஸ் ஸீஸர் ஆண்ட காலம் முதற்கொண்டு மாக்மில்லன் பிரபு ஆளும் இந்தக் காலம் வரை மேல்நாடுகளிலே அவ் வார்த்தைகளை அனுமதித்திருக்கிறார்கள். அப்படியிருக்கும்போது, சுவற்றிலே எங்கோ எழுதப்பட்டிருந்தால், அதைப் பார்த்து மனம் பதறி, " இது தடுக்கப்பட வேண்டும் " என்று இவர்கள் ஏன் பதற வேண்டும் என்று எனக்குத் தெரிந்துகொள்ள முடியவில்லை.

உங்களுக்கு நான் மற்றொரு உதாரணத்தைச் சொல்ல முடியும். எங்களுடைய கழகம் இருக்கும் ராயபுரத்திலே " அறிவக "த்திற்கு எதிரில் ஒரு பெரிய சுவர் இருக்கிறது. அந்தச் சுவற்றில் எங்களைப் பிடிக்காத கட்சியார், " காட்டிக்கொடுத்தவன் கலைஞனா "? என்று எழுதியிருக்கிறார்கள். நான் அந்தச் சுவற்றில் வெள்ளை அடிக்கக்கூடாது என்று சொல்லி, அதைப் பார்த்து பொது மக்கள் எங்களைப் பற்றித் தவறாகக் கணக்கெடுத்துவிட்டால், பொதுமக்கள் கருத்துக்குத் தலைவணங்க வேண்டும் என்று சொன்னேனே தவிர, இது இருக்கும் வரையில் கழகத்திற்கு இழுக்கு என்று சொல்லவில்லை. இவர்களுக்கு ஏன் அந்த விஷயத்தில் துணிவுடைமை இல்லை ? ஆபாசத்தைப் பிரசாரத்தால் தடுக்க முடியும் என்று இவர்கள் ஏன் கருதவில்லை ? இவர்களிடம் பிரசார பீரங்கிகளுக்குக் குறைவா ? சுழல் துப்பாக்கிகள் இல்லையா ? இவர்கள் எத்தனை வகையான பிரசார வகைகள் வைத்திருக்கிறார்கள் ; ஏன் அவைகளை விட்டு அந்த ஆபாசங்களை அகற்றியிருக்கக்கூடாது ? இதைப் பற்றிச் சொல்லும் நேரத்தில், இது எந்த எந்த இடத்திற்கு நம்மை அழைத்துச் செல்லும் என்பதை நம்முடைய மதிப்பிற்குரிய சாமி சகஜானந்தா அவர்கள் கொஞ்சம் கண்ணீரோடு பேசிய போது நான் மெத்த வருத்தப்பட்டேன். அவருக்கும் அவர் போன்றோருக்கும் ஒன்று சொல்லிக்கொள்வேன். நீங்கள் ஆழ்ந்த நம்பிக்கையோடு வைத்துக் கொண்டிருக்கும் பல கொள்கைகள் எதிர்காலத் தலைமுறைக்கு ஏற்றதல்ல என்று உலகம் தீர்ப்பளித்திருக்கிறது. உங்களுக்கு எவ்வளவு தான் அதில் ஆழ்ந்த நம்பிக்கை இருந்தாலும், அந்த நம்பிக்கைகளெல்லாம் நசித்துக்கொண்டு வருகின்றன. உலகத்தில் ஏற்பட்டுக் கொண்டு வரும் மாறுதல் காரணத்தால், இதைச் சொன்னால் மனம் புண்பட்டுவிடும் என்று எண்ணுவதைவிட்டு, இதையெல்லாம் காட்டிலும் கொள்கையிலே உறுதியிருந்தால் மனம் புண்படாது என்று சொல்வேன். சர்தார் வேதரத்னம் அவர்கள் சொன்னதுபோல், நீங்கள் அப்படியே கருதி, மனம் புண்படுகிறதே என்ற எண்ணத்தில் இப்படிப்பட்ட முறையிலே உலகம் மாறிக்கொண்டு வருகிறது என்று; ஒன்று, நீங்கள் மாறுதலைத் தாங்க வேண்டும் ; அல்லது மாறுதலுக்கு நீங்கள் உட்பட வேண்டும் : அல்லது அந்த மாறுதலில்இருந்தே ஒதுங்கி நிற்கவேண்டும். இது முறையே தவிர

17th February 1959] [Sri C. N. Annadurai]

இதைச் செய்யாதே, அதைச் செய்யாதே என்று எடுத்துச் சொல்லிக் கொண்டிருப்பது முறையாகாது என்று மறுபடியும் எடுத்துச் சொல்லு கிறேன்.

இவர்கள் நினைத்தால் இந்தச் சட்டத்தை நிறைவேற்ற எண்ணிக்கை பலத்தைப் பெற்றிருக்கிறார்கள். இந்த நேரத்திலே தான் இவர்கள் செய் யும் சட்டத்திலே அடக்க உணர்ச்சி அதிகமாக இருக்க வேண்டும். இவர் களுக்கு எண்ணிக்கை பலம் அதிகமாக இருக்கும் இந்த நேரத்தில் தான் "நாங்கள் விரும்பியிருந்தால் இந்தச் சட்டத்தைச் செய்ய முடியும்; ஆனால், நாங்கள் எங்களுடைய அதிகாரத்தைப் பயன்படுத்த விரும்பாத காரணத்தால் சட்டங்களைக் கொண்டு வரவில்லை " என்று இவர்கள் சொல் வது தான் இவர்களுக்கும் இவர்கள் சார்ந்திருக்கும் கட்சிக்கும் கீர்த்தி அளிக்குமே தவிர, ஒரு அங்கத்தினர் சொன்னது போல, "பத்து ஆண்டுகள் விட்டு பிடித்தோம்; இவர்கள் போகிற பாதை சரியாக இல்லை " என்று ஏதோ உலகத்தில் யாரும் தராத உரிமையை, உலகத்தில் யாரும் தராத ஜனநாயகத்தைக் கடைந்தெடுத்து, தேர்ந்தெடுத்து, பக்கு வப்படுத்தி, தகாதவர்கள் மத்தியிலே தந்தது போலவும், அவர்கள் நிச்சயமாகப் பயன் படுத்தவில்லை என்பது போலவும் கனம் அங்கத்தினர் சொன்னதைக் கேட்டு, அவருடைய அரசியல் வரலாற்றைப் பற்றி நான் மனதிலே எண்ணிப் பார்த்த நேரத்தில், உரிமைகள் உருவாக்கப்பட்ட நேரத்தில் அவர்கள் எந்தப்பக்கத்தில் இருந்தார் என்பதை எனக் குள்ளாக நினைத்துக்கொண்டேன். இந்த விதத்தில் பத்து ஆண்டு காலம் உரிமைகளைக் கொடுத்தோம், அதை நாங்கள் சரியாகப் பயன் படுத்திக்கொள்ளவில்லை என்று நீங்கள் சொல்வது சர்வாதிகாரத்தை உணர்ந்து நீங்கள் சொல்வதாக இருக்கிறது. அந்த மனப்பான்மை வளர வளர இதைச் செய்யலாம், அதைச் செய்யக் கூடாது என்று சொல்லுகிற மனப்பான்மையில் தான் ஸ்ரீ லால்குடி அங்கத்தினர் ஒன்று சொன்னார். "இது மட்டும் போதாது, இப்படியெல்லாம் பேசக்கூடாது" என்று சட்டம் இருக்க வேண்டும் என்று அவர் ஒரு யோசனையையும் குறிப்பிட்டார். கட்டை விரலை வாங்கி விட்டு நாக்கை அறுத்து விட்டால் நீங்கள் நிலைக்க முடியும் என்றால் தாராளமாகச் செய்யுங்கள். உங்களுக்கும் கட்டை விரல் இருக்கிறது, நாக்கும் இருக்கிறது. ஆபாசத்தைப் போக்க அறநெறி அறிந்த சர்தார் வேதரத்னம் இருக்கிறார், உங்களிடத்தில். அவர் இருப்பதால் தைரியமாக இருக்கலாம். இத்தகைய ஆபாசங்கள் நாட்டில் நடைபெறாமல் இருக்க, சட்டம் மூலமாக இல்லாமல் சர்தார் வேதரத்னம் அவர்களுடைய சன்மார்க்க மூலமாகவும், சர்தார் வேதரத்னம் அவர்கள் சொன்னது போல் அறநெறி காட்டுவதன் மூலமாகவும், சர்தார் வேதரத்னம் சொன் னது போல் வள்ளுவப் பெருந்தகை குறள் வழி காட்டுவதன் மூலமாக வும் அவைகளை ஏன் தடுக்கக்கூடாது? போலீசுக்குப் புது அதிகாரத்தைத் தருவது என்பது ஜனநாயகத்திற்கு உலை வைப்பதாகும். அறிவாளிகள், அரசியல் வாதிகள் போலீசிடத்தில் இந்த அதிகாரத்தைத் தருகிறார்கள். சுவற்றில் எழுதப்பட்டிருப்பது எந்த வகையில் இருந்தாலும் குற்றம் உடையனவா அல்லது குற்றம் உடையனவாக இல்லையா என்பதைப் பொறுத்து இருக்கிறது. சட்டத்தையும் அமைதியையும் காக்கும் பொறுப்பு, இந்தப் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருக்கிற கனம் பக்தவத்சலம் அவர் கள் இதற்கு நல்ல விளக்கம் தந்திருக்கிறார். மதத்திற்கு மாறுபடாமல் மனம் புண்படாமல் எழுதினால் குற்றம் இல்லை என்று சொல்லி இருக்கிறார். யாரிடத்தில் இந்த அதிகாரத்தை ஒப்படைத்திருக்கிறார்கள் என்பதைப் பார்க்க வேண்டும். அநேக போலீஸ் காவலர்கள் சுவறுகளில் எழுதப் பட்டவுடன் இது ஆபாசமானது, இது ஆபாசமானது அல்ல என்று பாகுபடுத்துவதற்கு முடியாத நிலையில் வழக்குத் தொடருவார்கள். அந்த வழக்கு சட்ட மன்றத்திற்குச் செல்லும் நேரத்தில் இது எப்படிப்பட்ட பலாத்காரத்தை தூண்டலாம் என்று வழக்கு அறிஞர்கள் வாதாடக் கூடும். "பார்ப்பனர்களே வெளியேறு" என்று எழுதி இருப்பதை திரு. சகஜாநந்தம் அவர்கள் குறிப்பிட்டார். அதை நான் ரசிக்கவில்லை, வரவேற்கவில்லை. அதற்கு விளக்கங்கள் தரப்பட வேண்டுமானால், இரண்டு

12 20 p.m.

விளக்கங்கள் கொடுக்கலாம். சட்ட மன்றத்தில் இரண்டு தரப்பிலும் பேசலாம். " பார்ப்பனர்களே வெளியேறு " என்று எழுதுவதற்கு காரணம் " பார்ப்பனர்கள் இந்நாட்டில் அக்கிரமம் செய்கிறவர்கள், அவர் அந்நியர், ஐயா, நீங்கள் வெளியேறுங்கள், வெளியே போய் விடுங்கள் " என்று அர்த்தம் கொடுத்து சொல்லலாம். ஆனால் மற்றொன்று அப்படி எழுதி இருப்பது தூண்டுதலை உண்டாக்குகிறது என்று சர்க்கார் தரப்பிலுள்ள வழக்கறிஞர் வாதாடலாம். மற்றும் " வெளியேறு " என்ற வார்த்தையை எப்படி "முடுக்காக இருக்கிறது பாருங்கள்" என்று சொல்லலாம். " வெளியேறுங்கள் " என்று எழுதாமல், " வெளியேறுகிறார்களா இல்லையா " என்று கேட்காமல் " வெளியேறு " என்று எழுதியிருப்பது " வெளியேறாவிட்டால் வெளியேற்றி விடுவோம் " என்ற உள் அர்த்தம் தொக்கி இருக்கிறது என்று இப்படியெல்லாம் வழக்கு மன்றத்தில் வழக்காடலாம். இந்த நிலையில் புதிய சட்டத்தை நிறைவேற்ற வேண்டிய அவசியம் என்ன?

பல அங்கத்தினர்கள் சொன்னார்கள் ; ஏராளமான மகஜர்கள் வந்தன என்று. ஆளும் கட்சிக்குத் தரப்படும் மகஜர்களையெல்லாம் அவர்கள் கவனித்தார்களா ? இப்பொழுதுள்ள ஆட்சியாளர்கள் இதை நன்றாக கவனிக்க வேண்டும். குளம் இல்லை என்று மகஜர் கொடுத்தால் அதை குப்பை தொட்டியில் போட்டு விடுகிறார்கள், எரு இல்லை என்றால் அதை எடுத்தும் பார்ப்பதில்லை, மற்றப் படி பாசன வசதி இல்லை என்று மகஜர் வந்தால் அதற்கு அக்கறை காட்டுவது இல்லை. ஆனால் இதற்கு மகஜர் வந்தவுடன் ஆட்சியாளர்கள் அதில் மிகுந்த அக்கறை எடுத்துக் கொண்டு வருவதற்கு அவர்களுடைய திறமையைக் கண்டு பாராட்டுகிறேன்.

இப்படி அச்சத்தின் காரணமாக இதைச் செய்து வருகிறார்கள். இப்பொழுது இருக்கிற ஐ.பி.சி. பிரிவின் கீழ், எழுதப்பட்டிருப்பதற்கு, எத்தனை வழக்குகள் தொடரப்பட்டிருக்கின்றன. யாரையும் இந்த வகையில் சிறைச்சாலைக்கு அனுப்பியிருக்கிறார்களா ? அதைத் தடுக்க ஏதாவது முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறார்களா ? இதைச் செய்யாததற்குக் காரணம் ஒன்றும் ஏற்படவில்லை என்பதுதான். இப்பொழுது எத்தனையோ எழுதப்படுகிறது. சில எழுத்துக்கள் சிலருக்குப் பிடிக்காமல் இருக்கலாம். எங்களுக்குப் பிடிக்கவில்லையே அதனால் தவறு, அது புண் படுத்தக்கூடியது என்று சொல்வது தவறு. பிடிக்காததெல்லாம் தவறு என்று சொல்லுகிற வாதம் தவறான வாதமாகும். பிடிக்காத வார்த்தைகள் அநேகம் வரத்தான் செய்யும்.

இப்பொழுது ஒன்றை மனதில் வைத்துக்கொள்ள வேண்டும். ஒரு பழைய தலைமுறை வேகமாக மறைந்து கொண்டும் புதிய தலைமுறை கருவிலே உருவாகிக் கொண்டும் வருகிறது இடைக் காலத்தில் இருக்கும் தலைமுறை பழைய விஷயத்தில் நம்பிக்கை வைப்பதற்கு அச்சப்பட்டுக் கொண்டிருக்கிறது. இடை காலத்தில் வாழும்போது பல்வேறு கருத்துக்கள் பல்வேறு முறையில் பிரசாரங்கள் நடைபெற்று வரும்போது நல்ல கருத்துக்கள் நிலைக்குமே தவிர மற்ற பழைய கருத்துக்கள் நிலைத்து நிற்காது.

பல அங்கத்தினர் ஒழுக்கம் வேண்டாமா என்பதைப்பற்றியெல்லாம் சொன்னார்கள். ஆனால் ஒழுக்கம் என்பதைப்பற்றி ஒன்றை நான் குறிப்பிட்டுக் கொள்வேன். ஒழுக்கம் வேண்டும் என்று சொல்லுகிறவர்கள் தான் ஒழுக்கத்தை விரும்புகிறவர்கள் என்றும், ஒழுக்கத்தை நிலைநாட்டுவதாக சொல்லுகிறவர்கள் அதுதான் முறை என்று சொல்லுகிறவர்கள் ஒழுக்கம் வேண்டாம் என்று சொல்லுகிறார்கள். அது தவறான ஜாதி என்பதை அவர்களே நினைத்துக் கொள்வார்கள். ஒழுக்கம் என்பதற்கு அவரவர்கள் கொடுக்கிற அபிப்பிராயம்தான். காலத்திற்குத் தக்கபடி அதற்குப் பொருள் மாறிக்கொண்டே வரும். சமீப காலத்தில் கனம் நிதி அமைச்சர் அவர்களுடைய கருத்து ஒன்றை பத்திரிகையில் படித்தேன். சிறு பெண்கள் இரட்டைப் பின்னலை பின்னிக் கொண்டிருந்தால் அதை தாம் ஆபாசமாகக் கருதியதாகவும், ஆனால் இப்பொழுது பார்த்தால் அது கூட அழகாக இருக்கிறது என்றும் கனம் நிதி அமைச்சர் அவர்கள்

17th February 1959] [Sri C. N. Annadurai]

சொன்னதாகப் பத்திரிகையில் படித்தேன். முதன் முதலில் க்ராப் வைத்துக் கொண்டால் அது ஆபாசம் என்றும், அதைப்போல் ஆங்கில பாஷை பேசிய காலத்தில் அது நீச பாஷை என்று கருதியதாகவும் சொன்னார்கள். நம்மிடையே பலர் ஆங்கில நடையுடை பாவனையை இப்பொழுது வைத்துக்கொண்டிருக்கிறார்கள். தமிழ் இலக்கியத்தில் வல்லுனரான கனம் வேலூர் அங்கத்தினர் பேசும்போது பழைய நாகரீகத்திற்கு முரணாக இருப்பதெல்லாம் ஒழுக்கக்கேடு என்று சொன்னார். அது ஒழுக்கக்கேடு இல்லை என்பதை உலகம் இன்று உணர்ந்திருக்கிறது. என்னைக் கேட்டால் நான் சொல்வேன், எது ஒழுக்கக்கேடு என்றால் சமுதாயத்தில் கஷ்டத்திலும் நஷ்டத்திலும் வெளியேயும் உள்ளேயும் தான் வாழ்ந்து மற்றவர்கள் வாழ்வைக் கெடுக்கக்கூடிய சில முறையில் யார் நடந்து கொள்ளுகிறார்களோ, அந்த முறையை யார் கையாண்டு கொண்டிருக்கிறார்களோ அவற்றைத்தான் ஒழுக்கக் குறைவு என்று கருதலாம். எனக்குப் பிடிக்கிறதெல்லாம் ஒழுக்கம் என்றும் எனக்குப் பிடிக்காததெல்லாம் ஒழுக்கக்கேடு என்றும் சொன்னால் அது எந்த அளவில் பொருத்தமாக இருக்க முடியும்?

பழைய கதைகளை எடுத்துச் சொல்லி அதில் இருக்கும் பழைய கருத்துக்கள் பகுத்தறிவுக்கு ஒத்ததாக இல்லை என்பதை மதிப்பிற்குரிய நண்பர் எ. கோவிந்தசாமி எடுத்துச் சொன்னார். திருவண்ணாமலை தீபத்தைப் பற்றியும் கண்ணப்ப நாயனார் புராணத்தைப்பற்றியும் குறிப்பிட்டார்கள். சர்தார் வேதரத்னம் அவர்களும் அதற்கு ஒரு விளக்கம் கொடுத்தார். அதையும் அவர் தயக்கமில்லாமல் தான் கொடுத்தார். அதைக் கேட்டு உண்மையிலேயே நான் மகிழ்ச்சி அடைந்தேன். திருவண்ணாமலை தீபத்தைப்பற்றி சரித்திரக்காரர்கள் சொல்லுகிற விளக்கம் போதாது என்று சர்தார் வேதரத்னம் உணர்ந்திருக்கிறார். சர்தார் வேதரத்னத்திற்குத் தோன்றியிருக்கலாம், திருவண்ணாமலை கார்த்திகை தீபத்தைப்பற்றி சொல்லும்போது புராணக் கருத்தைச் சொன்னால் இந்தக் காலத்தில் அதைக் கேட்டு கை கொட்டி நகைப்பார்கள் என்ற அச்சம் ஏற்பட்டிருக்கிறது. புராண கருத்தாகிய, பரமசிவனுடைய அடிமுடியைக் காண மகா விஷ்ணுவும் பிரம்மாவும் சென்றார்கள் என்ற கதையைச் சொன்னால் நம்ப மாட்டார்கள் என்றும் அந்தப் பக்கத்தில் இருக்கக்கூடியவர்கள் அதை ஏற்க மாட்டார்கள் என்றும் அதற்காக விஞ்ஞான விளக்கத்தை அவர் தேடித் தந்திருக்கிறார். அதற்கு அவருடைய திறமையை நான் பாராட்டுகிறேன். பழைய காலத்துக் கருத்துக்களை எடுத்துச் சொன்னால் அந்தக் காலத்தில் அது நிலைத்து நிற்கும். ஆனால் நாம் இப்பொழுது எந்த தலைமுறையில் வாழ்கிறோம் என்பதையும் கவனிக்கவேண்டும். ஆகவே புதிய கருத்துக்களைச் சொல்வதற்கு தாராளமாக இடம் அளிக்கவேண்டும். புதிய கருத்துக்களைச் சொல்லும்போது ஐ.பி.சி. யில் குறிப்பிட்டிருப்பது போல் அவைகள் பலாத்காரத்தைத் தூண்டுவதாக இருக்கிறது என்று பல வழக்குகளை தாராளமாகத் தொடரலாம். அதனைச் செய்தால் அப்படிப்பட்ட வழக்குகள் எப்படித் தடுக்கப்படும் என்பதை முன் கூட்டியே கையைக் கட்டுவதுபோல் இப்படிப்பட்ட சட்டம் போட்டு விட்டால் சுவற்றில் எழுதாமல் இருந்து விடுவார்கள் என்று நினைப்பதற்கு இல்லை. இப்படிப்பட்ட சட்டம் நிறைவேற்றப்பட்டவுடன் அதிகப்படியாக எழுதத்தான் கிளம்புவார்கள். சட்டம் போட்டு விட்டால் எழுத வேண்டும் என்று கருதுகிறவர்கள் எழுதாமல் விட்டு விடுவார்கள் என்பதில்லை. இதற்கு முன் நிறைவேற்றிய சட்டத்தைப் பார்த்தால் இது நன்றாகத் தெரியவரும். கொடியைக் கொளுத்தக் கூடாது என்று சட்டம் செய்தவுடன் அதிகப்படியான கொடிகளை கொளுத்தினார்கள் என்பதை நாம் பார்த்திருக்கிறோம். அது சர்க்காருக்கு அனுபவத்தில் தெரிந்திருக்கிறது. அதைப்போலவே . . .

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கொடி கொளுத்துகிற விஷயத்தைப் பற்றி எல்லோரும் தெரிந்து கொண்டிருக்கிறார்கள், சட்டம் போட்டதினால் என்ன ஆயிற்று என்று.

**Sri C. N. ANNADURAI** : நம் கனம் போலீஸ் அமைச்சர் அவர்கள் போலீஸ் பாஷையில் பேசியிருக்கிறார். நான் சொல்வது சட்டம்போட்டு விட்டால் அதை அடுத்து குற்றம் செய்யாமல் இருக்க வேண்டுமென்ற உணர்வு வரவேண்டும். அப்பொழுது தான் சட்டத்திற்கு நல்ல மதிபபு உண்டு, இருக்கும். அப்படிப்பட்ட சட்டத்தை இயற்றினால் தான் நாம செலவழிக்கும் நேரம் வீண் நேரமாகாது. அப்படி இல்லாமல் இப்படிப் பட்ட சட்டத்தை நிறைவேற்றுவதில் இவ்வளவு காலத்தை வீணாக செலவிட வேண்டியதில்லை. இப்படிப்பட்டச் சட்டத்தை ஒரு பக்கத்தில் கொண்டு வந்து விட்டு அதை மீறினால் அப்படி மீறுகிறவர்களை தண்டிப்போம் என்று இருந்தால் அதற்கு முடிவே இருக்காது. ஆகவே சட்டத்தை செய்யும் நேரத்தில் பெரும் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருக்கும் நீங்கள், எண்ணிக்கை பலம் பெற்ற நீங்கள், அனாவசியமான சட்டங்களை அவசர அவசரமான முறையில் கொண்டு வந்து எதிர் கட்சிக்காரர்களை மறைமுகமாக பாதிக்கக்கூடிய வகையில் சட்டத்தைக் கொண்டு வருவது ஆகாது. கொடியைக் கொளுத்துவதை தடுக்கச் சட்டம் செய்ததால் என்ன விளைவுகள் ஏற்பட்டன என்பதை நன்றாகத் தெரிந்து கொண்டிருக்கிறோம் என்று அவர்கள் சொன்னார்கள். நன்கு தெரிந்து கொண்டிருக்கிறோம். அவர்கள் சொன்னதைப்போல இவ்வளவு கடுமையான சட்டத்தைப் பிறப்பித்தும் கூட பலர் கொடி கொளுத்தினார்கள். கடுமையான தண்டனை விதிக்கப்படும் என்று சொல்லியும் கூட கொடியைக் கொளுத்த ஐயாயிரம் பேர் இருந்தனர் என்ற நிலைமை உலகத்திற்கு அறிவிக்கப்பட்டிருக்கிறது. அது பெருமை தேடிக் கொள்ளும் காரியம் அல்ல.

12-30 p.m.

இந்தச் சட்டம் தேவையற்றது என்பதனையும், நிறைவேறாது என்பதனையும், நோக்கம் நிறைவேறத்தக்க பிரச்சார முறைகளைக் கையாளுவார்களேயானால் எங்கள் கட்சியைப் பொறுத்த வரை முழு ஒத்துழைப்பையும் தர நாங்கள் தயாராக இருக்கிறோம் என்பதனையும் தெரிவித்துக்கொண்டு, கனம் போலீஸ் அமைச்சர் அவர்கள் இப்படிப்பட்ட சட்டத்தைக் கொண்டு வரத்தேவை இல்லை என்று பணிவன்போடு சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். பல நாடுகளில் இந்தச் சட்டம் இல்லையென்பதை ஏற்றுக்கொண்டார்கள். இந்த முறை இருக்கிறதா என்றால்—பல நாடுகளிலும் ஏழு, எட்டு ஆண்டு காலம் இருந்து விட்டு வந்தவரைப் போல் நான் சொல்லுவதற்கில்லை. நான் வெளி நாடுகளுக்குப் போனவன் இல்லை. பல்வேறு கிளர்ச்சிகளைப் பற்றி வருகிற விளம்பரத் தாள்கள், நம்முடைய பத்திரிகைகள் ஆகியவற்றைப் பார்க்கிறேன். இங்கு நடக்கும் கிளர்ச்சிகளுக்கு எள்ளளவும் குன்றாத அளவுக்கு அங்கும் நடைபெறுகின்றன. அமெரிக்க நாட்டுத் துணைத் தலைவர் மெக்சிகோ நாட்டிற்குப் போனபோது "வரக்கூடாது" என்று பல்வேறு வகையில் கிளர்ச்சி நடத்தினர். அன்றைய தினம்—சிறிது நாட்களுக்கு முன்பு ரஷ்ய நாட்டுப் பெரும் தலைவர் அமெரிக்க நாட்டுக்குப் போயிருந்தபோது அவரைப் பிடிக்காதவர்கள் தங்களுடைய அதிருப்தியைத் தெரிவிக்க பல்வேறு கிளர்ச்சிகளில் ஈடுபட்டார்கள். ஜனநாயகத்தில் ஐந்தாண்டு காலத்திற்கு ஒரு கட்சி ஆட்சி என்ற நிலைமை இருக்கிற காரணத்தினால், இடைக் காலத்தில் மக்கள் எதிர்க்கட்சிகள் தங்கள் அதிருப்தியைத் தெரிவிக்க வழி வகைகள் இருக்க வேண்டும். அந்த வழி வகை இருக்க வேண்டுமென்பதையும், அந்த வழி வகைகள் செலவு இல்லாத வகையில், எளிதான வகையில், எல்லாக் கட்சிகளுக்கும் ஏற்ற விதத்தில் இருக்க வேண்டுமென்பதையும் கருதித்தான் இந்த முறை நம் நாட்டில் மட்டுமின்றி வெளி நாடுகளிலும் கையாளப்படுகிறதே யல்லாமல் ஒழுக்கம் தவறியோ அல்லது வேறு காரணங்களினாலோ அல்ல. பல்வேறு கட்சியைச் சேர்ந்த சிறு பிள்ளைகள் என்று சொன்னார்கள். அவ்வாறு சிறு பிள்ளைகளாக இருந்தவர்கள் யார் யார் என்று எண்ணிப் பார்த்தேன். ரஷ்ய நாட்டில் பெரிய புரட்சியை நடத்திய லெனின் தன்னுடைய ஜோபியில் எப்பொழுதும் ஒரு கரித் துண்டை வைத்துக்கொண்டு சுவர் இருக்கின்ற இடத்தில் எல்லாம்

17th February 1959] [Sri C. N. Annadurai]

தான் காண விரும்பிய புரட்சியைப் பற்றிச் சுவற்றிலே எழுதினார் என்று ஏட்டிலே படித்திருக்கிறேன். லெனில் போன்ற பெரியவர்கள் எல்லாம் அந்தக் காரியத்தை அ சியலிலே கையாண்டு வந்திருக்கிறபோது "சுவற்றிலே எழுதுவது சிறு பிள்ளைத் தனமான காரியம்" என்று சொல்லுவதற்கு நீங்கள் ரொம்பப் பெரிய மனிதர்களாகி விட்டீர்களோ ? சுவற்றிலே எழுதுவது ஒன்றும் சிறு பிள்ளைத் தனம் அல்லது ஆபாசம் இல்லாமல் இருக்கவேண்டுமென்றால் பிரச்சார வழி வகைகளைச் செய்து கொள்ள வேண்டுமே தவிர, இந்த மாதிரிச் சட்டம் தேவையில்லை. ஆகவே இந்தச் சட்டத்திலே மிகுந்த கடுமையான முறைகளைப் புகுத்தி இருப்பதன் கா ணமாக எதிர்க்கட்சிகளின் பிரச்சாரம் தடைப்படும் என்ற எண்ணத்தில் கொண்டு வந்திருப்பதாகத் தெரிகிறது. ஆபாசம் ஒரு பக்கத்தில் இருக்க, அழகான தமிழை ஏற்றுக் கொள்ளுகிறார்களா என்றால் அதுவும் இல்லை. வேறு ஒரு நேரத்தில் பேசுகிற போது அடுக்கு மொழி பேசுகிறார்கள் என்று சொல்லுகிறீர்கள். திட்டமாக "நீங்கள் பேசாதீர்கள்" என்று சொல்லி விடுங்களேன். "நாங்கள் சக்தியுள்ளவர்களாக இருக்க நீங்கள் அரசியலில் இருக்காதீர்கள் ; நாங்கள் பிழைத்து இருக்க வேண்டுமானால் நீங்கள் பேசாதீர்கள் ; நாங்கள் ஆட்சியில் இருக்க நீங்கள் எழுதாதீர்கள் ;" என்று சொல்லி விட்டால் மிக சுமுகமான முறையில் முடிந்துவிடும். எங்களுக்கும் தொல்லை இருக்காது. ஜனநாயகத்தின் பேரால் கொண்டு வரப்படுகிற இந்தச் சட்டம் உண்மை ஜனநாயக உணர்ச்சியைப் பாழ்படுத்துவதாகும். கொடும்பாவி கட்டி இழுப்பது, அதைக் கொளுத்துவது கூடத் தவறு என்று சட்டத்தில் காட்டப்பட்டிருக்கும் இந்த நாட்டில் மழை பெய்யவில்லை என்றால் கூட கொடும்பாவி கட்டி இழுத்து அதைக் கொளுத்துகிறார்கள். எந்த நோக்கத்திற்காகச் (intention) செய்கிறார்கள் என்பதைத்தான் நாம் பார்க்க வேண்டுமே தவிர அந்தக் காரியமே கூடாது என்று சொல்வது சரியல்ல. வழக்குத் தொடரப்பட்டால் சட்ட நுணுக்கமறிந்த நம்முடைய போலீஸ் அமைச்சர் அவர்கள் நோக்கம் இன்னது என்று கூறி விளக்குவதைப் பொறுத்து யார் குற்றவாளி என்று தீர்மானிக்கலாம். அவரைப் போல் எல்லோரும் அதை எடுத்து விளக்குவதற்கேற்ற வசதி படைத்தவர்களா ? நல்ல நாவன்மை படைத்தவர்களா? நல்ல சொல் வன்மை படைத்தவர்களா ? ஒருவன் தன் கொள்கையை எழுதினால் அவன் மேல் வழக்குத் தொடர்ந்து நீ எழுதியது இன்ன முறையில் குற்றம், அதைப்பற்றி விளக்கிச் சொல் என்று கேட்டால் அவன் என்ன சொல்ல முடியும் ? அனைவருமா தொல்காப்பியத்தைப் படித்தவர்கள் ? அனைவருமா புறநானூறு, அகநானூறு கற்றவர்கள் ? அனைவருமா சட்ட நுணுக்கத்தை அறிந்திருக்கிறார்கள் ? ஆகவே அவர்கள் வழக்கறிஞர் துணையை நாட வேண்டியிருக்கிறது. அப்படி அவ களைப் பெரும் செலவுக்கு உள்ளாக்கினால் இந்த மாதிரிக் காரியங்களில் ஈடுபட மாட்டார்கள் என்று கருதுவது மறைமுகமாக எதிர்க் கட்சிகளின் பிரச்சாரத்தைத் தடுக்க முனைவதாகும். அடியோடு தடுக்கின்றீர்கள் என்று குற்றம் சாட்டவில்லை. ஜனநாயகத்தை நீங்கள் ஏற்றுக் கொண்டிருக்கிற வரையில் எதிர்க்கட்சிகளின் பி ச்சாரத்தை நீங்கள் தடுக்க முடியாது. தாராள மனப்பான்மையினால் நீங்கள் எதிர்க்கட்சிகளின் பிரச்சாரத்தைத் தடுக்காமல் இருக்கிறீர்கள் என்று அர்த்தமல்ல. ஜனநாயகம் என்ற பெயரில் இருக்கிற வரையில் நீங்கள் எங்கள் பிரச்சாரத்தைத் தடுக்க முடியாது. உங்களிடம் ஒரு "அயூப்கான்" தோன்றினால் தடுக்கலாம். ஒரு சர்வாதிகாரி தோன்றினால் தடுக்கலாம். அப்படித் தோன்றினால் பிரச்சாரம் நின்று வெடி குண்டு தோன்ற ஆரம்பிக்கும். ஆகவே ஜனநாயகத்தில் தங்களைத் தாங்களே காப்பாற்றிக் கொள்ள எதிர்க்கட்சிகளுக்கு உரிமை தருவதே தவிர, ஏதோ தர்ம சத்திரத்தை வைத்திருப்பது போலவும், அற நிலையப் பாதுகாப்பை வைத்திருப்பது போலவும் எதிர்க் கட்சிகளுக்கு உரிமையை நீங்கள் இரண்டு கரங்களாலும் வாரி வாரி வழங்குவதைப் போல நீங்கள் செய்கின்ற பாவனை வேடிக்கையாக இருக்கிறது. ஆகையால் ஜனநாயகத்திற்கு மறைமுகமாக ஊறு தேடுகின்ற இந்தச் சட்டத்தை உடனடியாகக் கைவிட வேண்டுமென்று போலீஸ் அமைச்சர் அவர்களைப் பணிவன்புடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஆபாசத்தைத் தடுக்க வேண்டுமென்பது அவருடைய நோக்கமாக
இருக்குமானால், அதைத் தடுக்க ஒரு இரண்டாண்டு காலம் அல்லது
ஐந்தாண்டு காலம் எல்லாக் கட்சிகளையும் கொண்ட ஒரு கூட்டணியை
வைத்துப் பரீட்சித்துப் பாருங்கள். அதற்குப் பிறகும் பலன் ஏற்படவில்லை
என்று கருதினால் "நாங்கள் சட்டம் கொண்டு வருகிறோம்" என்று
சொன்னால் ஒரு சமயம் கொஞ்சம் பாவனை நியாயமாவது கிடைக்கும். இப்
பொழுது பாவனை நியாயம் கூடக் கிடைக்காது. சாதாரணமாக இதைப்
பிரச்சாரத்தால் தடுக்க முடியும் என்று நான் நிச்சயமாக நம்புகிறேன்.

நம்முடைய போலீஸ் அமைச்சர் அவர்கள் வேறு எங்கோ பேசியதைப்
பார்த்தேன். ஆணும் பெண்ணும் சேர்ந்து படித்தால் ஆபாசம் என்று
கருதுகிறவர்கள் இருக்கிறார்கள். அது ஆபாசம் அல்ல; அதுதான் நாக
ரிகத்தின் சின்னம் என்று கருதுகிறவர்களும் இருக்கிறார்கள். ஆடவர்கள்
ஒரு பக்கத்திலும், பெண்கள் ஒரு பக்கத்திலும் உட்காருவதுதான் பண்பாடு
என்று கருதுகிறவர்களும் இருக்கிறார்கள். அல்ல, அல்ல. ஆடவர்கள்
பக்கத்தில் உட்காருவதால் ஆபாசம் ஏற்படாது என்று கருதுகிறவர்களும்—
இந்த மன்றத்தில் அல்ல, வெளியில்—இருக்கிறார்கள். எது ஆபாசம்?
எது அருவருக்கத்தக்கது? என்பது அவ வர்கள் ஒழுக்கத்திற்கு வைத்
திருக்கக்கூடிய "stand d" அளவுகோலைப் பொறுத்துத்தான் இருக்
கிறது. ரோம் நாட்டில் "காடோ" என்பவனுக்கு அதிகாரம் கொடுத்தார்
களாம். அதிகாரத்தை ஏற்றுக் கொண்ட அவன் கொடுத்த ஒழுக்கத்
திட்டத்தில் "தங்க நாணயத்தை வைத்திருக்கக்கூடாது" என்பது ஒன்று;
"தங்க நாணயத்தின் பளபளப்பில் மயங்கி மக்கள் பணத்தாசை பிடித்த
வர்களாக ஆகிவிடுவாராம். ஆகவே இரும்பில் நாணயம் இருக்க வேண்டும்.
அப்படி இருந்தால் அதைக் கண்டு மக்கள் அருவருப்பு கொண்டு பணத்
தாசையை விட்டு விடுவாகள்." பணத்தைப் பிடிக்காத ோம் நாட்டுப்
பெரிய தலைவன் இப்படி ஒரு திட்டத்தைக் கொண்டு வந்தான் என்று
நான் படித்திருக்கிறேன். ஒழுக்கத்தைக் காப்பாற்ற முயற்சித்தவர்கள்
எல்லாம் தோற்றுத்தான் போயிருக்கிறார்கள். ஆண்டவனால் அனுப்பப்
பட்டிருக்கிற திருத் தூதுவர்களைப் போலும், நீங்கள் இந்தத் தடவை ஒழுக்
கத்தைக் காப்பாற்றி விட்டால் ஒழுக்கம் இந்த நாட்டில் இன்னும் பத்
தாண்டுகளுக்கு அப்பழுக்கில்லாமல் இருக்குமென்றும் உங்களைப்பற்றி நீங்
கள் போட்டிருக்கிற அதிகக் கணக்கு காட்டுகின்றது. ஜனநாயகத்தில் உள்ள
வர்கள் அதிகக் கணக்குப் போட்டால் அது சர்வாதிகாரத்திற்குத்தான்
இழுத்துச் செல்லும். ஆகவே அதிகக் கணக்குப் போடாதீர்கள்; சர்வாதி
காரத்தை நோக்கிச் செல்லாதீர்கள். அளவறிந்து கணக்குப் போடுங்கள்;
திறன் அறிந்து சட்டத்தைக் கொண்டு வாருங்கள்; அவசியமறிந்து
மசோதாவைத் தயாரியுங்கள்.

சட்டத்தைப் போடாமலே சன்மார்க்கத்தின் மூலமாக இந்தக் காரியங்
களைச் செய்ய முடியும் என்று சர்தார் வேத த்தினம் அவர்கள் நம்பிக்கை
கொண்டிருப்பதைப் போல, நீங்களும் ஆழ்ந்த நம்பிக்கை பெற வேண்டும்.
ஆகையால்தான் இந்தச் சட்டம் தேவையில்லை என்பதை நான் என்னு
டைய கழகத்தின் சார்பில் பணிவன்போடு சொல்லிக் கொள்ள விரும்பு
கிறேன். இப்படிச் சொல்லுகின்ற கா ணத்தால், இந்தச் சட்டத்தில் இவ்
வளவு கடுமையான முறைகள் இருக்கின்ற காரணத்தால் எங்களுடைய
கழகத்தின் பி சா ம் தடைபடும் என்று ஒரு துளியும் பயப்படவில்லை.
நாங்கள் எந்த நே த்திலும் அப்படிப்பட்ட ஆபாசமான எழுத்துக்களை
எழுதியவர்கள் அல்ல. அருவருக்கத் தக்க விதத்திலே நாங்கள் காரியத்
தைச் செய்வதும் இல்லை. இது கனம் போலீஸ் அமைச்சர் அவர்களுக்கும்
தெரியும். மற்றவர்களுக்கும் தெரியும். யாரை எண்ணிக்கொண்டு இந்தச்
சட்டத்தைக் கொண்டு வருகிறார்கள் என்பதும் பல அங்கத்தினர்களுக்குத்
தெரியும். நான் இதைச் சொல்லுகின்றகா ணத்தினால் ஆபாசமே இல்லை
யென்று சொல்வதாக யாரும் கருதாதீர்கள். ஆனால் ஆபாசத்தைத்
தடுக்க வேறு பல வழிகள் இருக்கின்ற நே த்தில் நீங்கள் சட்டத்தைக்
கொண்டு வந்து வீணாக புதிய குற்றவாளிகளை உண்டாக்கி, ஜனநாயகத்
திற்கு உலை வைக்காதீர்கள்.

17th February 1959] [Sri C. N. Annadurai]

இதற்கு முன் பல பிரச்னைகளில் பல்வேறு கட்சிகளையும் கூட்டி வைத்து முடிவு எடுத்ததைப் போல், இந்த ஆபாசத்தைப் போக்குவதற்கான வழி முறைகளை ஆ ராய்வதற்காக என எலலாக் கட்சிகளையும் கூட்டி வைத்துப் பேசி இருக்கக் கூடாது ? கல்வித் திட்டத்தைப் பற்றிக் கலந்து பேசவில்லை லையா ? பஞ்சாயததுச் சட்டத்தைப் பற்றி எல்லோரும் கலந்து பேச வில்லையா ? அதைப போல் எல்லாக் கட்சித் தலைவர்களையும், உறுப்பினர் களையும் கூட்டி அவர்களோடு கலந்து ஆலோசித்து இதை எப்படி எபபடி நீக்கலாம் எனபதற்கான வழி வகைகளை வகுக்க ஆட்சியாளர்கள் எப போது முயற்சி எடுத்துக் கொண்டாரகள் ? எப்பொழுதாவது அதததகைய முயறசி எடுத்துக் கொண்ட நேரததில் நாஙகள அதறகுக குநதகமாக இருந்தோமா ? இனியும் அப்படிப்பட்ட முயற்சி எடுத்துக் கொள்ளப்படு மானால், நாங்கள் அதற்கு ஆதரவாக இருப்போம் என்ற உறுதியைத் தொிவித்துக்கொண்டு, இந்தச் சட்டத்தை வலியுறுத்தாமல் இருக்க வேண் டும என்று போலீஸ் அமைச்சர் அவர்களைப் பணிவன்போடு கேட்டுக் கொள்ளுகிறேன்.

* Sri V. K. RAMASWAMY MUDALIYAR : Mr. Speaker, I have not got much to say on this Bill except that it is a Bill with a laudable object. No doubt, obscene advertisements should be prevented. There should be some kind of protection. It is all true. But, on this account, the Government should not get themselves armed with powers, and try to absue those powers. That is the fear in the minds of certain sections of the Members of this House. We have got so many problems to tackle.

(The Deputy Speaker occupied the Chair)

Now, I am anxious to know whether such a Bill is at all necessary at this juncture. As I have already stated, obscene advertisements should be prevented. How far the Government will be able to achieve this object is to my mind rather doubtful. These things are done at the dead of night and in the early mornings. On many occasions, when I happen to come from my village to the City, I have myself seen such writings taking place at 1 a.m. and 2 a.m. Have we got the necessary machinery to prevent such things? That is my doubt. By introducing this Bill, the Government should not curb the rights of the Opposition parties if they want to make genuine advertisements with regard to their propaganda, and other things. The Government should try as far as possible to proceed with caution so far as such Bills are concerned.

As for clause 4 of the Bill, protection is sought to be given to the individual persons, and imprisonment, fines, etc., are provided. I do not know how far the Government are justified in coming forward to protect the individual's rights. So, my submission is that so far as section 4 is concerned, the Government should reconsider it and see whether it is necessary at all. I would request the Hon. Minister to try to have this Bill postponed if it is possible. If, however, they are very keen in introducing the Bill, they should see that the provisions of the Bill are not abused in favour of the ruling party. That is all my submission, Sir.

[17th February 1959

*THE HON. SRI M. BHAKTAVATSALAM: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா பற்றிப் பேசிய கனம் அங்கத்தினர் சின்னதுரை அவர்கள் இது மயக்கத்தை உண்டாக்கும் மசோதா என்று கூறினார்கள். அதைநான் ஏற்றுக்கொள்ளமுடியாது என்றாலும் இந்த மசோதா சில கனம் அங்கத்தினர்களுக்கு மயக்கத்தை ஏற்படுத்தியிருக்கிறது என்பதை நான் காணுகிறேன். ஆனால் இந்த மயக்கம் ஏதோ சில கனம் அங்கத்தினர்களுக்கு ஏற்பட்டிருக்கிறதே தவிர, நாட்டில் ஏற்படாது என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. கனம் அங்கத்தினர் கோதண்டராமன் அவர்கள் இந்த மசோதாவை வருணித்தார்கள். விகார மசோதா என்று சொன்னார்கள். சொல்வது சுலபம். ஆனால் இம்மாதிரி ஒரு மசோதா கொண்டு வந்திருக்கிறோம். இந்த மன்றத்தில் கொண்டு வந்திருக்கிறோம். இந்த மசோதாவின் மீது இந்த மன்றத்தில் நானும் சில வார்த்தைகள் சொல்லலாம். ஆனால அப்படிப்பட்ட வார்த்தையை நான் சொல்ல வேண்டுமென்று நினைத்தாலும் என் வாயில் வராது. சொன்னால் உடனே அதை நீங்கள "அன்பார்லிமெண்டரி" என்று சொல்வீர்கள். அதுவும் எனக்குத் தெரியும். இந்த மசோதாவின் மீது இந்த மன்றத்தில் ஓரளவு தான் பேச முடியும். அதற்குமேல் ஏதாவது கூறவேண்டுமென்று நினைத்தாலும் அச்சம் ஏற்படுகிறது. குறிப்பாக இந்த மசோதாவைக் கண்டித்து பேசியவர்களிடத்தில் இரண்டுவித மனப்பான்மையைக் காண்கிறோம். ஒன்று அச்சம். தங்களை எந்த விதத்தில் இந்த மசோதா பாதிக்குமோ, தங்களுடைய கட்சிக்கு என்ன பாதகம் ஏற்படுமோ என்கிற அச்சம். தாங்கள் செய்து வருகிற புரட்சியை, தாங்கள் பரப்பி வருகிற புதிய கருத்துக்களை இம்மசோதா பாதிக்கக் கூடாது என்கிற நோக்கத்தில் வெளியிடுகிற எதிர்ப்பு ஒருபுறம். மற்றொரு பக்கத்தில் இன்னொரு மனப்பான்மை. ஏதோ அரசாங்கம் கெட்ட எண்ணத்தோடு, யாரையோ, எந்தக் கட்சியையோ வீழ்த்துவதற்குக் கெட்ட எண்ணத்தோடு கொண்டு வந்திருக்கிறார்கள் என்ற தப்பான கருத்து அதற்கு அடிப்படையாக இருக்கிறது. இப்படி இரண்டுவித மனப்பான்மையில் எதிர்ப்பை வெளியிட்டிருக்கிறார்கள். இந்த மசோதாவைப் பொறுத்த வரையில் எல்லோரிடத்திலும் ஒரு பொதுமை காண முடிகிறது. அதாவது இந்த மசோதாவைக் கொண்டுவர வேண்டுமென்று அரசாங்கம் யோசித்தது. அதற்குக் காரணம் நம் நகரங்களின் அழகுகளைப் பாழ்படுத்தும் வகையில் சில சுவரொட்டிகள் ஒட்டப்படுகிறது. இதைத் தவிர்க்க வேண்டும் என்பது. அந்தச் சுவரொட்டிகள் ஆபாசமாகவும் இருக்கின்றன. திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அதை ஒப்புக்கொண்டார்கள். அதைப்பற்றி மகிழ்ச்சி அடைகிறேன். அதை எப்படித் தவிர்ப்பது என்பதில் தான் அவர்களுக்கும், அரசாங்கத்தில் உள்ளவர்களுக்கும் இடையேயுள்ள அபிப்பிராய பேதம். ஆபாசமான சுவரொட்டிகளுக்கு நாம் இடம் கொடுக்கக்கூடாது. அதுதான் இந்த மசோதாவின் கருத்து. அதோடு வேறு சில தடைகளும் விதிக்கப்பட்டிருக்கின்றன. அதாவது பலாத்காரத்தைத் தூண்டும் வகையில் செய்யக் கூடிய விளம்பரங்கள். இதையும் தடுக்க வேண்டுமென்பது அரசாங்கத்தின் நோக்கம். சிலருக்கு உடனே இதுபற்றி ஏன் ஆத்திரம் வருகிறதென்று எனக்குப் புரியவில்லை. இன்னும் சில அங்கத்தினர்கள் ஆபாசமான கருத்துக்கள் எழுதப்படுவதைத் தடுக்க இந்தச் சட்டம் அவசியமா, பிரசாரம் மூலமாகவே தடுத்து விடலாமே என்கிறார்கள். ஆபாசமான முறையில் செய்கிற பிரசாரம் வெற்றி அளிக்கும் என்று நாங்கள் நினைக்கவில்லை. மக்களுடைய கருத்தைத் திரட்ட முடியாது. மக்களுடைய அருவருப்பு உணர்ச்சி தான் அதிகமாகும். ஆனாலும் சமுதாய ஒழுக்கத்தை குலைக்கக் கூடிய வகையில் செய்யப்படுகிற பிரசாரத்தைத் தடுப்பது கூடாது என்று சொல்லலாமா? அதோடு இன்னொன்று ராணுவத்தைச் சேர்ந்தவர்களை போலீசை சேர்ந்தவர்களை தவறாக தூண்டக்கூடிய வகையில் விளம்பரம் செய்யக் கூடாது என்பதையும் நாம் ஒப்புக்கொள்ள வேண்டும். அப்படித் தூண்டுவதைத் தடுக்கக் கூடாது என்று யாரும் சொல்ல முடியாது. பழங்காலச் சரித்திரம் நன்றாகத் தெரியும். அதைத் தெரியாதவர்கள் வேண்டுமானால் திருப்பித் திருப்பிச் சொல்வார்கள். இந்தச் சட்டத்திலே ஆட்சேபகரமானது என்று தடுக்கப்படுகிற செயல்கள் என்ன என்ன? கொலை, அழிவு,

17th February 1959]    [Sri M. Bhaktavatsalam]

முற்றும் பலாத்காரத்தைச் சார்ந்த குற்றங்களைச் செய்யத் தூண்டுகிற சுவரொட்டிகள், இரண்டாவது ராணுவ போலீஸ் படையைத் தவறாக, கட்டுப்பாட்டை குலைக்கச் செய்யும் சுவரொட்டிகள்—இவைபிரசாரம் அல்ல, பேச்சு அல்ல. மற்றொன்று ஒரு குறிப்பிட்ட மக்கள் மீது பலாத்காரத்தைத் தூண்டக் கூடிய சுவரொட்டிகள் அல்லது கரியினால் எழுதப்படுபவை. மற்றொன்று மத விஷயங்களில் பிறர் மனம் புண்படக் கூடிய வகையில் இருக்கக் கூடிய சுவரொட்டிகள். . . இன்னொன்று ; " **which is grossly indecent, or is scurrilous or obscene or intended for blackmail** ". இது போதாது என்று சில கனம் அங்கத்தினர்கள் அபிப்பிராயப்பட்டார்கள். அவர்களை தீவிரமான அபிப்பிராயங்களைத்தெரிவித்தார்கள். "டெலிபெரேட்லி" என்ற வார்த்தையை நீக்கிவிட வேண்டும் என்று அவர்கள் சொன்னார்கள். அந்த ஷரத்து இன்னும் கடுமையாக இருக்க வேண்டும் என்று அவர்கள் சொன்னார்கள். அரசாங்கத்தின் சட்டத்தையோ கொள்கையையோ மாற்ற வேண்டுமென்ற நோக்கத்துடன் பிரசாரம் செய்யும் முறையில் குற்றம் குறைகள் கூறும் போஸ்டர்கள் இந்த ஆட்சேபணைக்கு உட்படாது. அவைகளுக்கு இதிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. சமூகத்திலுள்ள பழக்க வழக்கங்களையோ மத சம்பந்தமான பழக்க வழக்கங்களையோ மாற்ற வேண்டுமென்று சீரிய நோக்கத்துடன்—கெட்ட எண்ணத்துடன் இல்லாமல்—பிரசாரம் செய்யும் முறையில் உள்ள போஸ்டர்களும் இந்த ஆட்சேபணைக்கு உட்படாது. இவ்வளவு விதிவிலக்குகளும் அளித்திருக்கிறோம். " டெலிபெரேட்லி " என்ற வார்த்தை இருந்தால், குற்றவாளிகள் தப்பித்துக்கொள்வார்கள் என்று, தீவிர அபிப்பிராயம் தெரிவித்த கனம் அங்கத்தினர்கள் சொன்னார்கள். " ஒரு கையால் கொடுத்து மற்றொரு கையால் திரும்ப வாங்கிக்கொள்கிறீர்களே " என்று அவர்கள் சொன்னார்கள். தடுப்புச் சட்டம் முதலில் கடுமையாக இருக்கக்கூடாது. அதில் விலக்களிக்கும் அம்சங்கள் இருக்க வேண்டும்.

பழக்க வழக்கங்களை மாற்ற வேண்டுமென்று நல்லெண்ணத்துடன் பிரசாரம் செய்யும் வகையில் உள்ள சுவரொட்டிகள் மசோதாவில் குறிப்பிடப்பட்டுள்ள ஆட்சேபணைக்கு உட்படாது என்று விதித்திருக்கிறோம். அது நல்லெண்ணத்துடன் செய்யப்பட்டதா அல்லது கெட்ட எண்ணத்துடன் செய்யப்பட்டதா, அதில் குற்றம் இருக்கிறதா அல்லது குற்றம் இல்லையா என்று யார் சொல்வது என்றால், அதற்கு நீதிபதிகள் இருக்கிறார்கள். நமக்கெல்லாம் நீதி மன்றத்தில் நம்பிக்கை உண்டு. இந்த மசோதாவில் நீதிபதிகளுக்கு அதிகமான " டிஸ்க்ரிஷன் " கொடுத்திருக்கிறோம். நமக்கு வக்கீலே வேண்டாம். நமக்கு வக்கீல் இல்லாவிட்டாலும் நீதிபதிகள் நமக்கு சரியான நீதி வழங்குவார்கள். அந்த நம்பிக்கை எனக்கு உண்டு, இந்த அரசாங்கத்திற்கும் உண்டு ; அது கனம் அங்கத்தினர்கள் எல்லோருக்கும் இருக்க வேண்டும். நமக்கு வக்கீலே வேண்டாம் என்று நான் சொல்லும்போது வழக்கறிஞர்கள் கோபித்துக்கொள்ளக் கூடாது. வழக்கறிஞர்களே இல்லாமல் போனால்கூட குற்றவாளிக்கு நீதி மன்றத்தில் நீதி கிடைக்கும். நீதிபதிக்கு அந்தப் பொறுப்பு இருக்கிறது.

நாட்டு மக்களுடைய இன்றைய ஒழுக்கத்தை மாற்ற வேண்டும், அவர்களுக்கு உபதேசம் செய்ய வேண்டும் என்ற நோக்கத்துடன் இந்த மசோதா கொண்டுவரப் பட்டிருப்பதாக யாரும் நினைக்க வேண்டாம். அந்த நோக்கத்துடன் இந்த மசோதா கொண்டுவரப்படவில்லை. ஆட்சேபகரமான காரியங்களைத் தடுக்க வேண்டும் என்ற நோக்கத்துடன்தான் இது கொண்டு வரப்பட்டிருக்கிறது. அதுதான் மசோதாவின் முக்கிய நோக்கம். கட்சிகளின் பிரசாரத்தைத் தடுக்க வேண்டுமென்ற நோக்கத்துடனோ, எதிர்க் கட்சிகளை பலஹீனப்படுத்த வேண்டுமென்ற நோக்கத்துடனோ இது கொண்டு வரப்படவில்லை.

**Sri A. V. P. ASAITHAMBI** : ஆபாசத்தைத் தடுக்க வேண்டும் என்பது வரவேற்கத்தக்கது. ஆனால் கோவில்கள் போன்ற பொது இடங்களில் இருக்கும் பல சித்திரங்கள் ஆபாசமான முறையில் வரையப்பட்டிருக்கின்றனவே ! இந்த மசோதா சட்டமானால் அவைகளுக்கு ஆபத்து வருமா, வராதா என்று அறிய விரும்புகிறேன்.

[17th February 1959

*THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் எத்தனை கோயில்களுக்குச் சென்று அங்குள்ள சித்திரங்களைப் பார்த்திருக்கிறாரோ, எனக்குத் தெரியாது. கோயில்களில் ஆபாசமான சித்திரங்கள் ஏதாவது இருந்து, அவை எவை என்று எனக்கு கனம் அங்கத்தினரால் தெரிவிக்கப்பட்டு, அவை ஆபாசமானவை என்று எனக்கும் தோன்றினால், ஒரு சட்டமும் இல்லாமலேயே அவைகளை நான் மாற்றுவேன்.

SRI A. GOVINDASAMY : எல்லா கோவில் கோபுரங்களிலும் ஆபாசமான சித்திரங்கள் இருக்கின்றன ; எல்லாச் சித்திரங்களும் மோசமாக இருக்கின்றன. கனம் அமைச்சர் அவைகள் எல்லாவற்றையும் மாற்ற ஆரம்பித்தால் அவர் எங்கள் கட்சியில் சேர்ந்துவிட்டார் என்று ஜனங்கள் சொல்வார்கள். எனவே இந்த விஷயத்தில் அவர் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்று அவரிடம் சொல்லிக்கொள்கிறேன்.

*THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப் பற்றி எனக்குக் கவலை இல்லை. ஆபாசம் இருக்கிறது, ஆனால் அதைத் தடுப்பதற்கோ போக்குவதற்கோ சட்டம் அவசியமா என்று திராவிட முன்னேற்ற கழகத்தின் தலைவர் கூறினார். "சட்டத்தை இவ்வாறு அனுவசியமாகப் பயன்படுத்திக்கொள்ளாதீர்கள்" என்று அவர் எங்களுக்கு உபதேசம் சொன்னார். அந்த உபதேசத்தை நான் பொதுவாக ஏற்றுக்கொள்கிறேன். சட்டங்களை அனுவசியமாகக் கொண்டுவந்து மக்களுக்கு தொந்தரவுகள் கொடுக்கவேண்டும் என்ற எண்ணம் எங்களுக்கு இல்லை. ஆனால் அவசியமான புதிய சட்டங்களை இந்த அரசாங்கம் இயற்றிக்கொண்டுதான் இருக்கிறது.

சுவரொட்டிகள் ஒரு புறம் இருக்கட்டும். சுவரொட்டியில் ஏதோ ஒரு பூதத்தை கனம் அங்கத்தினர்கள் கண்டார்கள். இப்போது சில ஆபாசமான பத்திரிகைகள்—மஞ்சள் பத்திரிகைகள்—ராஜ்யத்தில் இருக்கின்றன. அவைகள் சம்பந்தமான சில கேள்விகள் கூட இந்த சபையில் போடப்பட்டன. சில பத்திரிகைகள் அவதூறுகவும், அக்கிரமமாகவும் எழுதுகின்றனவே, இதைத் தடுக்க ஏதாவது செய்ய வேண்டுமென்ற நோக்கம் அரசாங்கத்திற்கு உண்டா என்று திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் கூட என்னிடம் கூறியிருக்கிறார். அதை எப்படிச் செய்வது? எல்லாப் பத்திரிகைகளுக்கும் பத்திரிகை சுதந்திரம் இருக்கிறது. மஞ்சள் பத்திரிகைகளை தடுப்பதற்கான மசோதா தயாரிக்கப்பட்டு வருகிறது என்று அரசாங்கத்தின் சார்பாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. அந்த மசோதா வேண்டாம் என்று யாராவது சொல்வார்களா ? இந்த மன்றத்திலுள்ள கனம் அங்கத்தினர்கள் கூட மஞ்சள் பத்திரிகைகளினால் பாதிக்கப்படுகிறார்கள். இதை எவ்வாறு தடுப்பது ? இதற்காக, மஞ்சள் பத்திரிகை நடத்தக்கூடாது என்று நாம் பிரசாரம் செய்துகொண்டிருக்க முடியுமா ? மஞ்சள் பத்திரிகைகளைப் போல ஆபாச விளம்பரங்களும் வந்து கொண்டிருக்கின்றன என்பதை திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்கள் உட்பட எல்லோரும் ஒப்புக்கொள்வார்கள். ராஜ்யத்தில் ஆபாச விளம்பரங்கள் வருகின்றன என்றால், அது நமக்கு இழிவை—இழுக்கை—உண்டுபண்ணக்கூடியது. பார்ப்பதற்கு ஆபாசமாக இருக்கும் விளம்பரங்கள் எல்லோருடைய கண்களிலும் படும்படியான இடங்களில் ஏன் இருக்க வேண்டும் ? சினிமாவில் ஆபாசமான காட்சிகள் இருந்தால், அவைகளை, டிக்கெட் கொடுத்துப் பார்ப்பவர்கள் சினிமாக் கொட்டகைக்குள் பார்க்கட்டும். ஆபாசமான விளம்பரங்கள் தெருவில் நம் கண்களில் படுகின்றன. நம் கண்கள் ஏன் தெருவில் உள்ள ஆபாசமான விளம்பரங்களால் பாதிக்கப்பட வேண்டும் ? எது ஆபாசம் என்று கேட்கப்பட்டது. எதை ஆபாசம் என்று எல்லோரும் ஒப்புக்கொள்கிறார்களோ அதைத் தான் ஆபாசம் என்று நான் கருதுகிறேன். எதையாவது ஆபாசமானதல்ல என்று எல்லோரும் கருதினால், அதை ஆபாசமானது என்று நான் கருதமாட்டேன். "எது ஆபாசம்" என்று இங்கே நான் விளக்கமாகச் சொல்ல ஆரம்பித்தால், அது "அன்பார்லிமெண்டரி" ஆகிவிடும். ஆகவே நான் அவ்வாறு விளக்கமாகச் சொல்ல விரும்பவில்லை.

17th February 1959] [Sri M. Bhaktavatsalam]

" ஆபாசமான சுவரொட்டிகள் இருந்தால், எங்கள் கட்சிக்காரர்களைக் கூப்பிட்டுக் காண்பியுங்கள் " என்று திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் சொன்னார். இவ்வாறு செய்ய ஆரம்பித்தால். . .

**SRI C. N. ANNADURAI**: சுவரொட்டிகளில் எழுதப்பட்டுள்ள ஆபாசமான வார்த்தைகளை நீக்குவதற்குத் தொண்டர் படைவேண்டுமென்றால், நாங்கள் தொண்டர் படையினராக வருகிறோம் என்றுதான் நான் சொன்னேன்.

***THE HON. SRI M. BHAKTAVATSALAM**: ஆபாசமான சுவரொட்டிகள் இல்லாமல் செய்ய வேண்டுமானால், அதற்கு தொண்டர் படை இருப்பது போதாது. தொண்டர் படையைக் கொண்டே ஆபாசமான சுவரொட்டிகள் இல்லாமல் செய்துவிடலாம் என்று சொல்லமுடியாது. இருந்தாலும், ஆபாசமான சுவரொட்டிகள் இல்லாமல் செய்யும் விஷயத்தில் ஒத்துழைப்பை அளிக்க முன்வந்ததற்கு அவருக்கு என் பாராட்டுதலைத் தெரிவித்துக்கொள்கிறேன். சிலர் இரவில் சுவர்களில் ஆபாசமாக எழுதினால் மறுநாள் அதை அழிப்பதற்கு நாம் தொண்டர் படை வைத்திருக்க வேண்டும் என்னும் திட்டம் சரியல்ல. இதற்காக ஒரு தொண்டர் படையை வைத்துக்கொண்டு அந்தப் படையினருக்கு நாம் சாப்பாடு போடுவதா? (சிரிப்பு).

**SRI C. N. ANNADURAI**: நகரத்திலுள்ள குப்பை கூளங்களை நாட்டிலுள்ள பெரியவர்கள் ஒரு நாள் அகற்றுவதன் மூலம் சுத்தத்தின் அவசியத்தை மக்களுக்கு உணர்த்துகிறார்கள். அதே போல ஆபாசமாக எழுதப்பட்டுள்ளதை ஒரு நாள் தொண்டர் படை அழித்தால், ஆபாசமாக எழுதக்கூடாது என்ற உணர்ச்சி பிறருக்கு வரும் என்ற கருத்தில் நான் அவ்வாறு பேசினேன். நிரந்தரமாகத் தொண்டர் படை வைத்திருக்க வேண்டும் என்று நான் சொல்லவில்லை.

***THE HON. SRI M. BHAKTAVATSALAM**: தெருவில் இருக்கும் குப்பைகளை சில பெரியவர்கள் கூட அகற்றுகிறார்கள். அதைப் பார்க்கும் மக்கள் தெருவை அசுத்தம் செய்ய மாட்டார்களாதலால், " நியூஸென்ஸ்" சட்டமே வேண்டாம் என்றும், யாராவது நடுத் தெருவில் அசுத்தம் செய்தாலும் அப்போதைக்கப்போது சுத்தம் செய்துகொண்டிருக்கலாம் என்றும் சொன்னால், அதை நான் ஒப்புக்கொள்ள முடியாது. (சிரிப்பு).

திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர், அவருடைய கட்சிக்கும் அவருடைய கட்சி செய்துவரும் பிரசாரத்திற்கும் பாதகம் விளைவிக்கும் நோக்கத்துடன்தான் இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறதென்று சொன்னார். இதுதான் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. திராவிட முன்னேற்றக் கழகத்தையோ, அதன் பிரசாரத்தையோ நாங்கள் அவ்வளவு பெரிதாகக் கருதவில்லை. திராவிட முன்னேற்றக் கழகம் பேசுவதையும் மற்ற எதிர்க் கட்சிகள் பேசுவதையும் பற்றி நாங்கள் கவலைப்படவில்லை. நான் அடிக்கடி பல கூட்டங்களிலும் ஒன்று சொல்லி வருகிறேன். நான் சொல்வதைக் குறைவாகக் கொள்ளக்கூடாதென்று—கருதக்கூடாதென்று—எல்லோரையும் கேட்டுக்கொள்கிறேன். எங்களுக்கு பலமான எதிர்க் கட்சி இல்லை என்று பல கூட்டங்களிலும் சொல்லியிருக்கிறேன். எனவே திராவிட முன்னேற்றக் கழகத்தின் பிரசாரத்திற்கு நாங்கள் அஞ்சவில்லை. இதனால் எங்களை ஒன்றும் அசைக்க முடியாது, இவ்வாறு நாங்கள் சொன்னால் கூட திராவிட முன்னேற்றக் கழகத்தினருக்கு ஆத்திரமும் கோபமும் வருகிறது. எனவே நாங்கள் இது சம்பந்தமாக அதிகம் பேசாமல் இருக்கிறோம். ஆனால் நாங்கள் பேசாமல் இருந்தால், நாங்கள் பயந்துபோய் விட்டதாக அவர்கள் நினைக்கிறார்கள்.

1 p.m.

சென்ற பொதுத் தேர்தலின்போது திராவிட முன்னேற்றக் கழகம் வித விதமான சுவரொட்டிகளைத் தயாரித்திருந்தது. அவைகளில் வித விதமான அடுக்குமொழிகள் இருந்தன. அவைகளெல்லாம் இந்த

மசோதாவில் ஆட்சேபணைக்கு உட்படுத்தப்பட்டிருக்கின்றனவா ? ஆட்சேபகர மான விஷயங்களைக் குறிப்பிடும் ஷரத்தின் கீழ் அவைகள் வருகின்றனவா? ஒருக்காலும் வராது. . அதெல்லாம் இதில் வருகிறதா ? ஒருக்காலும் வராது. அப்படி வரும் என்று யாராவது சொல்வார்களா ? அடுக்கு மொழிகள் வராது. ஆபாசம்தான் வரும் அல்லது பலாத்காரத்தைத் தூண்டிவிடுவதுதான் வரும் (கைதட்டல்). ஆகவே அங்கத்தினர்கள் ஏன் இந்த மசோதாவைக் கண்டு அஞ்ச வேண்டும். ஒன்று சொல்லி கிறேன், எங்களுக்கு எதிர்கட்சிகள் மேல் வெறுப்பும் இல்லை, பயமும் இல்லை. அதையெல்லாம் ஒரு விளையாட்டாகத்தான் எடுத்துக் கொள் கிறோம். (கைதட்டல்). திராவிட முன்னேற்றக் கழகப் பிரசாரங்களை எல் லாம் நாங்கள் தமாஷாகத்தான் எடுத்துக் கொள்கிறோம். சட்டமன்றத்தில் இது உயர்வாக நடக்கிறது. வெளியில் உள்ளதைப் பற்றி சொல்கிறேன். வெளியில் பெரிய பிரசாரம் நடக்கிறதே, இதற்கு என்ன செய்வது என்று மறைமுகமாக ஒரு சட்டம் கொண்டு வந்து அதை அடக்க வேண்டுமென்ற எண்ணம் எங்களுக்கு இல்லை. அப்படி எதிர்க்கட்சிப் பிரசாரங்களைக் கண்டு பயப்படுவதற்கு, அரசாங்கத்தை நடத்துகிறவர்கள் அவ்வளவு பயித் தியக்காரர்கள் அல்ல. அடுத்தபடியாக, கனம் அங்கத்தினர் சின்னதுரை அவர்கள் சொன்னார்கள், தனிப் பட்ட வீடுகளில் உள்ள சுவற்றில் ஒட்டி னால் என்ன ? ஏன் ஒட்டக் கூடாது ? " பில் ஸ்டிக்கர்ஸ் வில் பி ப்ராஸிக்யூட்டட் " என்று எழுதியிருந்தால் அங்கு ஒட்டவில்லை, அப்படி எழுதப்படாத இடங்களில் ஒட்டினால் ஏன் அதை தடை செய்கிறீர்கள் என்று கேட்டார்கள். பெரிய பங்களாக்களில், பெரிய " காம்பவுண்ட் வால் " உள்ளவர்கள் தான் அப்படி போர்ட் போடுவார்கள். சாதாரண மக்கள் வசிக்கும் வீடுகளில், அவர்கள் பொங்கலுக்காக வெள்ளை அடித்திருப்பார் கள், அங்கு கரியால் எழுதுவதா என்று கேட்கிறேன். " தூங்குகிறவன் தொடையில் கயிறு திரிப்பது " என்று சொல்வார்களே, அதேபோல் பொது ஸ்தாபனம் அல்லவே, இன்னொருவர் வீடுதானே அங்கு என்ன வேண்டுமானாலும் எழுதலாம் என்று சொல்வது நியாயமல்ல. ஒருவரது வீட்டின் சுவரில் எழுதுவது என்றால் அவன் அனுமதி பெற வேண்டும். மத விஷயம் அல்லது அரசியல் பிரசாரம் செய்வது தடைபடுமா என்றால் தடைபடாது. ஹோர்டிங்ஸ்-ஐப் பற்றி சொன்னார்கள். அது, முனிசிபல் சட்டத்தில் கொண்டு வர வேண்டியது. அதுதான் பொறுக்குக் கமிட்டி யில் விவாதிக்கப்பட்டு முடிவு செய்யப்பட்டது. நகர சபைகளில் ஹோர் டிங்-குக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அதே மாதிரி வெளி ஊர்களி லும் அதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. மற்றொன்று சொன்னார் கள். இப்பொழுது சட்டம் இல்லையா ? என்று கோவிந்தசுவாமி அவர்கள் குறிப்பிட்டார்கள், திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்களும் குறிப்பிட்டார்கள். இப்பொழுது இருக்கிறது, சட்டம். அந்தப் பிரிவை மாற்றவேண்டுமென்று யாரும் சொல்லாததைக் கண்டு நான் திருப்தி படுகிறேன். இதற்கு ஒரு சட்டம் வேண்டுமென்பதை எல்லோரும் ஏற்றுக் கொள்கிறார்கள். இம்மாதிரி ஆபாசங்களை தடுப்பதற்குள்ள ஒரு சட்டம் வேண்டுமென்பதை எல்லோரும் ஒப்புக்கொள்கிறார்கள். அதை யாரும் ஆட்சேபிக்கவில்லை. ஆனால், ரோடுகளில், தெருக்களில் இப்படி நடப் பதைத் தடுக்க இதில் போதிய இடம் கொடுக்கப்படவில்லை. ஆகவே விரிவானதாகவே இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது. ஆனால் கோவிந்தசாமி அவர்கள் சொன்னார்கள், மற்ற ராஜ்யங்களில் செய்தார் களா ஏன் நமக்கு மாத்திரம் அவசியம் என்று கேட்டார்கள். மற்ற ராஜ்யங்களைப் பார்த்துத்தானா நாம் சட்டங்கள் செய்ய வேண்டும் ? மத்திய அரசாங்கத்தைப் பார்த்துக் கூட நாம் சட்டம் செய்ய வேண்டியதில்லை. நமக்கு எது அவசியம் என்று தோன்றுகிறதோ அதை நாம் செய் வேண்டும். மற்ற ராஜ்யங்களுக்கு எவ்வளவோ காரியங்களில் நாம் வழிகாட்டியாக இருக்கிறோம். மத்திய அரசாங்கத்திற்கு கூட நாம் வழி காட்டியிருக்கிறோம். நாம் செய்திருக்கும் அல்லது எடுத்திருக்கும் நட வடிக்கைகள் பற்றி, அதன் நகலை எங்களுக்கு அனுப்புங்கள் என்று மற்ற ராஜ்யங்களில் உள்ளவர்கள் நம்மிடம் கேட்கிறார்கள். மற்ற ராஜ்யங்களில் உள்ளவர்களை சந்திக்கும் போது நீங்கள் நல்ல சட்டம்

17th February 1959] [Sri M. Bhaktavatsalam]

செய்திருக்கிறீர்கள், அதன் நகல் எங்களுக்கு வேண்டும், அதை அனுப்புங்கள் என்று கேட்கிறார்கள். ஆகவே, நமது சென்னை ராஜ்யம் மற்ற ராஜ்யங்களுக்கு வழி காட்டியாக இருக்கிறது என்று சொன்னால் அது தவறு என்று கனம் அங்கத்தினர்கள் சொல்வது விந்தையாகத்தான் இருக்கிறது. இரண்டு விதமான அபிப்பிராயங்கள் சொல்லப்பட்டன. இந்தச் சட்டமே வேண்டாம், இதை விட்டு விடலாம் அல்லது தொண்டர் படையைச் சேர்த்து ஆபாசங்களை அழித்து விடலாம் என்று சொல்லப்பட்டது. அடுத்த படியாக, இந்தச் சட்டத்தை கடுமையானதாக ஆக்க வேண்டுமென்றும் சொல்லப்பட்டது. இந்த இரண்டும் வேண்டாம். ஒன்று, நான் மீண்டும் சொல்ல விரும்புகிறேன். எதிர்கட்சி பலமாக இருக்கிறது என்று நினைத்தால் கூட இம்மாதிரி ஒரு மசோதா கொண்டு வந்துதான் நிலையைச் சமாளிக்க வேண்டுமென்ற நிமித்தம் இல்லை. எதிர்க்கட்சிகளைப் பற்றியோ அல்லது அரசியலைப்பற்றியோ மனதில் ஒன்றுமே எண்ணவில்லை. உண்மையாகச் சொல்கிறேன், இந்த மசோதாவை தயாரிக்கும் நிலையில் இருந்தவர்களோ, என்னைப் பொறுத்த மட்டிலோ அல்லது மற்றவர்களைப் பொறுத்த மட்டிலோ இன்றையதினம் இங்கு வந்து இப்படி பேசுவதுதான் முதல் தடவையாக காதில் விழுகிறதே அல்லாமல் அப்படிப்பட்ட எண்ணம் கொஞ்சம் கூட இல்லை. ஏன் நாங்கள் பயப்பட வேண்டும் ? ஆபாசத்தை தவிர்ப்பதற்கு ஒரு மசோதா வருகிறது என்றால் ஏன் அதற்கு ஆட்சேபனை சொல்ல வேண்டும் ? எத்தனையோ சட்டங்கள் கொண்டு வந்து நிறைவேற்றுகிறோம். அப்படி சட்டங்கள் வேண்டியதில்லை என்றால், சர்தார் வேதரத்னம் பிள்ளை அவர்கள் சொன்னதுபோல், இந்த மன்றத்திற்கே அவசியமில்லையே ? இது, கட்சிக்கு அப்பாற்பட்டது. ஆபாச சுவரொட்டிகளை தயாரிப்பவர்கள் எந்தக் கட்சியையும் சேர்ந்தவர்கள் என்பதை நான் ஒப்புக்கொள்ளவில்லை. சட்டத்தை கடுமையாக்க வேண்டுமென்ற அபிப்பிராயம் இருந்தபோதிலும் இரண்டிற்கும் மத்தியில் அமைந்திருக்கக் கூடிய ஒரு மசோதாவைக் கொண்டு வந்திருக்கிறோம். எதிர்க்கட்சித் தலைவர் அவர்கள் ஒரு அச்சத்தை தெரிவித்தார்கள். அப்படிப்பட்டதொரு அச்சம், இந்தச் சட்டம் தவறுதலான முறையில் உபயோகிக்கப்படும் என்ற அச்சத்திற்கு கொஞ்சம் கூட இடமில்லை என்று சொல்லிக் கொண்டு இந்த மசோதாவை ஆதரிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனது வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : The question is—

"That the Madras Open Places (Prevention of Disfigurement) Bill, 1958 (L.C. Bill No. 8 of 1958), as passed by the Council, be taken into consideration."

The motion was put and declared carried.

(Mr. Speaker in the Chair.)

A poll was demanded and the House divided thus :

(வோட் எடுக்க ஆரம்பித்தவுடன் எதிர் தரப்பிலிருந்து ஒரு கனம் அங்கத்தினர் சபைக்குள் நுழைத்தார்.)

SRI T. KARIA GOUNDER : பாயிண்டு ஆப் ஆர்டர், ஸார், வோட் எடுக்க ஆரம்பித்த பிறகு சபைக்குள் அங்கத்தினர் நுழையலாமா ? எதிர்ப்பக்கத்தில் மூன்று கனம் அங்கத்தினர்கள் இப்பொழுதுதான் வந்தார்கள்.

MR. SPEAKER : இப்பொழுது வரக்கூடாது.

(ஸ்ரீ ஏ. கோவிந்தசாமி எழுந்திருந்தார்.)

SRI A. V. P. ASAITHAMBI : ஸார், அந்தப் பக்கத்திலிருந்து மட்டும் அங்கத்தினர் வரலாமா ? இப்பொழுது அந்தப் பக்கத்தில் ஒரு அங்கத்தினர் வந்திருக்கிறார்.

[17th February 1959

MR. SPEAKER : வோட் எடுக்கும்பொழுது, எந்த அங்கத்தினரும் சபைக்குள்ளே வரக்கூடாது. சாதாரணமாக கதவை மூடுவது வழக்கம். ஆனால் இப்பொழுது இச்சபையில் அம்மாதிரி செய்வதில்லை. ஆகவே, வோட் எடுக்க ஆரம்பித்த பிற்பாடு யாராவது அங்கத்தினர் சபைக்குள் வந்திருந்தால், அவர்கள் தயவு செய்து வெளியேற வேண்டுமென்றுகேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI A. V. P. ASAITHAMBI : கனம் அங்கத்தினர் டேனியலுக்கு முன்னால் இருப்பவர் இப்பொழுது வந்தவர்.

SRI T. KARIA GOUNDER : ஸ்ரீ ஆசைத்தம்பிக்கு பின்னால் இருப்பவர் இப்பொழுது தான் வந்தார்.

*Ayes.*

1 Sri B. Bhaktavatsalu Naidu.
2 ,, M. J. Jamal Moideen.
3 ,, M. Alagirisamy.
4 ,, P. Appavu.
5 ,, V. S. Arunachalam.
6 ,, A. E. Chandrasekhara Nayagar.
7 ,, N. P. M. Chinniah Kounder.
8 ,, A. Chinnasami.
9 ,, T. T. Daniel.
10 The Hon. Sri K. Kamaraj Nadar.
11 ,, M. Bhaktavatsalam.
12 ,, P. Kakkan.
13 Sri P. G. Karuthiruman.
14 ,, D. Dasarathan.
15 ,, N. Ekambara Mudali.
16 ,, T. P. Elumalai.
17 ,, G. Gomathi Sankara Dikshitar.
18 ,, P. Jayaraj.
19 ,, R. Kandasami.
20 ,, M. R. Kandaswami Mudaliyar.
21 ,, T. Karia Gounder.
22 ,, S. Khader Sheriff.
23 ,, V. K. Krishnamurthy.
24 ,, R. Krishnasami Naidu.
25 ,, P. Kuppusami.
26 ,, S. Lazar.
27 ,, T. Manavalan.
28 ,, K. Marappa Gounder.
29 ,, A. Mariappan.
30 ,, M. K. Mariappan.
31 The Hon. Sri V. Ramiah.
32 The Hon. Srimathi Lourdhammal Simon.
33 Srimathi T. N. Anandanayaki.
34 ,, Hemalatha Devi.
35 ,, Kamalambuja Ammal.
36 ,, Kolanthai Ammal.
37 ,, P. K. R. Lakshmikantham.
38 ,, A. S. Ponnammal.
39 ,, Rajathi Kunchithapatham.
40 Sri M. Muthuswamy Nayagar.
41 ,, S. Nagaraja Monigar.
42 ,, T. M. Nallaswami.
43 ,, K. P. Palaniswami.
44 ,, K. G. Palaniswamy Gounder.
45 ,, M. P. Periasami.
46 ,, K. Ponnian.
47 ,, A. Raja Gounder.
48 ,, M. Ramachandra Reddiar.
49 ,, S. Ramalinga Padayachi.
50 ,, K. L. Ramaswami.
51 ,, S. Sadasivam.
52 ,, S. C. Sadayappa Mudaliar.
53 ,, Sami Sahajananda.
54 ,, T. Sampath.
55 ,, S. Sangili.
56 ,, V. Sankaran.
57 ,, M. S. Selvarajan.
58 ,, T. Sivagnanam Pillai.
59 ,, M. K. Somasundaram.
60 ,, R. Srinivasa Iyer.
61 ,, T. K. Subbiah.
62 ,, S. Thangavelu.
63 ,, P. Urkavalan.
64 ,, A. Vedarathnam.
65 ,, V. Vedaiyan.
66 ,, A. Samuel Nadar.

*Noes.*

1 Sri P. S. Chinnadurai.
2 ,, A. R. Marimuthu.
3 ,, V. K. Ramaswamy Mudaliyar.
4 ,, T. S. Ramaswamy Pillai.
5 ,, C. N. Annadurai.
6 ,, A. Govindasamy.
7 ,, M. Kalyanasundaram.
8 ,, S. Pakkirisami Pillai.
9 ,, M. P. Subramaniam.
10 ,, K. Anbazhagan.
11 Sri N. K. Palanisami.
12 ,, K. R. Nallasivam.
13 Dr. Srimathi. Sathiyavanimuthu.
14 Sri A. V. P. Asaithambi.
15 ,, V. K. Kothandaraman.
16 ,, S. M. Annamalai.
17 ,, M. P. Sarathi.
18 ,, T. Ilasappan.
19 ,, V. Subbiah.
20 ,, A. Perumal.

